# KṢATRACŪḌĀMAṆI

# க்ஷத்ரசூடாமணி



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**
**மற்றும் ஆய்வு மையம்,**

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 526

श्रीः

श्री वादीभसिंहविरचितः

# क्षत्रचूडामणिः

வாதீபஸிம்ஹன் இயற்றிய

# க்ஷத்ரசூடாமணி

## பாகம் - I

பதிப்பாசிரியர்கள்:

ஸாஹித்ய சிரோமணி

S. இராஜலக்ஷ்மி, M.A., B.L.I.S.,

சம்ஸ்க்ருதபண்டிதர்

சரசுவதி மகால் நூலகம்

Dr. V. M. அனந்தநாராயணன், M.A., M. Phil., Ph. D.,

இணைப்பேராசிரியர் & தலைவர்,

சம்ஸ்கிருதத்துறை,

தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.






தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்.

2009

விலை : ரூ. 160-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | க்ஷத்ரசூடாமணி |
| பதிப்பாசிரியர்கள் | : | S. இராஜலக்ஷ்மி, & |
| | | Dr. V. M அனந்தநாராயணன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 526 |
| மொழி | : | சம்ஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2009 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : | 216 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | காப்பியம் |
| விலை | : | ரூ. 160-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச் செல்வமாகப் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூலகமாகவும். பன்மொழி நூற்களஞ்சியமாகவும், பன்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. இந்நூலகம் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிற நாட்டினரும் பயன்படுத்தி வருகின்ற ஓர் அரிய ஞான ஆலயமாகும்.

அறிவுக் கருவூலமாக பயன்பட்டுவரும் சரசுவதி மகால் நூலகத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்று அறிஞர்களைக் கொண்டு, அரிய சுவடிகளைப் பதிப்பித்து அச்சு நூலாக்கி மக்கட்கு பயன்படச் செய்தலாகும்.தமிழ், சம்ஸ்கிருதம், மராட்டி, தெலுங்கு ஆகிய மொழிகளைச் சார்ந்த நூல்களை வெளியிட்டு இந்திய இலக்கிய வளரச்சிக்கும், மொழி பரிமாற்றத்திற்கும் பெருந் தொண்டினைத் தொடர்ந்து ஆற்றி வருகின்றது. இதுவரை 522 புத்தகங்கள் வெளியிடப் பட்டுள்ளன. அவ்வகையில் சிறந்த சம்ஸ்கிருத மொழிக் காவியமான **க்ஷத்ரசூடாமணி** எனும் நூல் தற்போது வெளிவருகிறது. இச்சுவடி தமிழ் மொழிபெயர்ப்புடன் கூடிய ஒரு அரிய சுவடியாகும். இந்நூல் இந்நூலக சுவடி எண். 857ல் இடம்பெற்றுள்ளது.

பிற்காலத்தில் தமிழில் தோன்றிய சீவகசிந்தாமணி என்ற காப்பிய நூலுக்கு அடிப்படையாக இந்த காவியம் விளங்கியது என சைனர் கருதுவதாக தமிழ்த்தாத்தா உ. வே. சா. அவர்கள் கூறுகிறார்கள். ஜீவந்தரன் அல்லது சீவகன் என்று அழைக்கப்பட்ட காப்பியத் தலைவனின் சரிதத்தைச் சுருக்கமாகக் கூறுகிறது. இக்காவியத்தில்

மன்னர்களின் அறவழிச் செயல்பாடுகள், அமைச்சர்களின் கடமைகள், குலமாதர்களின் இலக்கணங்கள், இல்லறத்தின் இயல்பு, துறவறத்தின் மேன்மை, முன்வினைப்பயன், முயற்சியின் பெருமை, நன்றி மறத்தலின் தீமை இன்னும் சமதாயத்திற்கு பயனுறும் வண்ணம் என்றும் நிலைத்து நிற்கும் விழுமியக் கருத்துகளும் அறிவுரைகளும் நிறைந்து காணப்படுகின்றன. இலக்கியத் திறத்தானும், கதை அமைப்பானும் தமிழ்நூலும், சம்ஸ்கிருத நூலும் ஒத்திருக்கின்றனவா மாறுபடுகின்றனவா என்பதை இந்த பதிப்பு இனிது உணர்த்தும். இலக்கிய ஆர்வலர்களுக்கு இந்நூல் பயன்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இந்த நூலினைச் சிறந்த முறையில் பதிப்பித்துள்ள இந்நூலக சம்ஸ்கிருதப் பண்டிதர் திருமதி எஸ். இராஜலெட்சுமி மற்றும் திருச்சி தேசியக்கல்லூரி, சமஸ்கிருதப் பிரிவில் பணிபுரியும் V. M. அனந்தநாராயணன் அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர கணினி பிரிவில் பணிபுரியும் அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**எம். எஸ். சண்முகம்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
22 - 5 -2009

# முன்னுரை

சமணத் துறவிகள் இந்திய இலக்கியத்தைச் செழுமைப்படுத்தியவர்கள். ஸம்ஸ்கிருதம், தமிழ், கன்னடம், பிராகிருதம், அபப்ரம்சம், பழைய ராஜஸ்தானி, பழைய குஜராத்தி, அர்த்தமாகதி போன்ற மொழிகளில் அவர்கள் சமணமதம் சார்ந்த இலக்கியங்களை இயற்றினர். இவை துறவிகளுக்கு மட்டுமல்லாது இல்லற வாழ்வில் ஈடுபடுவோர்க்கும் அறத்தினை உரைப்பவை. ஊழ்வினையும் மறுபிறப்பும் மனிதப்பிறவியை அச்சுறுத்தும்போது, ஒழுக்கமான வாழ்வே மனிதனை உய்விக்கும். பட்டியலிடப்பட்ட தீச்செயல்களும் தூற்றப்படும் செயல்களும் சமணமதத்தை ஒரு பண்பட்ட மதமாக நமக்குக் காட்டுகிறது. ஈடுபாடுமிக்க, அறம் பொருந்திய காவியத்தலைவர்கள் அவ்வறத்தைப் பின்பற்ற எத்துனைத் துயர்களை எதிர்கொள்ள வேண்டியிருந்தது, என்பதைப் பல அறம் சார்ந்த கதைகள் வாயிலாக இந்நூல்கள் வெளிப்படுத்துகின்றன.

துறவறம் மேற்கொண்டு வீடுபேறு பெறும் முயற்சியில் காப்பியத்தலைவன் துயருறுங்கால், அது அவனது ஊழ்வினைப் பயனால் விளைந்தது, அத்தகைய தீச்செயலை, அக்கதையைப் படிப்பவன் செய்யக்கூடாது என்றும், காப்பியத்தலைவன் இன்புறுங்கால், அத்தகைய பேரின்பம் அறச்செயல்களால் நிகழ்ந்தது, அத்தகைய அறத்தில் தாமும் ஈடுபாடு கொள்ளவேண்டும் என்ற கருத்தையும் உணர்த்துவதாக, கதைகள் அமைக்கப்பட்டுள்ளன.

சமண இலக்கியத்தின் பிற்கால வளர்ச்சி, அதற்கு முன் காணப்பட்ட இலக்கியங்களை விதைகளாகக் கொண்டும், அதன் வாயிலாகப் பெறப்படும் அறத்தைச் சார்ந்ததாகவும், அவ்வறத்தின் வாயிலாக வலியுறுத்தப்படும் மேம்பாட்டையும் பண்பாட்டையும் அடியொற்றியதாக அமைந்தது.

**முதல் நூல்கள் :**

முதலாவதாக அமைந்த 63 சலாகா புருஷர்கள்* வாழ்க்கை வரலாறு, அவர்களது அமாநுஷ்யமான செயல்களைக் கொண்ட கதைகளின் வாயிலாக அறத்தை உரைப்பது.

இரண்டாவதாக, 24 தீர்த்தங்கரர்களின் வாழ்க்கை வரலாறு, அவர்களது வெவ்வேறு பிறவிகள், அவர்களின் சமகாலத்தவர்களின் கதைகள்.

மூன்றாவதாக, விண்ணுலகம் மற்றும் சமணமதம் சார்ந்த அல்லது சமணமதத்தில் சென்று சேரும் காதல் கதைகள்.

நான்காவதாக, முழுவதும் வரலாறு என்று கூற முடியாத, அதே நேரத்தில் வரலாற்று நாயகர்களின் வாழ்வியல் முறைகளையும், வாழ்க்கையையும் விளக்கும் பிரபந்தங்கள்.

கடைசியாக, அறத்தினை வலியுறுத்தும் கதைகள். அக்கதைகளையே ஆசிரியர்கள் தங்கள் கோட்பாடுகளை விளக்கும் எடுத்துக்காட்டுக்களாகக் கொண்டிருந்தனர்.

இவற்றுள் இரண்டாவது வகைக்கும் மூன்றாவது வகைக்கும் இடையே செய்யுள், உரைநடை, செய்யுளும் உரைநடையும் கலந்த சம்பூ எனப்படும் பிரிவு,

---

* சலாகா புருஷர்கள் - 63 பேர். 24 சமணர்கள், 13 சக்ரவர்த்திகள், 9 வாசுதேவர்கள், 9 பாலதேவர்கள், 9 பாதி வாசுதேவர்கள்

என்பனவற்றை அடக்கிவிடலாம். இவை பல்வேறு மொழிகளில் இயற்றப்பட்டவையாகவும் இருக்கலாம். வராங்கன், ஜீவந்தரன், யசோதரன், நாககுமாரன், ஸ்ரீபாலன் போன்ற காப்பியத் தலைவர்களின் வாழ்க்கைக் கதைகளும், குடும்ப வாழ்வில் ஈடுபட்டுள்ள ஆடவர்கள் மற்றும் இல்லத்தரசிகள் மேற்கொள்ளும் நோன்புகள் பற்றிய கதைகளும், துறவு மேற்கொண்ட பிரபலமானவர்களின் வரலாறுகளும், நன்மையை நிலைநிறுத்தித் தீமையை அழிக்கப் பழிவாங்கும் செயலில் இறங்கி, நல்லெண்ணங்களைத் தோற்றுவிக்கும் கதைகளும் இவற்றுள் அடங்கும். சிலவற்றுள், காப்பிய மாந்தர்கள் முன்குறிப்பிட்ட மூல இலக்கிய நூல்களினின்று எடுக்கப்பட்டவர்களாக விளங்குவர். தேவருலகத்தைச் சேர்ந்தவர் காப்பிய மாந்தர்களுடன் கலந்து, தலைவனுக்கு வெற்றி சேர்ப்பர். கதைகளின் கரு, காப்பியத் தலைவனின் ஊழ்வினை, அறம், மறுபிறப்பு, பிறவிப்பயன் ஆகியவற்றைச் சுற்றியே அமையும். ஏனெனில் எவரும் இவற்றை மீறிச் செயலில் இறங்கிவிட முடியாது. இந்நூலில் இராஜ தருமங்களும், மந்திரி கடமைகளும், குலமாதர் இலக்ஷணங்களும், இல்லற இயல்பும், துறவறமேன்மையும், வினையின் வலிமையும், முயற்சியின் பெருமையும், நன்றி மறத்தலின் தீமையும் என பல விஷயங்கள் படிப்பவரின் மனம் இன்புறுமாறு சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன.

அறத்தையும், ஒழுக்கத்தையும் வலியுறுத்த எங்கெல்லாம் வாய்ப்புக் கிடைக்கிறதோ அங்கெல்லாம் ஆசிரியர்கள் அவற்றை உட்கதைகள் வாயிலாக உணர்த்துவர். இவ்வாறு கதைக்கு உள்ளே கதை செல்லும் பாங்கு ஸம்ஸ்கிருத இலக்கியத்தில், குறிப்பாகப்* பாணபட்டரின்

* குணாட்யரின் பிருகத்கதையின் வழிவந்த கதாஸரித்ஸாகரம் ப்ருஹத்கதா மஞ்சரீ, ப்ருஹத்கதா சுலோக சங்கிரகம்.

காதம்பரீ என்ற உரைநடைக் காவியத்திலும், விஷ்ணுசர்மா இயற்றிய பஞ்சதந்திரக் கதைகளிலும் காணப்படுகின்றன. துறவறம் என்பதையே குறிக்கோளாகக் காட்டும் இச்சமணக்கதைத் தலைவர்கள், அவர்கள் அரசராயினும் முடிவில் துறவை மேற்கொண்டு இவ்வுலக வாழ்வை நீத்தனர் என்றே காட்டப்படுகின்றனர்.

**சீவகன் கதைகள் :**

ஸம்ஸ்க்ருதம், தமிழ், பிராகிருதம், கன்னடம் போன்ற மொழிகளில் சீவகனின் கதைகள் காணப்படுகின்றன. தென்னகத்தில் சமணமதம் வேரூன்றத் தொடங்கிய நாள் முதல், சமணத் துறவிகள் முதன்முதலாக மக்களிடம் தங்கள் கொள்கைகளைப் பரப்ப விரும்பி, அவர்களது மொழியிலேயே தங்கள் கோட்பாடுகளை இயற்றினர். ஸம்ஸ்க்ருத மொழியின் வழக்கு மொழியாக விளங்கிய பிராகிருதம், அர்த்தமாகதி, அபப்ரம்தசம் போன்ற மொழிகளில் இயற்றப்பட்ட சமணநூல்கள் தென்னாட்டு மக்களைச் சென்றடைய கன்னடத்திலும், தமிழிலும் இயற்றப்பட்டன. சமணம் வலுப்பெற்ற பின்னரே அதன் கோட்பாடுகளை விளக்க ஸம்ஸ்க்ருத மொழி நூல்கள் இயற்றப்பட்டன என்பது அறிஞர் கருத்து. அவ்வாறு சீவகனின் கதை கூறவந்த நூல்கள் பன்னிரெண்டு.

**1. ஜீவந்தர சரிதம் :**

வீரசேனனின் மாணாக்கர் ஜினசேனன். இவர் தமது குருவின் 'ஜயதவளா' என்னும் விளக்கவுரையை கி. பி. 837இல் நிறைவு செய்தார். இருப்பினும் தனது நூலான மஹாபுராணத்தை முடிக்காமலேயே இருந்துவிட்டார். இதற்கு காரணம் இவரது அகால மரணமாக இருக்கலாம். பின்னர் அவரது மாணாக்கர் குணபத்திரர் சிறிது காலம்

கழித்து, அதனை நிறைவு செய்தார். அவரது சீடர் உலோகசேனர் என்பார் அதனை முறைப்படி உலகுக்கு உணர்த்தினார். கி. பி. 897இல் ராஷ்டிரகூட மன்னன் இரண்டாவது கிருஷ்ணன் அகாலவர்ஷனின் காலத்தில் இது நிகழ்ந்தது. மஹாபுராணத்தின் 75 ஆவது பர்வாவில் உள்ள 188 முதல் 691ஆவது செய்யுட்களில் ஜீவந்தரனின் கதையை குணபத்திரர் இயற்றியுள்ளார்.

சீவகன் தனது முற்பிறவியில் பதினாறு நாட்களுக்கு அன்னப் பறவையின் பேடையொன்றை அதன் தாயிடமிருந்து பிரித்ததால், இப்பிறவியில் 16 வருடங்கள் அவனது தாயைப் பிரிந்து வாழும் நிலை ஏற்பட்டது என்று கூறி, அத்தகைய பாவச்செயலைச் செய்யாதிருக்குமாறு மக்களை அவர் கேட்டுக் கொள்கிறார்.

**2. ஜீவந்தர சரியு :**

மேற்கூறிய புராணத்தை அடியொற்றி அபப்ரம்ச மொழியில் எழுந்த நூல் இது. இதனை இயற்றியவர் புஷ்பதந்தர். இவரது காலம் ராஷ்டிர கூட அரசன் மூன்றாவது கிருஷ்ணன் ஆண்ட கி. பி. 965.

**3. கத்ய சிந்தாமணி :**

சிறந்த உரைநடை நூலாக விளங்கும் கத்ய சிந்தாமணி, வாதீபஸிம்ஹனால் இயற்றப்பட்டது. இந்நூல் முதலில் 15 செய்யுட்களும், பிறகு அங்கு மிங்குமாகக் காணப்படும் சில செய்யுட்களும் கடைசியி ˙ உள்ள அனுஷ்ட்டுப் யாப்பில் அமைந்த இரண்டு செய்யுள்களையும் தவிர, வேறெங்கும் செய்யுட்கள் காணப்படாத உரைநடை பகுதியாகும். பதினொன்று இலம்பகங்களை கொண்ட இந்நூலின் ஒவ்வொரு இலம்பகத்தின் முடிவிலும் அதற்கான பெயர்

அறிவிக்கப்பட்டுள்ளது. ஆசிரியரின் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நூலின் கடைசியிலுள்ள செய்யுள்களிலிருந்துதான், 'ஓடையேதேவ' என்ற பெயரை உடைய வாதீபஸிம்ஹனால் இந்த நூல் இயற்றப்பட்டது என்ற செய்தி கிடைக்கிறது. ஆகவே வாதீபஸிம்ஹன் என்ற பெயர் ஆசிரியரின் பட்டப்பெயராக இருக்கலாம் என்று இந்நூலின் சுவடிகளைச் சோதித்து வெளியிட்ட T. S. குப்புஸ்வாமி சாஸ்த்திரியும் S. சுப்பிரமணிய சாஸ்த்திரியும் கூறுகின்றனர். 1902 ஆம் ஆண்டில் சென்னையிலிருந்து இந்நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஸமந்தபத்ரன் புஷ்பதந்தன் என்ற இரு முனிவர்களை இவ்வாசிரியன் போற்றுகிறான். அவர்களன்றி, தான் வாதீபஸிம்மன் என்ற பெயரைப் பெற்றிருக்க முடியாது என்றும் கூறுகிறான். ஆகவே இவ்விருவரும் வாதீபஸிம்மனின் ஆசிரியர்களாக இருந்திருக்கக்கூடும்.

**4. ஜீவந்தர சம்பூ :**

ஹரிசந்த்ர கவி எழுதிய இந்நூல் சம்பூஜீவந்தரம் என்றும் அழைக்கப்படுகிறது. உரைநடையும் செய்யுளும் கலந்த சம்பூ வகையைச் சேர்ந்த இந்நூல் பதினொன்று இலம்பகங்களில் ஜீவகனின் சரிதத்தைக் கூறுகிறது.

**5. ஜீவந்தர சரிதம் :**

சுபசந்திரன் இயற்றிய இந்நூல் பதிமூன்று இலம்பகங்களைக் கொண்டது. விக்ரம ஸம்வத்ஸரம் 1603 இல் எழுதி முடிக்கப்பட்டதாக பிரசஸ்தி ஸங்கிரகம் என்னும் நூல் கூறுகிறது.

**6. சீவக சிந்தாமணி :**

திருத்தக்கதேவரால் இயற்றப்பட்ட தமிழ்நூல். 13 இலம்பகங்களில் உள்ள இந்நூலின் உரையாசிரியர்

நச்சினார்க்கினியர். உ. வே. சா அவர்கள் இந்நூலைப் பதிப்பித்துள்ளார்கள்.

**7. ஜீவந்தர சரிதம் :**

இந்நூல் 'ரைது' என்பவரால் இயற்றப்பட்டுள்ளது. இது 'அபப்ரம்சம்' என்னும் பாமர மக்களின் மொழியில் இயற்றப்பட்டுள்ளது. இதன் காலம் கி. பி. 1439.

**8. ஜீவந்தர சரிதே :**

இந்நூல் கன்னட மொழியில் 'பாஸ்கர' என்பவரால் 18 சர்கங்களில் இயற்றப்பட்டுள்ளது. சக வருஷம் 1345 (1424 AD.) க்ரோதி வருடம், பால்குன (பங்குனி) மாதத்தில் இந்நூல் இயற்றி முடிக்கப்பட்டதாக, இதன் சுவடியின் வாயிலாக அறிய முடிகிறது.

**9. ஜீவந்தர ஸாங்கத்யம் :**

இந்நூல் ஸாங்கத்ய என்ற யாப்பிலமைந்த 20 சர்கங்களைக் கொண்ட நூல் தேரகநாம்பி பொம்மராசன் என்பவர் இதன் ஆசிரியர். இந்நூலில் 1449 செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. இவர் வாதீபஸிம்ஹ நேமிசந்த்ராயர் என்பவரின் புதல்வர். இந்த வாதீபஸிம்மர் ப்ரௌடராயரின் அவையில் பங்கேற்று வாதத்தில் வென்றவர். இந்நூல் கி. பி. 1485ல் இயற்றப்பட்டது. இவரது மற்றொரு படைப்பு, ஸனத்குமார சரிதம் என்பதாகும்.

**10. ஜீவந்தர ஷட்பதீ :**

இந்நூல் கோடீஸ்வர என்பவரால் இயற்றப்பட்ட து. பாமினி ஷட்பதீ என்ற யாப்பில் செய்யுட்கள் அமைக்கப்பட்டுள்ளது. இந்நூல் முழுமையாக கிடைக்கவில்லை. 118 செய்யுட்கள் மட்டுமே

கிடைத்துள்ளன. இந்த ஆசிரியர் கி. பி. 1500ல் வாழ்ந்தவர். துளுவ நாட்டில் உள்ள பயிதூரில் இவரது தந்தை தம்மணன் படைத்தலைவராக விளங்கினார்.

11. கன்னட மொழியிலமைந்துள்ள மற்றொரு ஜீவந்தர சரிதம் பிரம்ம கவி என்பவரால் ஸாங்கத்ய யாப்பில் எழுதப்பட்டுள்ளது.

12. ஜீவந்தர நாடகம் என்ற ஒரு நாடக நூல் ஹரிச்சந்திரன் என்பவரால் எழுதப்பட்டது என்று குறிப்பு இருந்த போதிலும், இந்நூல் இன்றுவரை எவருக்கும் புலப்பட வில்லை.

**சமணர்களின் நூல்கள் :**

ஜைன மதத்தின் முதல் நூல்கள் யாவும் ப்ராகிருத மொழியிலேயே (अर्धमागधि) இயற்றப்பெற்றுள்ளன. அதன் பின்னர் இயற்றப்பெற்ற நூல்கள் யாவும் சம்ஸ்கிருத மொழியிலேயே இயற்றப்பெற்றன. முதன் முதல் எழுந்த சம்ஸ்கிருத நூல் கி. பி. முதலாம் நூற்றாண்டில் உமாஸ்வாதி என்பவரால் இயற்றப் பெற்ற தத்வார்த்த சூத்திரம் என்பதாகும். இந்நூல் தத்வார்தாதிகமா என்ற பெயராலும் அழைக்கப்படுகிறது. இந்த நூலுக்குப் பல புலவர்கள் விரிவுரை, குறிப்புரை, விருத்தியுரை போன்ற பல உரை நூல்கள் இயற்றியுள்ளனர். இங்ஙனம் தோன்றிய உரைகளில் ஸமபத்ரர் இயற்றிய கந்தஹஸ்திபாஷ்யமே முதல் பாஷ்ய நூலாகும். மேலும் தேவநந்தி என்னும் பூஜ்யபாதர் எழுதிய ஸர்வார்த்த ஸித்தி என்பது மற்றொரு பாஷ்யமாகும். வித்யாநாதர் என்ற சமணப்புலவர் தத்வார்த்தாதிகம என்ற நூலுக்கு ஸ்லோகவார்த்திகம் என்ற குறிப்புரையை இயற்றியுள்ளார் இந்நூல்கள் யாவும் ஜைன மதத்தின் தத்துவங்களையும் ஜைன தர்மங்ளையும் ஆராயும் நூல்களாகும்.

ஜைனர்கள் சமஸ்கிருத மொழியில் பல புராணங்களையும், பல ஸ்தோத்திர நூல்களையும் இயற்றியுள்ளனர். புராணங்களில் மஹாபுராணம் என்ற நூல் ஆதிபுராணம் என்றும் உத்தரபுராணம் என்றும் இரண்டு பகுதிகளைக் கொண்டது. ஆதிபுராணத்தை ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஜினஸேனரும், உத்தர புராணத்தை 10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குணபத்ரரும் இயற்றி உள்ளனர். இவ்விரண்டு நூல்களிலும் ஜைன சமயாசார்யர்களான அறுபத்து மூன்று மஹாபுருஷர்களைப்பற்றிக் கூறுகிறது. இவற்றை பத்மபுராணம் என்னும் நூலில் ஸ்ரீராமருடைய சரித்திரத்தைக் காணலாம். இதனை ஜைன ராமாயணம் என்று கூறுவர்.

இவ்வாறு பல்வேறு காவியங்கள் படைக்கப்பட்டன. மல்லிசேனர் இயற்றிய நாககுமார காவியம், தன்யகுமாரசரித்திரம், பத்ரபாஹு சரித்திரம், தற்போது வெளிவரும் க்ஷத்ரசூடாமணி போன்ற காவியங்களும் ஜைனர்களால் படைக்கப்பட்டுள்ளன. பாஹுபலிநாதாஷ்டகம், சந்தரநாதாஷ்டகம், பார்ச்வ நாதாஷ்டகம், சமபத்ரநாதாஷ்டகம், போன்ற ஸ்தோத்திரங்களையும் ஜைனர்கள் இயற்றியுள்ளார்கள். மேலும் தமிழில் கௌமுதிக் கதைகள், நோன்புக் கதைகள், சீவகசிந்தாமணி அம்மானை, ஸ்ரீபுராணம், பார்சுவநாதர் அம்மானை, சௌபாக்ய நோன்புக் கதைகள், தீபாவளி நோன்புக் கதைகள், அட்டாங்க சரிதம், திரிலோகசாரம், லோகசுரூபம், பதார்த்தசாரம், மேருமந்திர தோத்திரம் முதலிய நூல்கள் ஜைனர்களால் படைக்கப் பட்டுள்ளன.

**க்ஷத்ர சூடாமணி :**

இந்தப் பதிப்பில் பரிசோதித்து வெளியிடப்படும் இந்த நூல் வாதீபஸிம்மனால் இயற்றப்பட்டுள்ளது. ஜீவந்தரனின்

வாழ்க்கையை 11 இலம்பகங்களில் கூறியுள்ளார். இவ்விலம்பகங்கள் அவைகளில் உள்ள கதைகளுக்கு ஏற்றவாறு பெயரிடப்பட்டுள்ளன. முழுவதும் எளிமையான அனுஷ்டுப் யாப்பில் அமைந்துள்ள இந்நூல் ஏறத்தாழ 747 செய்யுட்களைக் கொண்டுள்ளது. இதன் ஆசிரியர் மற்றுமொரு நூலான கத்ய சிந்தாமணி என்னும் நூலை எழுதியுள்ளார். இந்நூல் உரைநடையில் அமைந்துள்ள ஜீவகனின் கதை. அஜிதசேனன் என்னும் வாதிபசிம்மனால் இந்நூல் இயற்றப்பட்டுள்ளது என்று அறிஞர்கள் கருதுகின்றனர். ஒரே பெயர் கொண்டுள்ள இருவேறு நூலாசிரியர்கள், இவர்களிருவரும்.

வாதிபசிம்மனின் இயற்பெயர் ஓடையதேவன், அல்லது ஓடையத்தேவர், அல்லது ஓடையாழிவார் என்று இருக்கலாம் என்று T. S. குப்புசாமி சாஸ்த்திரி கருதுகிறார். மேலும் அவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்தவராக இருக்கக் கூடும் என்றும் கூறுகிறார். திருநெல்வேலிக்கு மேற்கே அமைந்துள்ள மேற்கு தொடர்ச்சி மலையில் உள்ள அகத்திய மலையில் சமணர் குகைகள் இருந்ததற்கான சான்றுகள் காணப்படுகின்றன. தமிழில் சீவகசிந்தாமணியை இயற்றிய திருத்தக்கதேவரும் அப்பகுதியைச் சேர்ந்தவர்தாம் என்றும் கருத்துக்கள் காணப்படுகின்றன. கத்ய சிந்தாமணியில் தொடக்கத்தில் காணப்படும் இரண்டு செய்யுட்களில் (செய்யுட்கள் 6,7) வாதிபசிம்மன் ஓடையதேவன் என்ற இயற்பெயரைக் கொண்டிருந்தான் என்றும், புஷ்பசேனர் என்பவர் இவரால் போற்றப்பட்டார் என்றும் தெரிகிறது.

இவ்வாசிரியர் எழுதிய நூல்களில் இருந்தும் ஹரிசந்திரகவி இயற்றிய ஜீவந்தர சம்பூ என்ற நூலில் இருந்தும்

இவரது காலம் இன்னது என்று ஊஹிக்க முடிகிறது. இந்த நூல்களில் ஆங்காங்கே ஒற்றுமையான செய்யுள்களும், உரைநடைப் பகுதிகளும் விரவிக் கிடைக்கின்றன. காளிதாஸன், பட்டபாணன் முதலிய கவிகளின் நடையையும், சொல்லாட்சியையும் பின்பற்றி வாதிபசிம்மன் தனது நூலை இயற்றியுள்ளார்.

தாரா நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட போஜன் என்ற அரசனுடைய அவையில் பல கவிகள் போற்றப் பட்டார்கள். போஜன் இயற்றிய செய்யுளில்

अद्य धारा निराधारा निरालम्बा सरस्वती पण्डिताः
पण्डिताः खण्डिताः सर्वे भोजराजे दिवं गते ॥

இந்த செய்யுளை அடியொற்றி கத்யசிந்தாமணியில் காஷ்ட்டாங்காரனின் கொடுமையினால் அரசன் சத்யந்தரன் இறந்தான் என்ற செய்தியை குறிப்பிடும்போது

अद्य निराधारा धरा निरालम्ब सरस्वती

என்று முற்கூறிய செய்யுளையே மாற்றி எழுதியுள்ளார். ஆகவே வாதிபசிம்மன், காலத்தால் அரசன் போஜனுக்குப் பிற்பட்டவன் என்பது தெரியவருகிறது.

கைலாசசந்திர சாஸ்த்திரி, நாத்துராம் பிரேமீ, புஜபலசாஸ்த்திரி, ஶ்ரீகண்டசாஸ்த்திரி, R. நரசிம்மாச்சாரீ ஆகியோரது வாதங்களை முன்நிறுத்தி சம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றை எழுதிய M. கிருஷ்ணமாச்சாரி, இந்நூலாசிரியர் வாதிபசிம்மன் போஜனுக்குப் பிற்பட்டவர் என்பதைத் தெளிவாக்குகிறார்.[1]

---

1. Page - 477, HCSL., Krishnamacharya M., Madras-1937

**ஒற்றுமைகள் :**

திருத்தக்கதேவர் இயற்றிய சீவகசிந்தாமணிக்கும், இந்நூலுக்கும் கதையிலும், கதை மாந்தரிலும் வடமொழிப் பெயர்களிலும், முற்றிலும் ஒற்றுமை காணப்படுகிறது. சீவகசிந்தாமணியைப் பதிப்புச்செய்த உ. வே. சா. அவர்களும் இதனை ஒப்புக்கொண்டுள்ளார்கள். ஜைனர்களும், இதனை மறுக்கவில்லை.

இவ்விரு நூல்களிலும் காணப்படும் கதை மற்றும் வருணனை ஒற்றுமைகளை ஒரு சில எடுத்துக் காட்டுகளின் வாயிலாகக் காண்போம்.

देवि दृष्टस्त्वया स्वप्ने बालाशोकः समौलिकः ।
आचष्टे सोदयं सूनूमष्टमालास्तु तद्वधूः ॥

इति क्षत्रचूडामणौ ल. 1, श्लो-25

நன் முளை நின்மக னாநறு மாலைக
ளன்ன வனாலம ரப்படுந் தேவியர்
நன்முடி நின்மக னாக்கம தாமெனப்
பின்தை னாற்பயன் பேசலன் விட்டான்.

*(சீவகசிந்தாமணி - 225)*

जीवानां पापवैचित्र्रीं श्रुतवन्तः श्रुतौ पुरा ।
पश्येयुरधुनेतीव श्रीकल्पाभूदकिंचना ॥

इति क्षत्रचूडामणौ ल. 1, श्लो-85

உண்டெனவுரையிற் கேட்பா ருயிருறு பாவமெல்லாங்
கண்டினித் தெளிகவென்று காட்டுவாள் போலவாகி
விண்டொட நிவந்த கோயில் விண்ணவர் மகளிற் சென்றாள்
வெண்டலை பயின்ற காட்டுள் விளங்கிழை தமியளானாள்

*(சீவகசிந்தாமணி - 303)*

यक्षेन्द्रोऽजनि यक्षोऽयमहो मन्त्रस्य शक्तितः ।
कालायसं हि कल्याणं कल्पते रसयोगतः ॥

इति क्षत्रचूडामणौ ल. 4, श्लो-9

*சொல்லிய நன்மையில்லாச் சுணங்கனிவ் வுடம்பு நீங்கி*
*யெல்லொளித் தேவனாகிப் பிறக்குமோ வென்ன வேண்டா*
*கொல்லுலை யகத்திட்டுதிக் கூரிரும் பிரதங்குத்த*
*வெல்லையில் செம்பொன்னாகி யெறி நிறம் பெற்றதன்றே.*

*(சீவக சிந்தாமணி-960)*

*காளிதாஸன் முதலான கவிஞர்கள் இயற்றிய நூல்களின் தாக்கமும், இந்நூலில் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக*

सुखदुःखे प्रजाधीने तदाभृतां प्रजापतेः ।
प्रजानां जन्मवर्जं हि सर्वत्र पितरो नृपाः ॥ 4 -11

रात्रिंदिवविभागेषु नियतो नियतिं व्यधात् ।
कालातिपातमात्रेण कतव्यं हि विनश्यति ॥ 7 - 11

प्रबुद्धेऽस्मिन्भुवं कृत्स्नां रक्षत्येकपुरीमिव ।
राजन्वती च भूरासीदन्वर्थं रत्नसूरपि ॥ 9 -11

- क्षत्रचूडामणौ

प्रजानां विनयाधानाद्रक्षणाद्भरणादपि ।
स पिता पितरस्तासां केवलं जन्महेतवः ॥ 1 - 24

रात्रिंदिवविभागेषु यदादिष्ठं महीक्षिताम् ।
तत्सिषेवे नियोगेन स विल्पपराङ्मुखः ॥ 17 - 49

स वेलावप्रवलयां परिखीकृतसागराम् ।
अनन्यशासनामुर्वीं शशासैकपुरीमिव ॥ 1 - 30

- रघुवंशे

இவ்வாறு வாதீபசிம்மன் தனக்கு முன்பு வாழ்ந்த கவிஞர்களின் நடையை அடியொற்றி தனது நூலை எழுதியுள்ளான் என்பது புலனாகிறது.

**சுவடி வரலாறு :**

இச்சுவடியை உற்று நோக்குங்கால் வேறு சுவடிகளில் காணப்படாத மாறுபட்ட ஒரு சில கருத்துக்கள் தெளிவாகின்றன.

1. சுமார் நூறு வருடங்களுக்கு முன்பே சம்ஸ்கிருததில் தோன்றிய நூல்களை மொழிபெயர்க்கும் முயற்சி செய்யப்பட்டு இருக்கிறது என்பது இதில் இருந்து தெளிவாகிறது. ஓலைச்சுவடியிலேயே காணப்படும் மொழிபெயர்ப்பு இதுகாறும் வேறு எந்த நூல்களிலும் காணக்கிடைக்காததாகும்.

2. மொழிபெயர்ப்பின் நடை பாமர மக்களின் பேச்சு மொழியாகவே உள்ளது. இதனால் அந்த கால கட்டத்தில் அறிஞர்களிடையே வழங்கிய பேச்சுமொழி எத்தகையது என்பதும் இந்த மொழிபெயர்ப்பின் வாயிலாக தெளிவாகிறது. ஆகவேதான் இந்நூலை பதிப்பிக்கும் போது மூலமொழி பெயர்ப்பை எந்த இடத்திலும் மாற்றாமல் சொல்லுக்குச்சொல் மூலமொழிப் பெயர்ப்பாளர் கையாண்டுள்ள சொற்களே பயன்படுத்தப் பட்டுள்ளன. சொற்களும், பொருட்களும் இல்லாத இடங்களிலும் இந்நூலின் தொகுப்பாசிரியர்கள் இக்கால தமிழ் மொழிப்பெயர்ப்பைக் கையாண்டுள்ளனர். மூலநூல் மொழிபெயர்ப்பாளர்களின் மொழி புரிவதற்காக கருத்துரை தற்காலத் தமிழில் வழங்கப்பட்டுள்ளது.

சுவடியில் உள்ள மொழிபெயர்ப்பை பார்க்கும்போது அது ஒருவர் மற்றொருவர் அதனை

எழுதிக்கொண்டது போல அமைந்திருக்கிறது. எடுத்துக்காட்டாக, நீதிக் கருத்துக்களைக் கூறும்போது, அவற்றை கதையின் கருவில் பொருத்திக் காட்ட, . பதவுரையில் ததாஹி (तथाहि) என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. மேலும் இந்தச் சொல் செய்யுளில் காணப்படவில்லை. இது தவிர சமஸ்கிருதச் சொற்களை தமிழில் எழுதும்போது கிரந்த லிபியிலேயே எழுதிவிடுவது அவை மொழிபெயர்ப்பா அல்லது மூலமா என்ற குழப்பத்தை ஏற்படுத்துகிறது. மொழிபெயர்ப்பாளரே சுவடியை எழுதியிருந்தால் இந்தக் குழப்பம் ஏற்பட்டிருக்காது. இருப்பினும் இதனை இயற்றிய சோமபிரபாநாயினாரின் புதல்வர் கம்பீரசாகரன் இதனைக் கைப்பட எழுதியிருப்பதாக சுவடியின் முடிவில் கூறியுள்ளார். இதனால் சம்ஸ்கிருதச் சொற்களை கிரந்த லிபியிலேயே எழுதுவது எளிமையாக இருக்கும் என்று எண்ணி, இந்நூலாசிரியர் மணிப்பிரவாளமாக இதனை மொழிப்பெயர்த்திருக்கலாம்.

3. திருத்தக்கத்தேவர் தமது சீவகசிந்தாமணியில் வாதீபசிம்மனின் கருத்துக்களை எவ்வாறு எடுத்தாண்டு இருக்கிறார். என்பதை விளக்க, ஒரு சில இடங்களில் சீவகசிந்தாமணியில் காணும் செய்யுட்கள் அடிக்குறிப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

4. சம்ஸ்கிருத நூலை ஒட்டியே இந்த நூலின் மொழி பெயர்ப்பும், விளக்கமும் அமைந்திருப்பதால் தமிழ் நூலில் காணப்படும் கவி நயங்கள் இங்கு கையாளப்பட வில்லை.

5. இந்தியாவிலேயே இப்படிப்பட்ட மொழி பெயர்ப்புடன் கூடிய ஓலைச்சுவடி ஒன்றுதான் கிடைத்துள்ளது.

6. பெயர்ப்பொருத்தம் : சீவகன் என்பான் அரசர்களுள் மிகச் சிறந்தவன், வீரமும், அடக்கமும், அறிவும், ஆற்றலும்,

இளமையும், பண்பும், ஒருங்கே அமைந்தவன். ஆகவே சீவகன் அரசர்க்கெல்லாம் அரசனாக இருக்கக்கூடிய தகுதிபெற்று, மற்ற அரசரெலாம் தலைமேல் தாங்கிப் புகழும் வண்ணம் அவர்களது மணிமுடிமேல் அமைந்திருக்கும் விலைமதிப்பற்ற ரத்தினக் கல்லாக விளங்குகிறான்.

க்ஷத்ர என்ற சொல்லுக்கு அரசன் என்பது பொருள். சூடாமணி என்பதற்கு மணிமுடிமீது சூடும் பிரதானமான விலைமதிப்பற்ற நவரத்தினக் கல்லுக்குப் பெயர். அரசர்களால் மணிமுடிமீது தாங்கி போற்றப்படும் அரசன் என்ற பொருளில் அவனுக்கு (ஜீவகனுக்கு) சூடாமணி என்ற காரணப்பெயர் ஏற்பட்டது. அல்லது மணிமுடி அணிந்த அரசர்கள் இவனது காலில் (சீவகனது) வீழ்ந்து வணங்குவதால் மணிமுடிக்குமேல் அமர்ந்துள்ள சிறந்த ரத்தினமாக சீவகன் விளங்குகிறான். இதனாலும் சீவகனுக்கு க்ஷத்ரசூடாமணி என்ற அடைமொழி ஏற்பட்டிருக்கலாம். இந்த அடைமொழியையே தலைப்பாகக்கொண்டு இந்நூல் விளங்குகிறது.

**பதிப்பு :**

இந்த பதிப்புக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சுவடி நமது நூலகத்தில் N. K. R. தொகுதியில் எண். 857இன் கீழ் தொகுக்கப்பட்டுள்ளது. சோமபிரபாநயினாரின் புதல்வர் கம்பீரசாகரன் இந்த தமிழ்பதவுரையின் ஆசிரியர். இவரது பாட்டனார் சந்திரநாத நாயினார். அதாவது கம்பீரசாகரனின் தந்தை சோமபிரபாநாயினார். அவரது தந்தை சந்திரநாத நாயினார். இவர் சீவகசிந்தாமணி அம்மானை என்னும் நூலை எழுதியுள்ளார். இவர் இச்சுவடியை எழுதிய காலம் 25-10- 1904. அவருடைய பேரனாகிய கம்பீரசாகரன் கி. பி.

1910இல் இந்தப் பதவுரையை இயற்றியுள்ளார். சுவடியின் கடைசிப்பகுதியில் இச்சுவடி சாதாரண வருஷம் புரட்டாசி மாதம் 30ந்தேதி த்ரயோதசி திதியில் 46.35 பூரட்டாதி நட்சத்திரம் 36. 1 புத்திநாமயோகம் 10.37 பௌளகரணம் 18.26 இராத்ரி 29.39, இந்த சுபதினத்தில் துலா லக்னத்தில் எழுதி முடிந்தது என்று கூறப்பட்டுள்ளது. இது செப்டம்பர் மாதம் 16ஆம் நாள் 1910ஆம் ஆண்டுக்குச் சரியாக பொருந்தியுள்ளது. அவரே தமது கைப்பட எழுதியுள்ள சுவடியே (Autograph) தற்போது பதிப்பிக்கப்படுகிறது. இலக்கிய ரீதியாகவும், கதையமைப்பிலும், தமிழ் நூலும், சம்ஸ்கிருத நூலும்,எவ்வாறு ஒத்திருக்கின்றன அல்லது மாறுபடுகின்றன என்பதை இந்தப் பதிப்பு உலகிற்கு உணர்த்தும். இவ்வகையில் இந்தச் சுவடி தமிழ் கூறும் நல்லுலகிற்கும் வடமொழி ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் ஐம்பெருங் காப்பியங்களை புதிய கோணத்தில் ஆய்வு செய்வதற்கும் இந்த நூலின் பதிப்பு மிகுந்த பயனுள்ளதாக அமையும்.

இந்நூல் இரண்டு பகுதிகளாக வெளியிடப்படுகிறது. தற்போது ஒன்று முதல் ஐந்தாம் லம்பகம் வரை முதல் பாகமாக வெளிவருகிறது. ஆறு முதல் பதினொன்று வரை உள்ள லம்பகங்கள் இரண்டாவது பகுதியாக பின்னர் வெளிவரும்.

**நன்றியுரை :**

இந்நூலைப் பதிப்பிக்கும் பணியினை எங்களுக்கு அளித்த மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் திரு. எம். எஸ். சண்முகம், இ. ஆ. ப., அவர்களுக்கும், இந்நூலக நிர்வாக அலுவலர் மற்றும் நூல் வெளியீட்டு மேலாளர்(பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும் எங்களது உள்ளங்கனிந்த நன்றியினைத்

தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூலை பதிப்பிக்க எடுத்துக் கொள்வதற்கு ஆலோசனை வழங்கி உதவிய ஜைன மதத்தைச் சார்ந்த இந்நூலக சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் அறங்கூறும் அன்னை திருமதி ராஜலக்ஷ்மி ஜிநக்குமார் அவர்களுக்கும் எங்களது உள்ளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலினைச் சிறப்பாக அச்சிட்டுத்தந்த சரசுவதி மகால் நூலக கணினித் துறையினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் எங்களது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தஞ்சாவூர்
18 - 12 - 08

S. இராஜலக்ஷ்மி,
Dr. V. M. அனந்தநாராயணன்.



# முன்கதைச் சுருக்கம்

## 1. ஸரஸ்வதீலம்பம்

ஹேமாங்கத நாட்டின் அரசனாக அரசன் சத்யந்திரன் விளங்கினான். யாவராலும் நன்கு மதிக்கப்பெற்ற தருமகுணசீலனாகிய அரசன் விஜயை என்ற பெண்ணை திருமணம் செய்துகொண்டான். விஜயையே தனக்கு அரசியாக ஏற்படுத்திக் கொண்டான்.

பிறகு அவ்வரசன் எப்பொழுதும் தன் மனைவியோடு தனித்திருந்தே காலங்கழிக்க விரும்பினான். அதனால் மந்திரியாகிய காஷ்டாங்காரனிடம் அரசாட்சியை ஒப்புவிப்பதாகக் கூறினான். அமைச்சர்கள் பலவாறு எடுத்துரைத்தும் கேட்காமல் அரசன், காஷ்டாங்காரனிடம் அரசாட்சியை ஒப்புவித்தான். பின்பு அரசன் விஜயையோடு உல்லாசமாகக் காலத்தைக் கழித்து வந்தான். காஷ்டாங்காரனும் அரசு முழுவதையும் தன் வசமாக்கிக் கொண்டான். பின்பு விஜயை கர்ப்பவதியானாள். அப்பால் அவ்வேந்தன் தன் மனைவி கர்ப்பமாயிருப்பதை உணர்ந்தான். அவளுக்கு தீய கனவு ஏற்பட்டதை அறிந்த மன்னன் அக்கனவு பலிக்குமென்று தீர்மானித்தான். அரசாட்சி முழுவதும் இப்பொழுது காஷ்ட்டாங்காரன் வசமாயிருக்கிறது இனி அவனால் தனக்கு தீங்கு உண்டாவது திண்ணம் என்றறிந்து, விஜயையை காப்பாற்ற எண்ணி கைதேர்ந்த சிற்பியைக் கொண்டு ஆகாயத்தில் விரைந்து செல்லக்கூடிய மயிற்பொறி ஒன்றைத் தயாரித்து அதனை ஆகாயத்தில் செலுத்தும் விதத்தினை தன் மனைவிக்கு கற்பித்தான்.

காஷ்டாங்காரனும் சத்யந்திரன் ஆட்சியை கைப்பற்றிக் கொள்ளவேண்டும் என்று சிந்தித்து அமைச்சர்களை அழைத்து அரசன் சத்யந்தரனை கொன்று இராஜ்யத்தை கைபற்ற விரும்புகிறேன் என்று கூறினான். அப்போது தருமதத்தன் என்ற அமைச்சன் பலவாறு அவனுக்கு அறிவுரைக் கூறி நமது அரசன் உன்னையே நம்பி உன்னிடம் அரசாட்சியை ஒப்புவித்துள்ளான். அந்நன்றியை மறந்து நீ அவனைக் கொல்ல நினைப்பது தகுதியன்று எனப் பல நீதிகளைப் புகன்றான். இதனைக் கேட்ட காஷ்ட்டாங்காரன் அவனைப் பலவாறு நிந்தித்து வெளியே துரத்திவிட்டான்.

காஷ்டாங்காரன் போருக்கு வந்திருக்கும் செய்தி அறிந்த சத்யந்திரன் விஜயையிடம் நீ மயில் பொறி மீதேறி இப்பொழுதே இவ்விடம் விட்டு சென்று குழந்தையைக் காத்துக்கொள் என்று கூற, அவளும் மிக வருந்தி மயிற்பொறி மீதேறி ஆகாயமார்க்கமாக சென்றாள். பிறகு காஷ்டாங்காரன் போர் புரிந்து முடிவில் சத்யந்தரனைக் கொன்றான். இச்செய்தியை ஆகாய வழியாக சென்று கொண்டிருந்த அரசியின் செவியில்பட்டு மூர்ச்சை அடைந்தாள். அப்போது மயில்பொறி செலுத்துவார் இன்மையால் கீழே இறங்கி ஒரு சுடலையை அடைந்தது. அங்கு அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அப்பொழுது ஒரு தேவதை சண்பகமாலை என்ற அவளது தோழியின் வடிவில் தோன்றி அவளிடம் இக் குழந்தை உலகம் முழுவதையும் ஆளப் போகிறான். இவனை வளர்க்கும் விஷயத்தில் நீ கவலைப்படவேண்டாம். இக் குழந்தையை ஒரு வணிகன் வளர்க்கப்போகிறான் என்று கூறினாள்.

அது போலவே கந்தோத்கடன் என்ற ஓர் வணிகன் இறந்துபோன தன் குழந்தையை சுடலையில் அடக்கம் செய்துவிட்டு வரும் வழியில் ஒரு குழந்தை இருப்பதைக் கண்டு களிப்புடன் அதை எடுக்கையில் யாரோ ஜீவ என்று

ஆசிர்வதிப்பதைக் கேட்டு அப்பெயராலேயே நாமகரணம் செய்தான். அக்குழந்தையை கந்தோத்கடன் தன் மனைவி சுநந்தையிடம் கொடுத்து, எல்லோருக்கும் விருந்து நடத்தி மகிழ்ந்தான். பின்பு அவளது தோழியாக வந்த சண்பகமாலை அவளை அங்குள்ள தவப்பெண்களிடம் ஒப்புவித்து, தவம் செய்யுமாறு செய்துவிட்டு அங்கிருந்து மறைந்துவிட்டாள்.

சில காலம் சென்ற பின்னர் சுநந்தைக்கு நந்தாட்யன் என்றொரு குழந்தை பிறந்தான். அவனும் ஜீவகனும் ஐந்து வயது பூர்த்தியானவுடன் ஆர்யநந்தி என்ற ஆசிரியரிடம் கல்வி கற்றனர். ஜீவகன் எல்லா கலைகளிலும் தேர்ச்சி பெற்று சிறந்து விளங்கினான்.



## 2. கோவிந்தாலம்பம்

பிறகு ஜீவகன் பாடசாலைக்குச் சென்று குருவிடம் பிரசித்தமான கலைகளைக் கற்றான். பின்பு ஆசிரியர் அவனுடைய சரிதத்தை அவன் இராஜகுமாரனென்பதை அறிந்து கொள்ளுமாறு எடுத்துக் கூறினார். குமாரனாகிய ஜீவகன் அப்பொழுதே காஷ்ட்டாங்காரனை கொல்வதற்காக ஆர்பரித்து நின்றான். பின் குருவானவர் பலவாறு சமாதானம் செய்து போர்புரிவதற்கு இது காலம் அல்ல! நீ ஒரு வருட காலம் எனக்காகப் பொறுத்திருக்க வேண்டும். இதுதான் நீ எனக்கு கொடுக்கும் குருதக்ஷிணையாகும் என்று ஜீவகனை வற்புறுத்தி சம்மதிக்கச் செய்தார். ஜீவகனும் குருவிடம் ஆசி பெற்று தவம் செய்வதற்காக கானகம் சென்றான்.

ஒரு சமயம் அரண்மனை வாயிலில் இடையர்கள் எல்லோரும் ஒன்று கூடி பசுக்களை வேடர்கள்

களவாடிக்கொண்டு போய்விட்டதாக அரசன் காஷ்டாங்காரனிடம் கூற, அரசனும் தன் சேனைகளை அனுப்பி வைத்தான். அவர்களும் வேடர்களோடு யுத்தம் செய்து தோற்றனர். எனவே காஷ்டாங்காரனால் யாதொரு நன்மையும் ஏற்படாதென்று தீர்மானித்து, நந்தகோபன் என்ற ஆயர்தலைவன் வேடர்களை வென்று வரும் வீரனுக்கு தன் புத்ரியாகிய கோவிந்தையை ஏழு பொற்பதுமைகளுடன் மணம் செய்து கொடுப்பேன் என்று முரசறைவித்தல் மூலம் தெரிவித்தான்.

அதைக் கேட்டதும் ஜீவகன் தானே ஜெயித்து வருவதாக கூறி, கானகம் சென்று வேடர்களோடு போர் புரிந்து பசுக்களை மீட்டுவந்தான். நந்தகோபனும் மகிழ்ந்து தன் மகளை ஜீவகனுக்குக் கொடுப்பதாக கூற, ஜீவகனும் எனது நண்பன் பத்மாஸ்யனே உனது புதல்விக்கு ஏற்றவன் ஆதலால் நான் அவனுக்காக இந்த நீரை ஏற்கிறேன் என்று ஏற்றுக் கொண்டான். பின்னர் கோவிந்தையை பத்மாஸ்யனுக்கு சந்தோஷத்துடன் விவாஹம் செய்து கொடுத்தான்.



## 3. கந்தர்வதத்தாலம்பம்

ஸ்ரீதத்தன் என்ற ஓர் வணிகன் இராஜமாபுரியில் வசித்து வந்தான். அவன் வணிகம் செய்து மிகுந்த பொருளை இழந்துவிட்டான். அதனால் அவன் மீண்டும் பொருளைச் சேர்ப்பதற்கு விருப்பங்கொண்டு கப்பலில் சரக்குகளை ஏற்றி வேறு தீவுக்குச் சென்று அங்குள்ள அரசனின் அனுமதி பெற்று வணிகம் செய்து ஏராளமான பொருளை சம்பாதித்துக்கொண்டு மீண்டும் கப்பலில் தன் தேசத்திற்கு சமீபம் வரும்போது புயலுடன் பெரு மழை பெய்ய மரக்கலம்

மூழ்கவே அதன் பாய்மரம் முறிந்து மிதந்தது. உடனே ஸ்ரீதத்தன் முறிந்த பாய்மரத்தைப் பிடித்துக்கொண்டு மிதக்கவே அலைகள் அவனை ஓர் தீவில் தள்ளிக்கொண்டு போய் சேர்த்தன. உயிரைப் பெற்ற மனிதனானவன் அரசை இழந்தாலும் மகிழ்வானன்றோ. தத்வஞானமாகிய பொருளிருப்பின் சுகமும், துக்கமும் மயக்கத்தை உண்டாக்காது. இவ்விதம் பலவாறாக சிந்தித்த ஸ்ரீதத்தன் அவ்விடம் வந்த ஒருவரிடம் தனக்கு நேர்ந்த கஷ்டத்தைக் கூறினான். அவனும் ஸ்ரீதத்தனை வெள்ளி மலைக்கு அழைத்துச் சென்று தான் வந்த காரணத்தையும் அவனுக்குக் கூறலானான்.

நித்யலோகம் என்ற நாட்டில் கருடவேகன் என்ற அரசன் வசிக்கிறான். அவனுடன் அரசி தாரிணியும் கந்தர்வதத்தை என்ற மகளும் இருக்கின்றனர். அவள் பிறந்தபோது சோதிடர்கள், இவள் இராஜமாபுரியில் வீணையினால் தன்னை வெல்லுகின்றவனுக்கே வாழ்க்கைப்படுவாள் என்று கூறினார்கள். இவ்விஷயத்தை ஸ்ரீதத்தனிடம் கூறி, உன்னை அழைத்து வரும்படி கூறவே நான் மரக்கலம் மூழ்கியது போல் தோற்றுவித்து உன்னை இங்கே அழைத்து வந்தேன் என்று கூறினான். இதனைக் கேட்ட ஸ்ரீதத்தனும் மிக்க மகிழ்வுற்றான். கந்தர்வதத்தையை அழைத்து வந்து இவளை வீணை வித்தையில் வெல்பவனுக்கு விவாஹம் செய்து கொடு என்று கூறி அவனிடம் ஒப்புவித்தான். ஸ்ரீதத்தனும் இராஜமாபுரம் வந்து அவள் வரலாற்றை தன் மனைவியிடம் கூறினான்.

பிறகு ஸ்ரீதத்தன் காஷ்டாங்காரனிடம் சென்று நடந்த விவரத்தைக் கூறி அனுமதி பெற்று இவ்விஷயத்தை

முரசறைவித்தல் வாயிலாக நகரமெங்கும் தெரியப் படுத்தினான். பல வேந்தர்களும் வந்து வீணை வாசித்துத் தோல்வியடைந்தனர். பின்பு ஜீவகன் அவ்விடம் சென்று வீணையை மீட்டிப் பாடி, அவளை வென்றான். கந்தர்வதத்தையும் ஜீவகனுக்கு மாலையைச் சூட்டினாள்.

அப்பொழுது காஷ்டாங்காரன் ஜீவகனைக் கொல்லுவதற்கு இதுதான் சமயம் என்று தீர்மானித்து மற்ற அரசர்களைப் பார்த்து, பராக்கிரமம் பொருந்திய பலர் இருக்கும்போது, வணிகம் செய்யும் ஒருவன் இராஜ கன்னிகையை கவர்ந்து செல்வதா என்று கூற, அரசர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து வீராவேசத்துடன் ஜீவகனை எதிர்த்து போர்புரிந்தனர். ஜீவகனும் அவர்களுடன் போர் செய்து வெற்றி பெற்றான். ஸ்ரீதத்தனும் கந்தர்வத்தையை அக்னி சாட்சியாக ஜீவகனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். ஜீவகன் அவளோடு இனிது வாழ்ந்து வந்தான்.



## 4. குணமாலாலம்பம்

பின்பு வசந்த காலமானது நகரவாசிகளை ஜலக்ரீடை செய்யுமாறு தூண்டிற்று. ஜீவகனும் ஆற்றுப் பெருக்கில் ஜலக்ரீடை செய்வதைக் காண்பதற்காகத் தோழர்களுடன் அங்கு சென்றான். அப்போது அந்தணர்கள் தமது ஹோமப்பொருட்களைத் தொட்டு வீணாக்கியதற்காக ஒரு நாயை துரத்தியடித்துக் குற்றுயிராக்கிக் கிடத்தினார்கள். அந்நாய் துயருருவதைக் கண்ட ஜீவகன் மிக வருந்தினான். ஜீவகன் எவ்வளவோ முயற்சித்துப் பார்த்தும் நாயின் உயிர் நிலைக்கவில்லை. உடனே அவன் நாயின் செவியில் பஞ்சமந்திரங்களை உபதேசித்தான். அவ்வுயிர்

அம்மந்திரத்தின் மகிமையினால் நாயின் உடலை விட்டு ஒரு தேவனாக மாறியது. மரணகாலத்தில் உபதேசம் பெற்ற பஞ்சமந்திர மகிமையினால் சற்றுமுன் நாயாக இருந்த தேவன் நன்றியுணர்வினால் ஜீவகனருகே வந்து மகிழ்ச்சியுற்று அவனை துதித்து, நண்பா ! நீ உனக்கு துன்பம் வரும்போது என்னை நினைத்துக்கொள். நான் உடனே வந்து உதவி செய்வேன் என்று கூறி ஜீவகனிடம் விடைபெற்றுச் சென்றான்.

பிறகு ஒரு நாள் இராஜமாபுரியில் உள்ள குபேரமித்ரன் பெண்ணான குணமாலைக்கும் குபேரதத்தன் குமாரியான சுரமஞ்சரிக்கும் அவரவர்களின் வாசனைப் பொடியே சிறந்ததென்று வாக்குவாதம் செய்ததன் மூலம் கலகம் ஏற்பட்டது. இவ்வாதத்தில் தோற்றவர் நதியில் ஜலக்கீரீடை செய்யக்கூடாது என்று சபதம் செய்து கொண்டனர். பின்பு சேடியர்களிடம் வாசனைப்பொடியைக் கொடுத்து, இதை தக்க அறிவாளிகளிடம் காண்பித்து யாருடைய பொடி சிறந்ததென கேட்டுவாருங்கள் என்று சொல்லி அனுப்பினார்கள்.

அவர்களும் ஜீவகனிடம் வந்து வாசனைப் பொடிகளைக் காண்பித்து இவ்வாசனைப் பொடிகளில் எது சிறந்ததென்று கேட்க ஜீவகனும் இரு பொடிகளையும் கவனித்துப் பார்த்து குணமாலை அனுப்பிய வாசனைப் பொடியே சிறந்ததென்று கூறினான். இதைக்கேட்ட சுரமஞ்சரியின் சேடி நீங்கள் கூறியதை மெய்ப்பித்தால்தான் நம்புவேன் என்றாள். பின்னர் ஜீவகன் இரண்டு பொடிகளிலும் சிறிதளவு எடுத்து வண்டுகள் உலாவுமிடத்தில் தூவினான். உடனே வண்டுகள் எல்லாம் வாசனை மிகுந்துள்ள (குணமாலை தயாரித்த) சந்திரோதயத்தை பற்றிக்கொண்டு மிக்க ஆவலோடு உண்டன. சூரியோதயத்தை மொய்க்கவேயில்லை (சுரமஞ்சரி தயாரித்த வாசனைப்

பொடி) அகாலத்தில் இடிக்கப்பட்டதால் வாசனை இல்லை என்று தெரிவித்தான். சேடிகள் இருவரும் ஜீவகனை வணங்கி துதித்துவிட்டு தம்தம் தலைவிகளிடம் வந்து ஜீவகன் கூறியதைத் தெரிவித்தனர்.

பிறகு காஷ்டாங்காரனுடைய 'அசனிவேகம்' என்ற பட்டத்து யானை மதம் பிடித்து சங்கிலியை அறுத்துக் கொண்டு வெளியேறி நகரத்து ஜனங்களை துரத்தி வந்தது. நாட்டு மக்கள் ஓடியொளிந்தனர். சேடியர்களும் குணமாலையைவிட்டு ஓடிப் போயினர். ஜீவகனும் தான் அணிந்திருந்த குண்டலத்தைக் கழற்றி யானை மீதெறிந்து அதைத் திசைத்திருப்பி ஓட விட்டான். பின் குணமாலையையும் ஜீவகனுக்கு தன் கிளி மூலம் கடிதம் கொடுத்தனுப்பினாள். இருவரும் காதல் வயப்பட்டனர். பின் முறைப்படி ஜீவகன் குணமாலையை திருமணம் செய்து கொண்டான்.



## 5. பத்மாலம்பம்

பிறகு ஜீவகன் தான் மணந்துகொண்ட குணமாலையுடன் இனிது வாழ்ந்தான். காஷ்டாங்காரனுடைய பட்டத்து யானை ஜீவகனின் குண்டலத்தால் அடிபட்டதாலும், ஜீவகன் வேடர்களை வென்றதாலும், வீணையில் வெற்றி பெற்றதாலும், காஷ்டாங்காரன் மனதில் கோபக் கனல், நிலைத்துவிட்டது. ஆகவே காஷ்டாகாரன் ஜீவகனை விலங்கிட்டு பிடித்துவந்து சிறைப்படுத்தும்படி 'மதனன்' என்பவனை நால்வகை சேனையோடு அனுப்பினான்.

பின்பு 'மதனன்' அப்படையுடன் சென்று ஜீவகன் மாளிகையை சூழ்ந்துகொண்டான். ஜீவகனும் இதனைக் கேள்வியுற்று அப்பொழுதே அவர்களுடன் போர் புரியத் தொடங்கினான். ஜீவகனை கந்தோத்கடன் பலவாறு சமாதானம் செய்து, இது போர் புரியும் தருணம் அல்ல என்று கூற, ஆசிரியர் கூறியதும் நினைவிற்கு வர, கந்தோத்கடன் உத்தரவுப்படி அவனோடு சென்றான். அப்போது தனக்கு முன்பு வாக்களித்துச் சென்ற கந்தர்வனை நினைத்தான். உடனே அவன் பிறருக்குத் தெரியாமல் ஜீவகனைத் தூக்கிக் கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்றான். ஜீவகன் மறைந்து போகவே மதனன், காஷ்ட்டாங்காரனிடம் நடந்ததைக் கூற பயந்து அவனைக் கொன்றுவிட்டதாகக் கூற காஷ்ட்டாங்காரன் மகிழ்ந்திருந்தான்.

ஜீவகனும் கந்தர்வன் வசிக்கும் சந்திரோதயம் என்னும் பர்வதத்தில் சில காலம் வசித்து வந்தான். கந்தர்வனும் ஜீவகனுக்கு, விரும்பிய உருவம் எடுத்தல், இசைத்தல், நஞ்சை முறித்தல் ஆகிய மூன்றுக்கான மந்திரங்களை அவனுக்கு உபதேசித்தான். ஜீவகனும் தொடர்ந்து தேச சஞ்சாரம் செய்ய விருப்பங்கொண்டு கந்தர்வனிடம் விடைபெற்றுச் சென்றான். பிறகு பல இடங்களுக்குச் சென்றுவிட்டு முடிவில் பல்லவ தேசத்திலுள்ள 'சந்திராபம்' என்னும் நகரத்தை அடைந்தான்.

அங்கே அவன் அரச குமாரனான லோகபாலனது நட்பை பெற்று சிலகாலம் வசித்துவந்தான். ஒருநாள் அவளது சகோதரி பத்மா என்பவளைப் பாம்பு தீண்டிற்று. உடனே அவள் மூர்ச்சித்து வீழ்ந்தாள். அவள் மயக்கத்தை தெளிவிக்க எந்த மந்திர ஔஷதங்களும் பயன்படவில்லை. உடனே ஜீவகன் அவளிடம் போய் கந்தருவன் உபதேசித்த மந்திரத்தைச்

சிறிது நேரம் ஜபித்தான். உடனே அவள் கண் விழித்தபோது யாவரும் ஜீவகனைத் துதித்தார்கள். லோகபாலன் ஜீவகன் தனக்கு சிறியவனாய் இருந்தும் அவனை பூசித்தான். பத்மாவின் பெற்றோர்களான தனபதி திலோத்தமை இருவரும் தன் மகளான பத்மாவை ஜீவகனுக்கு முறைப்படி திருமணம் செய்து வைத்தார்கள். ஜீவகனும் அவளை ஏற்றுக் கொண்டான்.

முன்கதைச் சுருக்கம் முற்றிற்று



श्रीः

श्री वादीभसिंहविरचितः

# क्षत्रचूडामणिः

வாதீபஸிம்ஹன் இயற்றிய

# க்ஷத்ரசூடாமணி

## प्रथमो लम्भः

## सरस्वतीलम्भः

## ஸரஸ்வதீலம்பம்

श्रीपतिर्भगवान्पुष्याद्भक्तानां वः समीहितम् ।
यद्भक्तिः शुल्कतामेति मुक्तिकन्याकरग्रहे ॥ 1

यद्भक्तिः - யாதொரு சுவாமியினுடைய பக்தியானது, मुक्तिकन्याकरग्रहे - மோக்ஷலக்ஷ்மியினுடைய பாணிக்ரஹணத்திலே, शुल्कता - பரியம் போடுகிற தன்மையை, एति - அடையாநின்றது. श्रीपतिः - அந்தரங்க பகிரங்க ஐச்வர்யங்களுக்கு முக்யனான, भगवान् - சுவாமியானவர், भक्तानां - பக்தர்களான, वः - உங்களுக்கு, समीहितम् - வாஞ்சித்ததை, पुष्यात् - நிறைக்கக்கடவர்.

*கருத்துரை: - இம்மை, மறுமைகளைக் கொடுக்கும் இறைவனை அடையும் சாதனமாக இருப்பது தூய பக்தி. இத்தகைய பக்தியொன்றையேகொண்டு மோக்ஷத்தையும் கொடுக்கவல்ல இறைவன், பக்தர்களான உங்களுக்கு மோக்ஷமாகிய செல்வத்தைக் கொடுக்கட்டும்.*

संक्षेपेण प्रवक्ष्यामि चरितं जीवकोद्भवम् ।
पीयूषं न हि निःशेषं पिबन्नेव सुखायते ॥ 2

जीवकोद्भवम् - ஜீவகனாலே உண்டான, चरितम् - கதையை - संक्षेपेण - சம்க்ஷேபத்தினாலே - प्रवक्ष्यामि - சொல்லுகிறேன். निःशेषं - சமஸ்தமான, पीयूषमपि - அமிருதத்தையும், पिबन्नेव - பாணம் பண்ணுகின்றவனே, सुखायते - சுகமாக ஆசரியாநின்றான். नहि - இல்லையன்றோ.

*கருத்துரை: - சீவகனின் கதையைச் சுருக்கமாகக் கூறுகின்றேன். அமுதத்தைப் பருகுபவனே இன்பமடைகின்றான். (அதைப்போல இக்கதையைச் சுவைத்து இன்புறுங்கள்).*

श्रेणिकप्रश्नमुद्दिश्य सुधर्मो गणनायकः ।
यथोवाच मयाप्येतदुच्यते मोक्षलिप्सया ॥ 3

गणनायकः - கணங்களுக்கு முக்கியனான, सुधर्मो - சுதர்மரானவர், श्रेणिकप्रश्नम् - சிரேணிகமகாராஜனுடை ப்ரச்னையை, उद्दिश्य- குறித்து, यथा - எப்படி, उवाच - சொன்னார். तथा - அப்படி, मयापि - என்னாலேயும், एतत् - இந்த ஜீவன்தர சரிதமானது, मोक्षलिप्सया - மோக்ஷ வாஞ்சையினாலே, उच्यते - சொல்லப்படா நின்றது. 3

*கருத்துரை: - அரசன் சிரேணிகனின் ஐயத்தை நீக்க, கணங்களுக்குத் தலைவனான கணநாதன் எவ்வாறு உரைத்தாரோ, அதைப்போல இந்தச் சீவகனின் வரலாற்றை நான் உரைப்பேன்.*

इहास्ति भारते खण्डे जम्बूद्वीपस्य मण्डने ।
मण्डलं हेमकोशायं हेमाङ्गदसमाह्वयम् ॥ 4

इह - இந்த மர்த்ய லோகத்திலே, जम्बूद्वीपस्य - ஜம்பூத்வீபத்துக்கு, मण्डने - அலங்காரமாய் இருப்பதாய், भारते - பரத சம்மந்தமாய் இருக்கிற, खण्डे - கண்டத்திலே, हेमकोशाभम् - பொக்கிஷ பாண்டாரங்களுக்கு சமானமாய் இருப்பதாய், हेमाङ्गदसमाह्वयम् - ஹேமாங்கதமென்று பேரையுடைதாய் இருக்கிற, मण्डलं - தேசமானது, अस्ति - உண்டாகின்றது.

*கருத்துரை: - ஏமாங்கதம் என்ற பெயரைக்கொண்ட நாடு ஜம்பூத்வீபத்தில் அமைந்துள்ள இந்தியாவில் உள்ளது. தனது கருவூலங்களில் கொண்டுள்ள தங்கங்களால் அந்நாடு ஒளிர்கிறது.*

तत्र राजपुरी नाम राजधानी विराजते ।
राजराजपुरीसृष्टौ स्रष्टुर्या मातृकायते ॥ 5

तत्र - அந்த ஹேமாங்கதமென்கிற தேசத்திலே, स्रष्टुः - ஸ்ரஷ்டாவுக்கு, राजराजपुरीसृष्टौ - குபேரபட்டண ச்ருஷ்டியிலே, या - யாதொரு ராஜபுரீயானது, मातृकायते - தாய்போல் ஆச்ரியா நின்றது. राजपुरीनामा - ராஜபுரியென்று பேரையுடைய राजधानी - ராஜதானியானது, विराजते - விளங்காநின்றது. 5

*கருத்துரை: - ஏமாங்கத நாட்டின் தலைநகர் இராசபுரி. அது படைப்புக் கடவுளின் படைப்புகளுக்கு, ஒரு அடிப்படையாக விளங்குகிறது.*

तस्यां सत्यन्धरो नाम राजाभूत्सत्यवाङ्मयः ।
वृद्धसेवी विशेषज्ञो नित्योद्योगी निराग्रहः ॥ 6

तस्यां - அந்த ராஜ மஹாபுரியிலே, सत्यवाङ्मयः - சத்யவசனமயமான, वृद्धसेवी - பெரியவர்களினாலே சேவிக்கப்பட்டிருப்பவராய், विशेषज्ञः - விசேஷத்தை அறிந்திருப்பவனாய், नित्योद्योगी - நித்யமும் உத்யோகத்தை உடையவனாய் இருக்கிற, निराग्रहः - சினமற்றவனாயும் இருக்கிற ராஜா ராஜாவானவன், अभूत् - ஆனான். 6

*கருத்துரை: - அந்நாட்டில் சந்தியந்தரன் என்ற அரசன், தன்பெயருக்கேற்றவாறு உண்மையே பேசுபவனாக விளங்கினான். சான்றோர்களால் போற்றப்படுபவனாகவும், அறிவிற் சிறந்தவனாகவும், எப்போதும் உழைப்பவனாகவும், சினம் கொள்ளாதவனுமாக அவன் இருந்தான்.*

महिता महिषी तस्य विश्रुता विजयाख्यया ।
विजयाद्विश्वनारीणां पातिव्रत्यादिभिर्गुणैः ॥ 7

तस्य - அந்த சத்யந்தர மஹாராஜாவுக்கு विश्वनारीणां - சமஸ்த ஸ்திரியர்களுடைய, पातिव्रत्यादिभिः - பதிவிரதாபாவ முதலான, गुणैः - குணங்களினாலே, विजयात् - ஜயித்ததினின்றும், विजयाख्यया - விஜயை என்கிற பேரினாலே, विश्रुता - ப்ரக்யாதையாய் இருப்பவளாய், महिता - பூஜ்யையாயிருப்பவளாய் இருக்கிற, महिषी - பட்டத்தரசியானவள், अस्ति - உண்டாகின்றாள். 7

*கருத்துரை: - அவனது அரசி விஜயை என்ற பெயருடையவள், புகழ் மிக்கவள், கற்புடைமை போன்ற தன்மைகளால் உலகிலுள்ள பெண்களை வெற்றி கொண்டவள்.*

सत्यप्यन्तःपुरस्त्रीणां समाजे राजवल्लभा ।
सैवासीन्नापरा काचित्सौभाग्यं हि सुदुर्लभम् ॥ 8

अन्तः पुरस्त्रीणां - அந்தப்புர ஸ்திரிகளுடைய, समाजे - சமூகமானது, सत्यपि - உண்டாயுள்ளளவிலும், सैव - அந்த விஜயமஹாதேவியே, राजवल्लभा - ராஜவல்லபையானவள், आसीत् - ஆனாள். अपरा काचित् - மற்றொருத்தி नासीत् - ஆனாளில்லை. तथाहि - அப்படியன்றோ, सौभाग्यं- ஸௌக்யமானது, सुदुर्लभम् हि - மிகவும் துர்லபமன்றோ. 8

*கருத்துரை: - அந்தப்புரப் பெண்களிடையே சிறந்து விளங்கிய விஜயை என்பவளே அரசனுக்கு மிகவும் பிடித்தமான மனைவியாக இருந்தாள். வேறு எவராலும் அந்த இடத்தைப் பிடிக்க முடியவில்லை.*

निष्कण्टकाधिराज्योऽयं राजा राज्ञीमनारतम् ।
रमयन्नान्यदज्ञासीत्प्राज्ञप्राग्रहरोऽपि सन् ॥ 9

निष्कण्टकाधिराज्यः - உபத்திரவமில்லாமல் முக்கிய ராஜ்யத்தை உடைத்தாய் இருப்பவனாய் இருக்கிற, अयं राजा - இந்த சத்யந்தர மஹாராஜாவானவன், प्राज्ञः प्राग्रहरोऽपि सन् - ஞானவான்களுக்கு முக்யமானவராய்க் கொண்டிருந்தும், राज्ञीं - பட்டத்தரசியான விஜய மகாதேவியை, अनारतम् - அனவரதம், रमयन् - ரமியாநின்றவனாய்க்கொண்டு, अन्यत् - மற்றொன்றை अज्ञासीत् - அன்யர்களிநின்றுமென்னா.

*கருத்துரை: - எந்தவிதத் தொந்தரவுமற்ற அரசாட்சியை அவன் கொண்டிருந்தான். ஆகவே் மனைவியோடு இன்புற்று இருப்பதையே பெரிதாக நினைத்தான். எனவே அறிவார்ந்த செயல்களில் மனதைச் செலுத்தாமல் இருந்தான்.*

विषयासक्तचित्तानां गुणः को वा न नश्यति ।
न वैदुष्यं न मानुष्यं नाभिजात्यं न सत्यवाक् ॥ 10

विषयासक्तचित्तानां - விஷயங்களிலே, ஆ சக்தியான மனதை உடைத்தானவர்களுக்கு, को वा गुणः - எந்த குணந்தான், न नश्यति -கெடா நின்றதல்ல. वैदुष्यं - வித்தையானது, न - இல்லை. मानुष्यं - மனுஷ்யத்வம் न - இல்லை. आभिजात्यं - நல்ல ஜாதியும், न - இல்லை. सत्यवाक्- சத்யவசனம், न - இல்லை.

*கருத்துரை: - உலகியல் பொருட்களில் ஈடுபாடு கொண்டுள்ளவர்களுக்கு கல்வி, மனிதத்தன்மை, நற்குடிப்பிறப்பு, உண்மை ஆகியவை அழிந்துவிடுகின்றன.*

पराराधनजाद्दैन्यात्पैशुन्यात्परिवादतः ।
पराभवात्किमन्येभ्यो न विभेति हि कामुकः ॥ 11

पराराधनजात् दैन्यात् - பராராதனையிலேயுண்டான தீனத்தினின்றும், पैशुन्यात् - குண்டணியினின்றும், परिवादतः - தூஷணத்தினின்றும், परिभवात् - திரஸ்காரத்தனின்றும், कामुकः - காமுகனானவன், न विभेति- பயப்படாநின்றானில்லை. हि - ஸ்புடமாக, अन्येभ्यः किं - அன்யர்களினின்றுமென்னா.

*கருத்துரை: - பிறரை எப்போதும் புகழுவதனால் ஏற்பட்ட தாழ்மையுணர்வாலோ, மறைமுகமான இகழ்ச்சியாலோ, வெளிப்படையான இகழ்ச்சியாலோ, அல்லது பிறரால் வெறுக்கப்படுவதாலோ, தாழ்ந்த விருப்பங்களைக் கொண்டவன் அஞ்சுவதில்லை. மற்றவைகளைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ?*

पाकं त्यागं विवेकं च वैभवं मानितामपि ।
कामार्ताः खलु मुञ्चन्ति किमन्यैः स्वं च जीवितम् ॥ 12

कामार्ताः - காமத்தினாலே துக்கிதரானவர்கள், पाकञ्च - பரிபக்வத்தையும், त्यागञ्च - கொடுக்கிறதையும், विवेकञ्च - விவேகத்தையும், वैभव- விபவத்தையும், मानितामपि - பூஜ்யத்தையும், स्वञ्च जीवितम् - தன்னுடைய ஜீவிதத்தையும், खलु - ஸ்புடமாக, मुञ्चन्ति - விடா நின்றார்கள். अन्यैः - அன்யர்களினாலே, किं - என்ன.

*கருத்துரை: - தகாத விருப்பம் கொண்டவர்கள், மனமுதிர்ச்சியையும், விட்டுக்கொடுக்கும் தன்மையையும், பகுத்தறிவையும், செல்வத்தையும், பிறரால் மதிக்கப்படும் தன்மையையும், தனது உயிரையும்கூட விட்டுவிடத் தயாராக இருப்பார்கள். மற்ற நற்குணங்களைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ?*

पुनरैच्छदयं दातुं काष्ठाङ्गाराय काश्यपीम् ।
अविचारितरम्यं हि रागान्धानां विचेष्टितम् ॥ 13

पुनः - பிற்பாடு, अयं - இந்த சத்யந்தர மகாராஜாவானவன், काष्टाङ्गाराय - காஷ்ட்டாங்காரன் பொருட்டு, काश्यपीम् - பூமியை, दातुं- கொடுக்கிறதற்கு, ऐच्छत् - இச்சித்தனன். रागान्धानां - ஆகையினாலே கண்தெரியாதவர்களிடையே विचोष्टतम् - நடக்கையானது, अविचारितरम्यं हि - விசாரமில்லாததினாலே ரம்யமன்றோ. 13

*பொருள் : - அப்படிப்பட்ட சத்யந்தரன் தனது உரிமையாகிற அரசை காஷ்டாங்காரன் என்பவனிடம் ஒப்படைக்க எண்ணினான். காமத்தினால் குருடாகிப் போனவர்களின் செயல்கள் ஆராய்ச்சிக்கு உட்பட்டதல்ல.*

तावता तं समभ्येत्य मन्त्रिमुख्या अबूबुधन् ।
देव देवैरपि ज्ञातं विज्ञाप्यं श्रूयतामिदम् ॥ 14

तावता - அவ்வளவிலே, मन्त्रिमुख्याः - மந்திரி முக்யர்கள், तं - அந்த ராஜாவை, समभ्येत्य - அடைந்து, देव - வாராய் தேவனே, देवैरपि - சுவாமிகளினாலேயும், ज्ञातं - அறியப்பட்டது, इदं - இது, विज्ञाप्यं - விண்ணப்பம் செய்யப்படுமது. श्रूयताम् - கேட்கப்படுமது. इति - என்று, अबूबुधन् - போதித்தார்கள். 14

*பொருள் : - நிலமை அவ்வாறு இருக்கும்போது, சிறந்த அமைச்சர்கள் அரசனை அணுகி, "இறைவனால் மட்டுமே அறியப்பட்ட இந்த வேண்டுகோளுக்குச் செவிசாய்ப்பீராக" என்றுகேட்டுக்கொண்டனர்.*

हृदयं च न विश्वास्यं राजभिः किं परो नरः ।
किन्तु विश्वस्तवद् दृश्यो नटायन्ते हि भूभुजः ॥ 15

राजभिः - ராஜாக்களினாலே, हृदयञ्च - ஹிருதயமும், विश्वास्यं - விச்வசிக்கப்படுமது, न-அல்ல. परः- அன்யனான, नरः - மனுஷ்யனானவன், किं - என்ன, किन्तु विशेषय - உண்டு. विश्वस्तवद्दृश्यः - விச்வாசம் போல் காணப்படுகிரவர்களாய் இருக்கிற, भूभुजः - ராஜாக்கள், नटायन्ते हि - நர்த்தனர் போல் ஆசரியா நின்றார்களன்றோ.

*பொருள் : - அரசன் தனது இதயத்தையே நம்பக்கூடாது என்று என்னும்போது, பிறரை எவ்வாறு நம்ப முடியும் ? இருப்பினும்கூட அரசர்கள் பிறறை நம்புவதுபோல் நடித்துக்கொண்டு இருக்கின்றனர்.*

परस्पराविरोधेन त्रिवर्गो यदि सेव्यते ।
अनर्गलमतः सौख्यमपवर्गोऽप्यनुक्रमात् ॥ 16

परस्परविरोधेन - ஒன்றுக்கொன்று மாறுபாடு இல்லாததினாலே, त्रिवर्गः - தர்மம், அரத்தம், காமமானது, सेव्यते - அநுபவிக்கப்படாநின்றது. यदि - ஆகில், अतः - இந்த தர்மத்தினின்றும், सौख्यम् - சுகமானது, अनर्गलम् - தடை இல்லாதது. अनुक्रमात् - க்ரமத்தினின்றும், अपवर्गोऽपि - ஸ்வர்க்க மோக்ஷமுமாம். 16

*பொருள் : - அறம், பொருள், இன்பம் இம்மூன்றும், ஒன்றுக்கொன்று ஒத்துக்காணப்படுவதால், அறத்தைக் கடைப்பிடித்துப் பொருளை ஈட்டி இன்பத்தைத் துய்ப்பது என்பது ஏற்புடையதே. அதேவரிசையில் மறுமையில் இன்பத்தை அடைவதோ, விடுதலை பெறுவதோ அறத்தின் வழியாகப் பெறுவதால் எந்தத் தடையும் இல்லை. 16*

ततस्त्याज्यौ न धर्मार्थौ राजभिः सुखकाम्यया ।
अदः काम्यति देवश्चेदमूलस्य कुतः सुखम् ॥ 17

अदः - இது காரணத்தினின்றும், देवः - தேவனானவன், काम्यति - வாஞ்சியாநின்றான், चेत् - ஆகில், राजभिः - ராஜாக்களினாலே, सुखकाम्यया - சுக வாஞ்சையினாலே, ततः- அது காரணத்தினின்றும், धर्मार्थौ - தர்மார்த்தங்கள், त्याज्यौ - விடப்படுமதுகள், न - அல்ல. अमूलस्य - மூலமான தர்மமல்லாததற்கு, सुखम् - சுகமானது, कुतः - எங்கு நின்றும். 17

*பொருள் : - ஆகவே இன்பத்தைத் துய்க்க விரும்பும் அரசர்கள் அறத்தையும் பொருளையும் விட்டுவிடக்கூடாது. முதலும் முடிவுமற்ற அறத்தைப்பின்பற்றாமல் போனால், இன்பம் ஏற்படுமோ? (ஏற்படாது)*

नाशिनं भाविनं प्राप्यं प्राप्ते च फलसन्ततिम् ।
विचार्यैव विधातव्यमनुतापोऽन्यथा भवेत् ॥ 18

नाशिनं - கேட்டையும், भाविनं - வருகிறதையும், प्राप्यं - அடைந்ததையும், प्राप्ते च - அடைகிறதிலேயும், फलसन्ततिम् - பலசமூகத்தை, विचार्यैव - விசாரித்து, विधातव्यम् - பண்ணப்படுவது, अन्या - அல்லாவிட்டால், अन्यतापः - பச்சாதாபமானது, भवेत् - ஆகக்கடவது. 18

*பொருள் : - கேடு விளைவிக்கக்கூடிய எதிர்காலத்தை உணர்ந்து, அதன் பயன்களை (விளைவுகளை) ஆராய்ந்து அறிந்த பின்னர் ஒரு செயலைச் செய்ய வேண்டும். இல்லாவிடில் அதற்காக வருந்தவேண்டியிருக்கும்.* *18*

इति प्रबोधितोऽप्येष धुरि राज्ञां न्यवेशयत् ।
काष्टाङ्गारमहो मोहाद्बुद्धिः कर्मानुसारिणी ॥ 19

इति - என்று, प्रबोधितः - போதிக்கப்பட்டிருக்கிற, एषोऽपि - இந்த சத்யந்தர மகாராஜாவும், काष्टाङ्गारम् - காஷ்டாங்காரனை, मोहात् - மோஹத்தினின்னும், राज्ञां - ராஜாக்களுடைய, धुरि - பாரத்திலே, न्यवेशयत् - ஸ்தாபித்தான். अहो - ஆச்சரியம், तथाहि - அப்படியன்றோ? बुद्धिः - புத்தியானது, कर्मानुसारिणी - கர்மானுசாரியன்றோ.

*பொருள் : - இவ்வாறு உபதேசிக்கப்பட்டபோதிலும், அந்த அரசன், மயக்கத்தால் அரசுப்பொறுப்பில் காஷ்டாங்காரனை நியமித்தான். ஏனெனில், முன்வினைப் பயனை ஒட்டியே ஒருவனது அறிவு செயல்படும்.*

विषयान्ध्यविचारेण विरक्तानां नृपस्य तु ।
प्रकृष्यमाणरागेण कालो विलयमीयिवान् ॥ 20

विषयान्ध्यविचारेण - விஷயத்தினாலே தெரியாத விசாரத்தினாலே, विरक्तानां - தபசிகளுக்குப்பின்னை, नृपस्य- प्रकृष्यमाणरागेण - ராஜாவுக்கு, कालः - காலமானது, विलयम् - நாசத்தை, इथिवान् - அடைந்தது. 20

*பொருள் : - உலகியல் ஆசைகளால் குருடாகிப்போன அரசன் அவனது அமைச்சர்களை வெறுப்படையச்செய்தான். மிகப்பெரிதாக வளர்ந்துவிட்ட ஆசையால் அரசனின் எதிர்காலம் நாசமடைந்தது.*

सा तु निद्रावती स्वप्नमद्राक्षीत्क्षणदाक्षये ।
अस्वप्नपूर्वं जीवानां न हि जातु शुभाशुभम् ॥ 21

तु - பின்னை, निद्रावती - நித்திரையை உடைத்தான, सा - அந்த விஜய மஹாதேவியானவள், क्षणदाक्षये - விடிகிற நேரத்திலே, स्वप्नम् - ஸ்வப்னத்தை, अद्राक्षीत् - கண்டாள். तथाहि - அப்படியன்றோ, जीवानां - ஜீவன்களுக்கு, अस्वप्नपूर्वं - ஸ்வப்னபூர்வகமில்லாமல், जातु- ஒருகாலும், शुभाशुभम् - நன்மை தன்மையானது, नहि - இல்லையன்றோ.

*பொருள் : - விடியற்காலைப் பொழுதில், அரசி ஒரு கனவைக் கண்டாள். மனிதர்களுக்கு ஏற்படும் நன்மை தீமைகள் கனவை முன்னிட்டே நிகழ்கின்றன.*

वैभातिकविधेरन्ते विभोरन्तिकमीयुषी ।
अर्धासननिविष्टेयमभाषिष्ट च भूभुजः ॥ 22

वैभातिकविधेः - பிராதகால விதியினுடைய, अन्त- கடைசியிலே, विभोः - ப்ரபுவான ராஜாவினுடைய, अन्तिके- சமீபத்தே, ईयुषी - அடைந்திருப்பாளாய், अर्धासन्निविष्टा - அர்த்தாசனத்திலே பிரவேசிப்பாளாய், இருக்கின்ற, इयं - இவள், भूभुजश्च - ராஜாவுக்கும் ஸ்வப்னத்தை, अभाषिष्ट - சொன்னாள். 22

*பொருள் : - பின்பு விஜயை காலை பணிகளை முடித்தபின் வேந்தனருகே வந்து அவனது அரியணையில் அவனருகில் அமர்ந்துகொண்டு தான் கண்ட கனவைக் கணவனிடம் தெரிவித்தாள்.*

श्रुत्वा स्वप्नत्रयं राजा ज्ञात्वा च फलमक्रमात् ।
प्रतिवक्तुमुपादत्त किंचिद्व्यञ्चन्मना भवन् ॥ 23

ராஜாவானவன், स्वप्नत्रयं - ஸ்வப்னத்ரயத்தை, श्रुत्वा - கேட்டு, फलं - பலத்தை, ज्ञात्वा च - அறிந்தும், अक्रमात्- அக்ரமத்தினின்றும், प्रतिवक्तुं - சொல்லுகிறதுக்கு, किञ्चिन्यञ्चन्मना भवन् - ஒன்றை வைக்கப்பட்ட நேசத்தை யுடைத்தானவனாய்க்கொண்டு, उपादत्त - சொன்னான். 23

*பொருள் : - மூன்று கனவுகளையும் கேட்டறிந்த அவன் அந்தக் கனவுகளின் பயன்கள் விபரீதமாக இருப்பதை யுணர்ந்து, சற்றுக் குழம்பிய மனதுடையவனாகப் பேசத்துவங்கினான்.*

पुत्रमित्रकलत्रादौ सत्यामपि च संपदि ।
आत्मीयापायशङ्का हि शङ्कुः प्राणभृतां हृदि ॥ 24

पुत्रमित्रकलत्रादौ- புத்ரமித்ரகளத்ராதியான, संपदि- சம்பத்தானது, सत्यामपि च - உண்டாகியுள்ள அளவிலும், आत्मीया - தன்னுடைய, अपायशङ्का- அபாய ஸந்தேகம், प्राणभृतां - ஜீவன்களுக்கு, हृदि - மனசிலே शङ्कुः हि - முளையன்றோ. 24

*பொருள் : - மனைவி, மக்கள், நண்பர்கள், செல்வம் ஆகியவை இருந்தபோதும், தனக்குக் கேடு விளையும் என்ற ஐயம், உயிருள்ளவரை ஒருவனை முள்போலக் குத்திக்கொண்டே இருக்கும்.*

*देवि दृष्टस्त्वया स्वप्ने बालाशोकः समौलिकः ।
आचष्टे सोदयं सूनूमष्टमालास्तु तद्वधूः ॥ 25

देवि - தேவியே, त्वया - உன்னாலே, स्वप्ने - ஸ்வப்னத்திலே, दृष्टः - காணப்பட்டிருக்கிற, समौलिकः - மௌலியோடு கூடியிருக்கிற, बालाशोकः - இளமரமான அசோக விருக்ஷமானது, सोदयं - ஐச்வர்யத்தோடு கூடியிருக்கிற, सूनूम् - புத்திரனை, आचष्टे - சொல்லாநின்றது, तु - பின்னை, अष्टमालाः - எட்டு மாலைகள், तद्वधूः - அவனுடைய ஸ்திரியர்களை எட்டு பேர்களைச் சொல்லா நின்றது. 25.

*பொருள் : - தேவியே ! உன்னால் பார்க்கப்பட்ட பூத்துக்குலுங்கும் அசோகமரம், உனது மகன் சிறந்த செல்வம்*

---

** நன் முளை நின்மக னாநறு மாலைக
ளன்ன வனாலம ரப்படுந் தேவியர்
நன்முடி நின்மக னாக்கம தாமெனப்
பின்தை னாற்பயன் பேசலன் விட்டான். (சீவகசிந்தாமணி - 225)*

*பொருந்தியவனாக விளங்குவான். நீ கண்ட எட்டு மாலைகள் அவனது மனைவியைக் குறிக்கின்றன.*

[1]आर्यपुत्र ततः पूर्वं दृष्टनष्टस्य किं फलम् ।
कङ्केलेरिति चेद्देवि कथयत्येष किञ्चन ॥ 26

आर्यपुत्र - வாராய் பூஜ்யரே ततः - அது காரணத்தினின்றும், पूर्वं - முன்பு, दृष्टनष्टस्य - கண்டுகேட்டு இருப்பதாய் இருக்கிற, कङ्कले: - அசோக விருக்ஷத்திற்கு, फलम् - பலமானது, किं - என்ன, इति - என்று, चेत् - கேட்டாயாகில், देवि - வாராய் தேவியே, एषः - இந்த, किञ्चन - ஒன்றை, कथयति - சொல்லாநின்றது. 26.

*பொருள் : - பிறகு அவனது அரசி, "அரசே, இதற்கு முன்னால் கண்ட கனவாகிய அசோகமரம் அழிக்கப்பட்ட காட்சிக்கு என்ன பலன் ?" என்று கேட்டாள்.*

[2]इति ईशवाक्यं शुश्रूषी महिषी भुवि पेतुषी ।
मूर्च्छिता तन्मुखग्लानेर्वक्त्रं वक्ति हि मानसम् ॥ 27

इति - என்று, ईशवाक्यं - ராஜாவினுடைய, शुश्रूषी - கேளா, महिषी - பட்டத்தரசியானவள், तन्मुखग्लाने - அந்த ராஜாவினுடைய முக துக்கத்தைக் கண்டு, मूर्च्छिता सन् -

---

1. *இற்றத னாற்பய னென்னென வேந்திழை*
*யுற்றதின் னேயிடை யூறெனக் கென்றலு*
*மற்றுரை யாடல ளாய்மணி மாநிலத்*
*தற்றதோர் கோதையிற் பொற்றொடி சோர்ந்தாள். (சீவகசிந்தாமணி)*

2. *அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்*
*கடுத்து காட்டு முகம். (திருக்குறள்)*

மூர்ச்சிதையானவளாய்க் கொண்டு, भवि - பூமியிலே, पेतुषी - விழுந்தாள். तथाहि - அப்டியன்றோ, वक्त्रं - முகமானது, मानसम् - மனசினுடைய அபிப்ராயத்தை, वक्ति हि - சொல்லாநின்றதன்றோ. 27.

*பொருள் : - அந்த வினாவுக்கு விடையாக, அரசனின் முகம் வாடியதைக் கண்டு, பொருளை உணர்ந்த அரசி மயக்கமடைந்து வீழ்ந்தாள். முகம் மனதின் எண்ணத்தை வெளிப்படுத்துமன்றோ !*

तन्मोहान्मोहितो राजा तामेवायमबूबुधत् ।
सत्यामप्यभिषङ्गार्तौ जागर्त्येव हि पौरुषम् ॥ 28

तन्मोहात् - அவளுடைய மோஹத்தினின்றும், मोहितः - மோஹிக்கப்பட்டிருக்கிற, अयं राजा - இந்த ராஜாவானவன், तामेव - அவளையே, अन्बुवन् - போதித்தான், तथाहि - அப்படியன்றோ, अभिषङ्गातौ - மனோதுக்கமானது, सत्यामपि - உண்டாகியுள்ள அளவிலும், पौरुषम् - புருஷப்பிரயத்தனமானது, जागर्ति एव हि - விழித்திரா நின்றதேயன்றோ. 28.

*பொருள் : - அவள் மீது கொண்ட காதலால் மயக்கமுற்றிருந்தபோதும், அரசன், அவளிடம், மனத்துயர் அடைந்துள்ள போதிலும் எனது ஆண்மை விழித்துக் கொண்டுதான் இருக்கிறது. என்று கூறினான்.*

स्वप्नदृष्टकृते सद्यो नष्टासुं किं तनोषि माम् ।
न हि रक्षितुमिच्छन्तो निर्दहन्ति फलद्रुमम् ॥ 29

स्वप्नदृष्टकृते - ஸ்வப்னத்திலே கண்டு பண்ணப் பட்டதிலே, सद्यः - சடக்கென, नष्टासुं - கெட்ட ப்ராணனை யுடைத்தானவனாக, मां - என்னை, किं तनोषि - ஏன் விஸ்த்தரியாநின்றாய், तथाहि - அப்படியன்றோ, फलद्रुमम् - பல விருக்ஷத்தை, रक्षितुं - ரக்ஷிக்கிறதற்கு, इच्छन्तः - வாஞ்சியாநின்றவர்கள், निर्दहन्ति - கூடாநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 29.

*பொருள் : - கனவில் கண்டதைக் கூறியவுடனேயே, உயிர்போனதுபோல உணர்ந்திருக்கும் என்னை, உண்மையிலேயே உயிர்போக வைக்கிறாயே ! பழம் தரும் மரத்தைப் பாதுகாக்க எண்ணுபவர்கள் அதனை எரிப்பார்களா?*

विपदः परिहाराय शोकः किं कल्पते नृणाम् ।
पावके न हि पातः स्यादातपक्लेश शान्तये ॥ 30

विपदः - ஆபத்தினுடைய, परिहाराय -பரிஹாரத்தின் பொருட்டு, नृणाम् - மனுஷ்யர்களுக்கு, शोकः - துக்கமானது, कल्पते - கல்ப்பிக்கப்படாநின்றது. किं - என்ன, तथाहि - அப்படியன்றோ, पावके - நெருப்பிலே, पातः - விழுகிறது, आतपक्लेशशान्तये - சூர்யபிரகாசத்தினுடைய உபசமத்தின்பொருட்டு, स्यात् - ஆகக்கடவது. नहि - இல்லையன்றோ.

*பொருள் : - மனத்துயர்ப்படுவதால் ஒருவன் துன்பத்திலிருந்து மீளமுடியும் என்றால், சூரியனின் வெப்பத்திலிருந்து தப்பிக்க நெருப்பில் விழுவது சரியான வழியாகுமா ! (ஆகவே துன்பத்தைப் போக்க, மனத்துயர்வுறுவது வழியன்று)*

ततो व्यापत्प्रतीकारं धर्ममेव विनिश्चिनु ।
प्रदीपैर्दीपिते देशे न ह्यस्ति तमसो गतिः ॥ 31

ततः - காரணத்தினின்றும், व्यापत्प्रतीकारं - பிரபஞ்சத்திற்கு பிரதிகாரணமாக, धर्ममेव - தர்மத்தையே, विनिश्चिनु - நிச்சயம் பண்ணு, तथाहि - அப்படியன்றோ, प्रदीपैः - தீபங்களினாலே, दीपिते - பிரகாசிக்கப்பட்டிருக்கிற, देशे - பிரதேசத்திலே, तमसः - இருட்டினுடைய, गतिः - கமனமானது, अस्ति - உண்டாகின்றது. नहि - இல்லையன்றோ. 31.

*பொருள் : - துயரங்களை வெற்றிகொள்வதற்கு ஒரே வழி அறத்தின் வழி நிற்றலே. அறம் என்பது ஒரு விளக்குப் போன்றது. விளக்குகளால் ஒளிவிடும் இடத்தில் இருளாகிய துயரம் காணப்படாது. ஆதலின் ஆபத்தை நீக்கவல்லது அறமே என்றறி. விளக்குகள் விளங்குமிடத்தில் இருள் எவ்வாறு இடம் பெறும்.*

इत्यादिस्वामिवाक्येन लब्धाश्वासा यथापुरम् ।
पत्या साकमसौ रेमे दुःखचिन्ता हि तत्क्षणे ॥ 32

इत्यादिस्वामिवाक्येन - இது முதலான ஸ்வாமி வசனத்தினாலே, लब्धाश्वासा - பெறப்பட்ட விஸ்வாசத்தை உடைய, असौ - இவள், यथा - எப்படி, पुरा - முன்னே, तथा - அப்படி, पत्या - பதியோட, साकं - கூட, रमे - ரமித்தாள், तथाहि - அப்படியன்றோ, दुःखचिन्ता - துக்க சிந்தையானது. तत्क्षणे हि - அந்த க்ஷணத்திலேயன்றோ. (32)

*பொருள் : - இப்படிப்பட்ட ஆறுதற்சொற்களால் தனது மனைவியைத் தேற்றி பழைய நிலைக்குக்*

*க்ஷத்ர - 3*

கொண்டுவந்த பின்னர், தான் அரசுரிமை பெற்றிருந்த போது தலைநகரில் எவ்வாறு இன்புற்றிருந்தானோ, அதைப்போல தான் மனதில் துயருற்றிருந்தாலும், தன் மனைவியிடத்தில் இன்புற்றிருந்தான்.

अथ प्रबोधितं स्वप्नादप्रबुद्धममुं पुनः ।
बोधयन्तीव पत्नीयमन्तर्वत्नीधुरां दधौ ॥ 33

अथ - பிற்பாடு, प्रबोधितं - போதிக்கப்பட்டு இருப்பானாய், स्वप्नात् - ஸ்வப்னத்தினின்றும், अप्रबुद्धम् - மறந்திருப்பானாய் இருக்கிற, अमुं - இந்த ராஜாவை, पुनः - பிற்பாடு, इयं पत्नी - இந்த விஜயமஹாதேவியானவள், बोधयन्तीव - அறிவியா நின்றவள் போல, अन्तर्वत्नीधुरां - (கர்ப்பமாகிற) பாரத்தை, दधौ - தரித்தாள்.

பொருள் : - கனவு கண்டதைக் கூறியதால், அறிவூட்டப்பட்ட அவன், மீண்டும் அறிவிழந்தவன்போல மனைவியிடம் இன்பமாக இருந்தான். அவனுக்கு மீண்டும் அறிவூட்டுவது போல, அவன் மனைவி சூலுற்றாள்.

सदोहलामिमां वीक्ष्य दुःस्वप्नफलनिश्चयात् ।
अनुशेते स्म राजायमात्मरक्षापरायणः ॥ 34

सदोहला - கர்ப்பமசக்கையோடு கூடின, इमां - இவளை, दुःस्वप्नफलनिश्चयात् - துஸ்ஸ்வப்னத்தினுடைய பல நிச்சயத்தினின்றும், वीक्ष्य -பார்த்து, अयं राजा -இந்த ராஜாவானவன் आत्मरक्षापरायणस्सन् - தன்னை ரக்ஷிக்கிறத்திலே தாத்பர்யத்தை உடையவனாய்க்கொண்டு, अनुशेते स्म - சந்தேகித்தான். 34.

பொருள் : - சூலுற்ற தன் மனைவியைக்கண்டு, இது அவளது கனவின் பயனே என்றுணர்ந்து, அரசன் தான் செய்த

*தவறுகளுக்காக வருந்தி, தன்னைக் காப்பாற்றிக் கெள்வது எவ்வாறு என்ற சிந்தனையில் ஆழ்ந்தான்.*

मन्त्रिणां लङ्घितं वाक्यमभाग्येन मया मुधा ।
विपाके हि सतां वाक्यं विश्वसन्त्यविवेकिनः ॥ 35

मन्त्रिणा - மந்திரிகளுடைய, वाक्यं - வசனமானது, अभाग्येन - அதிர்ஷ்டம் இல்லாமல் இருக்கும், मया - என்னாலே, मुधा - வீணாக, लङ्घितं - கடக்கப்பட்டது. तथाहि - அப்படிப்பட்ட, सतां - சத்புருஷர்களுடைய, वाक्यं - வசனத்தை, अविवेकिनः - விவேகம் இல்லாதவர்கள், विपाके - பல காலத்திலே, विश्वसन्ति हि - விஸ்வசியா நின்றார்களன்றோ. 35.

*பொருள் : - அமைச்சர்களின் அறிவுரை ஊழ்வினைப் பயனால் என்னால் வீணாக மறுக்கப்பட்டது. சான்றோர் களுடைய அறிவுரையின் பொருளை பகுத்தறிவற்றவர்கள் துயர்ப்படும்போதுதான் உணர்கின்றனர்.*

न ह्यकालकृता वाञ्छा संपुष्णाति समीहितम् ।
किं पुष्पावचयः शक्यः फलकाले समागते ॥ 36

अकालकृताय - காலமல்லாத காலத்திலே பண்ணப்பட்ட, वाच्छा - வாஞ்சையானது, समीहितम् - வாஞ்சிதத்தை, संपुष्णाति - நிறையாநின்றது. नहि - இல்லையன்றோ. फलकाले - பலகாலமானது, समागते - வந்துள்ளவில்.

*பொருள்: - அகாலத்தில் ஏற்படும் ஆசை நிறைவேறாது. பழத்தைப் பறிக்கக்கூடிய காலத்தில் பூக்களைக் கொய்ய எண்ணுவது மடமை.*

इत्यार्तो वंशरक्षार्थं केकियन्त्रमचीकरत् ।
आस्था सतां यशः काये न ह्यस्थायिशरीरके ॥ 37

इति - என்று, अर्तो - துக்கிதனான ராஜாவானன், वंशरक्षार्थं - வம்சத்தை ரக்ஷிக்கிற நிமித்தமாக, केकयन्त्रम् - மயில்பொறியை, अचीकरत् - பண்ணி வைத்தான், तथाहि - அப்படியன்றோ, सतां - சத்புருஷர்களுக்கு, यशः काये - கீர்த்தியாகிற சரீரத்திலே, आस्था - வாஞ்சையானது, अस्ति - உண்டாகாநின்றது. अस्थायिशरीरके - அநித்யமான சரீரத்திலே, नहि - இல்லையன்றோ. 37

*பொருள் : - இப்படியாகத் துயருற்ற அரசன் தனது சந்ததியைக் காப்பாற்ற எண்ணி, ஒரு மயில்பொறியைச் செய்து வைத்தான். சான்றோர்களுக்கு அழியக்கூடிய உடலில் ஈடுபாடு இருக்காது. (அதைப்போல, தனது உடல் அழிந்துவிடும் என்பதையுணர்ந்த மன்னன், தனது வழிவந்த புதல்வர்களே, தனது புகழைக் காக்க வல்லவர்கள் என்ற எண்ணம் கொண்டு, மனைவியையும், அவளது கருவையும் காக்க எண்ணி, விண்வழியே பறந்து செல்லும் மயிற்பொறியைச் செய்துவைத்தான்).*

आक्रीडे दौर्हदक्रीडामनुभोक्तुं विशांपतिः ।
व्यजीहरच्च यन्त्रस्थां पत्नीं वर्त्मनि वार्मुचाम् ॥ 38

आक्रीडे - உத்யானவனத்திலே, द्रौहृदक्रीडाम् - மசக்கை விளையாட்டை, अनुभोक्तुं - அனுபவிக்கிறத்துக்கு, विशांपतिः - அரசன், வித்வாம்சர்களுக்கு முக்கியமான ராஜா வானவன், यन्त्रस्थां - யந்த்ரத்திலே இருக்கிற, पत्नीं - பத்னியை, वार्मुचाम् - மேகங்களிடையே, वर्त्मनि - மார்க்கத்திலே, व्यजीहरश्च - வ்யவஹரிக்கப் பண்ணிவிச்சான்.

*பொருள் : - தோட்டத்தில் இருந்துகொண்டு, கருவுற்ற பெண்ணின் விளையாட்டை வேடிக்கை பார்க்க எண்ணி, மன்னன் தனது பட்டத்தரசியை மயிற்பொறி மீது ஏற்றி வானில் பறக்கவிட்டுப் பழக்கினான்.*

तावतैव कृतघ्नाख्यां राजघाख्यां च साधयन् ।
स्वविधेयां भुवं चेति काष्टाङ्गारो व्यचीचरत् ॥ 39

तावतैव - அவ்வளவு நாளிலேயே, कृतघ्नाख्यां च - செய்த நன்றியைக் கெடுத்தான் என்கிற பேரையும், राजघाख्यां च - ராஜாவைக்கொன்றான் என்கிற பேரையும், साधयन् - சாதியாய் நின்றவனாய்க்கொண்டு, भुवं च - பூமியையும், स्वविधेयां - ஸ்வதீனமாகப்பண்ணவேணு மென்று, काष्टाङ्गारः - காஷ்டாங்காரனானவன், व्यचीचरत् - சிந்தித்தான். 39

*பொருள் : - செய்நன்றி கொன்றவன் என்ற பெயரையும், அரசனைக் கொன்றவன் என்ற பெயரையும் ஈட்ட எண்ணி, அரசன் தனக்களித்த உரிமையை நிலைநாட்டிக்கொள்ள காஷ்டாங்காரன் நினைத்தான்.*

जीवितात्तु पराधीनाज्जीवानां मरणं वरम् ।
मृगेन्द्रस्य मृगेन्द्रत्वं वितीर्णं केन कानने ॥ 40

तु - பின்னை, जीवानां - ஜீவன்களுக்கு, पराधीनात् - பராதீனமாய் இருக்கிற, जीवितात् - ஜீவிதனின்றும், मरणं - மரணமானது, वरम् - உத்க்ருஷ்டம், तथाहि - அப்படியன்றோ, कानने - காட்டிலே, मृगेन्द्रस्य - சிம்ஹத்திற்கு, मृगेन्द्रत्वं சிம்ஹத்வம் என்கிற பேரானது, केन - எவனாலே, वितीर्णं - கொடுக்கப்பட்டது. 40.

பொருள் : - பிறரை அண்டி வாழ்வதைக்காட்டிலும், மனிதர்களுக்கு இறப்பே மேலானது. சிங்கத்துக்கு மிருகங்களின் தலைவன் என்ற பட்டம் காட்டில் யாராலும் வழங்கப்படவில்லை. (அதாவது தானாகத் தன் வலிமையால் பெற்ற தலைவன் பட்டம்தான் ஒருவனைத் தன்விருப்பப்படி வாழவைக்கும். பிறரை அண்டி வாழும் வாழ்க்கை விடுதலையற்றது. (அப்படி வாழ்வதைக் காட்டிலும் இறப்பதே மேலானது)

*अचीकथच्च च मन्त्रिभ्यो राजद्रोहो विधीयताम् ।
इति राजद्रुहा नित्यं दैवतेनाभिधीयते ॥ 41

मन्त्रिभ्यः - மந்திரிகள் பொருட்டு, राजद्रोहः - ராஜதுரோஹமானது, विधीयताम् - பண்ணப்படுமது, என்று, इति - என்று, राजद्रुहा - ராஜதுரோஹியான காஷ்டாங்காரனாலே, नित्यं - அனவரதமும், दैवतेन - தேவதையினாலே, अभिधीयते - சொல்லப்படாநின்றது. इति - என்று, अचीकथत् च - சொல்லப்பட்டது. 41.

பொருள் : - "அரசனுக்கு துரோகம் செய்யுங்கள்", என்று அரசனுக்குத் துரோகம் நினைக்க எண்ணும் மன்னனின் வாயிலாக, விதி, மந்திரிகளிடம் புகன்றது. 41.

*स्वन्तं किं नु दुरन्तं वा किमुदर्कं वितर्क्यताम् ।
अतर्कितमिदं वृत्तं तर्करूढं हि निश्चलम् ॥ 42

---

* மன்னவன் பகை யாயதோர் மாதெய்வ
மென்னை வந்திடங் கொண்டஃதி ராப்பகற்
றுன்னி நின்றாசெ குத்திடு நீ யெனு
மென்னை யான் செய்வ கூருமி னென்னவே. (சீவகசிந்தாமணி)

* மனம் வேறு சொல்வேறு மன்னு தொழில் வேறு
வினை வேறு பட்டவர்பால் மேவும் - மனமே
மனமொன்று சொல்லொன்று வான் பொருளு மொன்றே
கனமொன்று மேலவர்தங் கண். (நீதிவெண்பா)

स्वन्तं किन्नु - நல்லதேயான, दुरन्तं वा - பொல்லாததே, उदर्क - மேலாகிறது, किं - என்ன, अतर्कितम् - விசாரவிஷயமல்லாத, इदं वृत्तं - இந்த வார்த்தையானது, वितर्क्यताम् - விசாரிக்கப்படுமது, तथाहि - அப்படியன்றோ, तर्करूढं - விசாரரூடமானது, निश्चलं हि - சலனமில்லாததன்றோ. 42

*பொருள் : - இது, நன்மை தரக்கூடியதா, இல்லையா என்று சீர்தூக்கிப்பார்க்க இயலாமல், வாக்குவாதத்திற்கு அப்பாற்பட்டுக் காணப்பட்டது.*

जिह्रेमि वक्तुमप्येतदुक्तिर्दैवभयादिति ।
मनस्यन्यद्वचस्यन्यत्कर्मण्यन्यद्धि पापिनाम् ॥ 43

இந்த விசேஷம், वक्तुमपि - சொல்லுகிறதுக்கும், जिह्रेमि - லஜ்ஜிக்கிறேன், इति - என்று, दैवभयात् - தைவபயத்தினின்றும், उक्तिः - சொல்லுகிறது, तथाहि - அப்படியன்றோ, पापिनां - பாபிகளுக்கு, मनसि - மனசிலே, अन्यत् - மற்றொன்று, वचसि - வசசிலே, अन्यत् - மற்றொன்று, कर्मणि - நடக்கையிலே, अन्यत् - மற்றொன்றும். 43

*பொருள் : - தீச்செயல் புரிபவர்களுக்கு, மனதில் ஒன்றும், சொல்லில் மற்றொன்றும், செயலில் வேறொன்றும் இருப்பதால், விதிக்குப் பயந்து, அதைக் கூறவும் அச்சமாக இருக்கிறது.*

तद्वाक्याद्वाच्यतो वंश्या यमिनः प्राणिहिंसनात् ।
क्षुद्रा दुर्भिक्षतश्चैव सम्याः सर्वे हि तत्रसुः ॥ 44

यथा - எப்படி, वाच्यतः - பழிச்சொல்லிநின்றும், वश्या - வம்சத்திலே பிறந்த பேர்கள், प्राणिहिंसनात् - ஜீவஹிம்சையினின்றும், यमिनः - ரிஷிகள், दुर्भिक्षतश्चैव - பஞ்சத்தினின்றுமே, क्षुद्राः - க்ஷுத்ரர்கள், அப்படி, तद्वाक्यात् - அந்த காஷ்டாங்காரனுடைய வசனத்தினின்றும், सभ्याः - ஸபாஜனங்களான, सर्वे हि - சமஸ்தர்களும், तत्रसुः - பயப்பட்டார்கள். 44

**பொருள் : - பழிச்சொல்லைக்கேட்டு எவ்வாறு சான்றோர்கள் அஞ்சுவரோ, மனதை அடக்கியவர்கள் உயிரினங்களுக்குத் தீமையிழைப்பதிலிருந்து எவ்வாறு பயப்படுவார்களோ, வேளாண்மை செய்வோர் பஞ்சத்தைக் கண்டு எவ்வாறு அஞ்சுவரோ, அதைப்போல அவையோர் காஷ்டாங்காரனின் சொல் கேட்டு அஞ்சினர்.**

आत्मघ्नीं धर्मदत्ताख्यः सचिवो वाचमूचिवान् ।
गाढा हि स्वामिभक्तिः स्यादात्मप्राणनपेक्षिणी ॥ 45

धर्मदत्ताख्यः - தர்மதத்தனென்று பேரையுடைய सचिवः - மந்திரியானவன், आत्मघ्नीं - தன்னை கொல்லுகிறதாய் இருக்கிற, वाचं - வசனத்தை, ऊचिवान् -சொன்னான், तथाहि - ஏனெனில், गाढा - த்ருடமான, स्वामिभक्तिः - சுவாமி பக்தியானது, आत्मप्राणानपेक्षिणी - தன்னுடைய பிராணங்களை அபேக்ஷியாது, स्यात् - ஆக்கக்கடவது, हि - அன்றோ. 45

**பொருள் : - தன் தலைவன் மீது கொண்ட பற்றின் காரணமாக, தருமதத்தன் என்ற அமைச்சன் துரோகம் செய்வதற்குப் பதிலாக, தன்னுயிரை எடுத்துவிடும்படி வேண்டினான். அசைக்கமுடியாத அன்பு, தனது உயிரையும் மேலாக நினைக்காதன்றோ!**

राजानः प्राणिनां प्राणास्तेषु सत्स्वेव जीवनात् ।
तत्तत्र सदसत्कृत्यं लोक एव कृतं भवेत् ॥ 46

राजानः - ராஜாக்கள், प्राणिनां - பிராணிகளுக்கு, प्राणाः - பிராணன்கள், तेषु - அந்தப் பிராணன்கள், सत्स्वेव - உண்டாகியுள்ள அளவிலே, जीवनात् - ஜீவிக்கிறத்தினின்றும், तत्र - அந்த ராஜாவினிடத்திலே, सदसत्कृत्यं - சதசத் கிருத்யமானது, यत् - யாதொன்று, तदेव - அதுவே, लोक एव - லோகத்திலேயே, कृतं - பண்ணப்பட்டது. भवेत् - ஆகக்கடவது. 46

*பொருள் : - அரசர்கள் உயிர்களின் உயிர், அரசர்கள் இருந்தால்தான் மக்கள் உயிர்வாழ முடியும். அவர்கள் (அரசர்கள்) செய்யும் நல்ல செயலோ தீச்செயலோ, மக்கள் செய்ததாகவே கருதப்படும்.*

एवं राजद्रुहां हन्त सर्वद्रोहित्वसंभवे ।
राजध्रुगेव किं न स्यात्पञ्चपातकभाजनम् ॥ 47

एवं - இப்படி राजद्रुहां - ராஜத்ரோஹிகளுக்கு सर्वद्रोहित्व संभवे - சர்வ த்ரோஹித்வ சம்பவமானது सति - உண்டாயுள்ளளவில், राजध्रुगेव - ராஜத்ரோஹமொன்றுமே, पञ्चपातकभाजनम् - பஞ்சமஹாபாதகத்துக்கு இருப்பிடமானது, किं स्यात् - என்ன ஆகக்கடவது, न - அல்ல, हन्त - கெட்ட கெட்ட. 47

*பொருள் : - இவ்வாறு அரச துரோகிகளுக்கு எல்லாத் துரோகங்களும் செய்த தீமை வந்தடையும். அரசன் எல்லோரையும் காப்பதால், அரசனுக்குச் செய்யும் துரோகம், எல்லோருக்கும் செய்த துரோகமாகிவிடும். ஆகவே பஞ்ச*

மகாபாதகங்களான (ஐம்பெரும் தீமைகள்) பொன்னைத் திருடுதல், கட்குடித்தல், ஆசிரியன் மனை சேர்தல், அந்தணனைக் கொல்லுதல், இந்நான்கையும் செய்வோருடன் சேர்ந்திருத்தல், ஆகிய தீமைகளை அரசனுக்குச் செய்யும் துரோக்தினாலேயே ஒருவன் செய்ததாக ஆகிவிடும்.

रक्षन्त्येवात्र राजानो देवान्देहभृतोऽपि च ।
देवास्तु नात्मनोऽप्येवं राजा हि परदेवता ॥ 48

अत्र - இவ்விடத்திலே राजानः - ராஜாக்கள், देवाः - தேவர்கள், एवं - இப்படி, आत्मनोऽपि - தங்களையும், न रक्षन्ति - ரக்ஷியா நின்றதுகளல்ல, तथाहि - அப்படியன்றோ, राजा - ராஜாவானவன், परदेवता हि - உத்கிருஷ்ட்ட தேவதையன்றோ. 48

பொருள் : - இவ்வுலகில் அரசர்கள் வேள்வி முதலியவற்றால் தேவரையும், செங்கோலால் மனிதரையும் இரக்ஷிக்கின்றனர். ஆதலால் அரசனே சிறந்த தேவனாவான்.

किं चात्र दैवतं हन्ति दैवतद्रोहिणं जनम् ।
राजा राजद्रुहां वंशं वंशयानन्यच्च तत्क्षणे ॥ 49

अत्र - இவ்விடத்திலே दैवतं - தேவதையானது दैवतः द्रोहिणं - தேவதைக்கு த்ரோஹியான किञ्चजनम् - ஒரு ஜனத்தை हन्ति - கொல்லாநின்றது, राजा - ராஜாவானவன், राजद्रुहां - ராஜத்ரோஹிகளிடையே वंशं - வம்சத்தையும், वंशयान् - வமம்சத்திலே பிறந்த பேர்களைம், अन्यश्च - அன்யத்தையும், तत्क्षणे - அந்த க்ஷணத்திலே, हन्ति - கொல்லா நின்றான். 49

*பொருள் : - அப்படிப்பட்ட இறைவனுக்குத் (அரசனுக்குத்) துரோகம் செய்யும் மனிதனை, விதி அவனது வழித்தோன்றல்களையும், மற்ற வழித்தோன்றல்களையும் அதே கணத்தில் கொன்றுவிடும்.*

अर्थिनां जीवनोपायमपायं चाभिभाविनाम् ।
कुर्वन्तः खलु राजानः सेव्या हव्यवहा यथा ॥ 50

अर्थिनां - அர்ச்சிக்கப்பட்ட சிஷ்ய ஜனங்களுக்கு, जीवनोपायश्च - ஜீவநோபாயத்தையும், अभिभाविनां - பாவிக்கப்பட்டு இருப்பார்களாய் இருக்கிற துஷ்ட்ட ஜனங்களுக்கு, अपायश्च - அபாயத்தையும், खलु - ஸ்புடமாக, कुर्वन्तः - பண்ணாநின்றிருப்பார்களாய் இருக்கிற, राजानः - ராஜாக்கள், हव्यवहा - அக்னியானது, यथा - எப்படி, सेव्याः - சேவிக்கப்படுபவர்கள். 50

*பொருள் : - தன்னிடம் யாசிப்பவர்களுக்கு உயிர்வாழ வழியையும், தூற்றுபவர்களுக்குத் துயரையும் தரும் அரசர்கள் நெருப்பை வழிபடுவது போன்று வழிபடத்தக்கவர்கள்.*

इति धर्म्यवचोऽप्यासीन्मर्मभित्तीव्रकर्मणः ।
पित्तज्वरवतः क्षीरं तिक्तमेव हि भासते ॥ 51

इति - என்று, धर्म्य - தர்மியமான, वचोऽपि - வசனமும் तीव्रकर्मणः - (கொடிய செயலுடைய) காஷ்ட்டாங்காரனுக்கு, मर्मभित् - மர்மஸ்தானத்தை பேதிக்கிறதானது आसीत् - ஆச்சுது. तथाहि - அப்படியன்றோ पित्तज्वरतः - பைத்திய ஜ்வரவானுக்கு क्षीरं - பாலானது, तिक्तं - தித்தித்ததாக अवभासते - விளங்காநின்றது, न - இல்லையன்றோ. 51

பொருள் : - இவ்வாறு அறத்தை வலியுறுத்தும் சொற்களைக் கேட்ட காஷ்டாங்காரன் மிகவும் கோபித்தான். பைத்தியம் பிடித்தவனுக்கு பால் கசக்கத்தானே செய்யும்.

सः कार्तघ्न्यादिदोषं च गुरुद्रोहं च किं परैः ।
परिवादं च नाद्राक्षीद्दोषं नार्थी हि पश्यति ॥ 52

सः - அந்த காஷ்ட்டாங்காரனானவன் कार्तघ्न्यादिदोषञ्च- செய்த நன்றியைக் கெடுத்தான் गुरुद्रोहञ्च - குருத்ரோஹத்தையும், परिवादं च - தூஷணத்தையும், नाद्राक्षीत् - கண்டானில்லை. परैः - அன்யங்களினாலே किं - என்ன तथाहि - அப்படியன்றோ, अर्थी - வாதத்தையுள்ளவன் दोषं - தோஷத்தை पश्यति - பார்த்து நின்றான் नहि - இல்லையன்றோ. 52

பொருள் : - தனது செயலிலேயே ஈடுபட்ட காஷ்டாங்காரன் செய்நன்றி கொல்வதைப் பற்றியோ, குருத்ரோகம் செய்வதைப் பற்றியோ கவலையுறவில்லை. மற்ற வகையான தீச்செயல்களைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? பிறரால் இகழப்படுவதைப் பொருட்படுத்தாமல் அவன் இருந்தான். காரியவாதி தனது செயலால் ஏற்படும் தீமைகளைப் பற்றிச் சிந்திப்பதில்லை.

मथनो नाम तत्स्यालस्तद्वाचं बहुमन्यत ।
तद्धि पाणौ कृतं दात्रं परिपन्थिविधायिनः ॥ 53

मथनो नाम - மதனன் என்று பேரையுடைய तत्स्यालः - அந்த காஷ்டாங்காரனுடைய மைத்துனன் ஆனவன் तद्वाचं - அந்த காஷ்டாங்காரனுடைய வசனத்தை बहुमन्यत - பகுவாயென்றினான் तथाहि - அப்படியன்றோ

परिपन्थिविधायिनः- வெறுங்கையினாலே பறிக்கிறவனுக்கு तत् - அது पाणौ - கையிலே कृतं - பண்ணப்பட்டு இருக்கிற दात्रं हि - ஆயுதமன்றோ. 53

பொருள் : - மதனன் என்ற காஷ்டாங்காரனின் மைத்துனன், அவனது சொற்களை மதித்தான். வெறும் கையினால் பறிப்பவனுக்கு அது கையில் கொடுத்த ஆயுதத்தைப் போலானது. அதாவது எவருமே காஷ்டாங்காரனின் ஆணனைக்குச் செவிசாய்க்காதபோதும் தான் மட்டுமே அக்காரியத்தைச் செய்யவேண்டும் என்று துணிந்த காஷ்டாங்காரனுக்கு தனது மைத்துனனின் ஆதரவு, அரசனை அழிக்கக் கையில் கிடைத்த பேராயுதமாக இருந்தது.

प्राहैषीच्च बलं हन्तुं राजानं हन्त पापधीः ।
पयो ह्यास्यगतं शक्यं पाननिष्ठीवनद्वये ॥ 54

पापधीः - பாபபுத்தியான காஷ்ட்டாங்காரகன் राजानं - ராஜாவை हन्तुं - கொல்லுவதற்கு बलञ्च - பலத்தையும் प्राहैषीत् - அனுப்பினான் हन्त - கெட்ட கெட்ட तथाहि - அப்படியன்றோ आस्यगतं - வாயிலே அடைத்திருக்கும் पयः - ஜலமானது पाननिष्टीवनद्वये - பானம் பண்ணுவது, கொப்பளிக்கிறது என்னும் இரண்டு பிரகாரத்திலே शक्यं हि - சமர்த்தமன்றோ. 54

பொருள் : - தீய மதி கொண்ட காஷ்டாங்காரன் அரசனைக் கொல்லப் படையை அனுப்பினான். வாயால் உட்கொள்ளப்பட்டிருக்கும் நீரை விழுங்கவும் முடியும். உமிழவும் இயலும். அதாவது அரசுரிமையாகிய நீரைப்பருகி தாகத்தைத் தணித்துக்கொள்ளலாம் (நன்மையை அடையலாம்). அல்லது வாயில் உள்ள நீரைப் பருகாமல் உமிழவும் செய்யலாம். (பிறருக்கு கெடுதலும் செய்யலாம்).

दौवारिकमुखादेतदुपलभ्य रुषा नृपः ।
उदतिष्ठत संग्रामे न हि तिष्ठति राजसम् ॥ 55

दौवारकमुखात् - த்வாரபாலகர் முகத்தினின்றும், एतत् - இதை उपलभ्य - அறிந்து नृपः - ராஜாவானவன் रुषा - கோபத்தினாலே उदतिष्ठत - எழுந்திருந்தான். तथाहि - அப்படியன்றோ. राजसं - ராஜாவினுடைய சம்பந்தமானது संग्रामे - யுத்தரங்கத்திலே तिष्ठति - இராநின்றது. नहि - இல்லையன்றோ. 55

*பொருள் : - வாயிற்காப்போன் வழியாக இச் செய்தியை அறிந்து அரசன் சினம் கொண்டு எழுந்தான். போரில் அரசனின் திறமை வெளிப்பட்டே தீரும்.*

तावतार्धासनाद्भ्रष्टां नष्टासुं गर्भिणीं प्रियाम् ।
दृष्ट्वा पुनर्न्यवर्तिष्ट स्त्रीष्ववज्ञा हि दुःसहा ॥ 56

तावता - அவ்வளவிலே, अर्धासनात् - அர்த்தாசனத்தினின்றும், भ्रष्टां - விழுந்திருப்பாளாய், नष्टासुं - மூர்ச்சையுடைத்தாய் இருப்பாளாய், गर्भिणीं प्रियां - தேவியை, दृष्ट्वा - கண்டு, पुनः - பிற்பாடு, न्यवर्तिष्ट - திரும்பினான். तथाहि - அப்படியன்றோ, स्त्रीषु - ஸ்திரியிடங்களிலே, अवज्ञा - அவக்ஞையானது, दुःसहा हि - சகிக்கிறதிற்கு அரிதன்றோ. 56

*பொருள் : - அச்செய்தியைக் கேட்டவுடனேயே, அரியாசனத்தின் ஒரு பகுதியில் அமர்ந்திருந்த அவன் மனைவி மயக்கமுற்றாள். அதைக்கண்டு அவன், அவளை நோக்கித் திரும்பினான். பெண்களுக்கு ஏற்படும் அவமரியாதையை சகித்துக்கொள்ள முடியாது அல்லவா ?*

अबोधयच्च तां पत्नीं लब्धबोधो महीपतिः ।
तत्त्वज्ञानं हि जागर्ति विदुषामार्तिसंभवे ॥ 57

लब्धबोधः - பெறப்பட்டஞானத்தையுடைய, महीपतिः - ராஜாவானவன், तां पत्नीं च - அந்த தேவியையும், अबोधयत् - போதித்தான், तथाहि - அப்பிடியன்றோ, विदुषां - வித்வாம்சகர்களுக்கு, आर्तिसंभवे - துக்கம் வந்த இடத்திலே, तत्त्वज्ञानं - தத்வஞானமானது, जागर्ति - விழித்திராநின்றதன்றோ.

*பொருள் : - தன் நிலையுணர்ந்த அரசன், அவளை மீண்டும் நினைவு பெறச்செய்தான். அவளுக்கு இவ்வாறு அறிவுரை கூறினான். சான்றோர்களுக்குத் துயர் ஏற்படும்போது நுண்ணறிவு விழித்துக்கொள்ளும் அல்லவா ?*

शोकेनालमपुण्यानां पापं किं न फलप्रदम् ।
दीपनाशे तमोराशिः किमाह्वानमपेक्षते ॥ 58

शोकेन - துக்கத்தினாலே, अलं - அமைத்து, अपुण्यानां - புண்ணியமில்லாதவர்களுக்கு, पापं - பாபமானது, फलप्रदम् - பலத்தை கொடுக்கிறதானது, तथाहि - அப்படியன்றோ, दीपनाशे - தீபம் அவிந்த இடத்திலே, तमोराशिः - இருட்டினுடைய சமூகமானது, आह्वानम् - அழைக்கிறதை, अपेक्षते किं - அபேக்ஷியாநின்றதோ. 58.

*பொருள் : - சான்றோர்களுக்குத் துயரை அளிப்பதால் தீச்செயல் இழைப்பதே அவர்களுக்கு நற்பயனை வழங்குகிறது. விளக்கின் ஒளி அழியும்போது, இருட்டுக்கு அழைப்பிதழ் அனுப்பத் தேவையில்லை. (அதாவது நன்மை அழியும்போது தீமை தானாக வந்துவிடும் என்பது பொருள்)*

यौवनं च शरीरं च संपच्च व्येति नाद्भुतम् ।
जलबुद्बुदनित्यत्वे चित्रीया न हि तत्क्षये ॥ 59

यौवनञ्च - யௌவனமும், शरीरञ्च - சரீரமும், संपच्च - சம்பத்தும், व्येति - விநாசத்தை அடையாநின்றது. अद्भुतम् - ஆச்சரியமானதல்ல, तथाहि - அப்படியன்றோ, जलबुद्बुदनित्यत्वे - நீர்குமிழியினிடையே நித்யத்வத்திலே, चित्रिया - ஆச்சரியம், तत्क्षये - அதனுடைய சமயத்திலே, नहि - இல்லையன்றோ. 59

பொருள் : - இளமை, உடல், பொருட்கள் இவை அழிவதில் வியப்படைய ஒன்றுமில்லை. நீர்க்குமிழி தோன்றி அழிவதில் வியப்படைய ஒன்றுமில்லை. அதாவது இளமை, உடல், பொருட்கள் ஆகியவை தோன்றி, உடனே மறையும் நீர்க்குமிழிக்கு ஒப்பானவை. இதில் வியப்புக்குக் காரணம் இல்லை.

संयुक्तानां वियोगश्च भविता हि नियोगतः ।
किमन्यैरङ्गतोऽप्यङ्गी निःसङ्गो हि निवर्तते ॥ 60

संयुक्तानां - சம்யோகமான வஸ்த்துக்களிடையே, वियोगश्च - பிரிவும், हि - ஸ்புடமாக, नियोगतः - நிச்சயத்தினின்றும், भाविता - ஆகக்கடவது. अङ्गी - ஜீவனானது, अङ्गतोऽपि - சரீரத்தினின்றும், निःसङ्गः - க்ஷேமமாக, निवर्तये - நிகர்த்தியாநின்றதன்றோ, अन्यैः - அன்யங்களினாலே, किं - என்ன. 60.

பொருள் : - சேர்ந்திருப்பவர்களின் பிரிவு, என்பது நிச்சயமாக ஏற்படும். உடலினின்று, உயிர் பிரிவதுபோல அது. ஈடுபாடு அற்றவனைப் பிரிவு ஏதொன்றும் செய்யாது.

अनादौ सति संसारे केन कस्य न बन्धुता ।
सर्वथा शत्रुभावश्च सर्वमेतद्धि कल्पना ॥ 61

संसारे - சம்சாரமானது, अनादौसति - அனாதியாய், உண்டாயுள்ளளவில், कस्य - அவனுக்கு, केन - எவனாலே, बन्धुता - பந்துத்வமானது, न - அல்ல, सर्वथा - சர்வ பிரகாரத்தினாலே, शत्रुभावश्च - சத்ரு ஸ்வரூபமும், एतत् सर्व - இவைகள் எல்லாம், कल्पना हि - கல்பனையன்றோ. 61

*பொருள் :- தொடக்கமற்ற இவ்வுலக வாழ்வில் யார் யாருக்கு உறவு ? எப்போதும் விரோதி என்பதும் எவ்வாறு ? இவையாவும் வெறும் கற்பனையே.*

इति धर्म्यं वचस्तस्या लेभे नैव पदं हृदि ।
दग्धभूम्युप्तबीजस्य न ह्यङ्कुरसमर्थता ॥ 62

इति - என்று, धर्म्यं - தர்ம்யமான, वचः - வசனமானது, तस्याः - அந்த விஜயமகாதேவியினுடைய, हृदि - மனதிலே, पदं - ஸ்தானத்தை, लेभे - பெற்றது. नैव - இல்லையே, तथाहि - அப்படியன்றோ, दग्धभूम्युप्तबीजस्य - சுடப்பட்ட பூமியிலே விதைக்கப்பட்ட விதைக்கு, अङ्कुरसमर्थता - முளைக்கிற சாமர்த்தியமானது, नहि - இல்லையன்றோ.

*பொருள் :- இப்படிப்பட்ட அரசனின் சொற்கள், அவன் மனைவி விஜயமகாதேவியின் மனதில் நிலைபெறவில்லை. பாலைவனத்தில் விதைக்கும் விதை முளைக்காதல்லவா ? (அதாவது துயராகிய வெம்மையால் மனம் வெந்திடும் வேளையில் நற்சொற்களாகிய விதைகள், விதைக்கப்பட்டாலும் (அறிவுறுத்தப்பட்டாலும்) முளைப்ப தில்லை.*

*க்ஷத்ர - 5*

अयं त्वापन्नसत्वां तामारोप्य शिखियन्त्रकम् ।
स्वयं तद्भ्रामयामास हन्त क्रूरतमो विधिः ॥ 63

अयं - இந்த ராஜாவானவன், आपन्नसत्वां - தாய்மையை அடைந்திருக்கிற, तां - அந்த விஜயமகாதேவியை, शिखियन्त्रकम् - மயில்பொறியை, आरोप्य - ஆரோபித்து, स्वयं - தான், तत् - அந்த மயில்பொறியை, भ्रामयामास - ஸ்ரஜிக்கப்பண்ணினான், हन्त - கெட்ட கெட்ட, तथाहि - அப்படியன்றோ, विधिः - கர்மமானது, क्रूरतमो हि - மிகவும் க்ரூரமன்றோ. 63.

*பொருள் : - தாய்மைப்பேற்றை அடைந்திருக்கும் அந்த விஜயமாதேவியை அரசன், (தான் முன்னமே செய்து வைத்திருந்த) மயிற்பொறி மீது ஏற்றித்தானே அதனை உயரப் பறக்கவிட்டான். விதி மிகமிகக் கொடுமையானது.*

वियतास्मिन्गते योद्धुं स मोहादुपचक्रमे ।
न ह्यङ्गुलिरसाहाय्या स्वयं शब्दायतेतराम् ॥ 64

எது, अस्मिन् - இந்த மயில் பொறியானது, वियता - ஆகாசத்கினாலே, गते - அடைந்துள்ளளவில், सः - அந்த ராஜா, योद्धुं - யுத்தம் பண்ணுகிறதற்கு, मोहात् - மோஹத்தினின்றும், आचक्रमे - தொடங்கினான். तथाहि - அப்படியன்றோ, असाहाय्या - ஸஹாயமில்லாத, अङ्गुलिः - விரலானது, स्वयं - தான், शब्दायते तरां - மிகவும் சப்தமாக, नहि - இல்லையன்றோ.

*பொருள் : - மயிற்பொறி விண்ணை அடைந்தவுடன், அரசன் தனியாக இருந்தாலும், அவர்களுடன் போரிடத்*

துணிந்தான். கட்டைவிரல் தனித்திருந்தாலும் மற்ற விரல்களுடன் சேர்ந்தால்தானே வேலை செய்ய இயலும் ? அதாவது, கட்டைவிரல் தனியாக இருந்தாலும் மற்றவிரல்கள் அதனுடன் சேர்ந்தால்தான் நன்கு வேலை செய்ய இயலும். அரசன் கட்டைவிரலை ஒத்தவன். மற்றவர்கள் மற்ற நான்கு விரல்களுக்கு ஒப்பானவர்கள். மற்ற நான்கு விரல்களும் கட்டை விரலுடன் ஒத்துழையாதபோது, கட்டைவிரலால் என்ன பயன் ?

अयं युद्ध्वा चिरं योद्धा मुधा प्राणिवधेन किम् ।
इत्यूहेन विरक्तोऽभूद्गत्यधीनं हि मानसम् ॥ 65

எது, अयं - பிற்பாடு, योद्धा - யுத்தம் பண்ணுகிற ராஜாவானவன், चिरं - நெடுங்காலம், युद्ध्वा - யுத்தம் பண்ணி, मुधा - வியர்த்தத்தினாலே, प्राणिवधेन - பிராணி வதையினாலே, किं - என்ன, इति - என்று, ऊहेन - விசாரத்தினாலே, विरक्तः - விரக்தியை உடைத்தானவன், आसीत् - ஆனான். तथाहि - அப்படியன்றோ. मानसम् - மனதினிடையே, अभिप्रायं गत्याधीनं हि - கத்யதீனமன்றோ.

பொருள் : - அரசன் நெடுநேரம் போர் புரிந்தான். பின்னர் உயிர்களைக்கொல்வதால் என்ன பயன் என்ற எண்ணம் மேலிட, போரில் ஈடுபாடு அற்றவன் ஆனான். ஒருவனின் எண்ண ஓட்டங்கள் அவனது நடவடிக்கையை ஒட்டியது அல்லவா ? (அதாவது பிறருக்குத் தீமையையே மனதால் எண்ணாத ஒருவன்(அரசன்) போரில் பிறரைக் கொல்வதால் என்ன பயன் என்று எண்ணுவது இயல்பு)

विषयासङ्गदोषोऽयं त्वयैव विषयीकृतः ।
सांप्रतं वा विषप्रख्ये मुञ्चात्मन्विषये स्पृहाम् ॥ 66

अयं - இந்த, विषया सङ्गदोषाः - விஷயாசங்க தோஷமானது, त्वयैव - உன்னாலேயே, विषयीकृतः - விஷய மாகப் பண்ணப்பட்டது, सांप्रतं वा - இப்பொழுதான், विषप्रख्ये - விஷத்துக்கு சமமான, विषये - விஷயத்திலே, आत्मन् - வாராய் ஆத்மனே, स्पृहां - வாஞ்சையை, मुञ्च - விடு. 66

*பொருள் : - அரசன் தனக்குத்தானே இவ்வாறு எண்ணினான். "இந்த உலகப்பொருட்களின் மீதான ஈடுபாட்டுக்கு நீதான் காரணம். அது தவறு. தற்போது நஞ்சுபோன்ற இந்த உலகப்பொருட்களின் மீதுள்ள பற்றை விட்டொழி" (விட்டொழிக்க வேண்டும்).*

भुक्तपूर्वमिदं सर्वं त्वयात्मन्भुज्यते ततः ।
उच्छिष्टं त्यज्यतां राज्यमनन्ता ह्यसुभृद्भवाः ॥ 67

आत्मन् - வாராய் ஆத்மனே, त्वया - உன்னாலே, भुक्तपूर्वं - பூர்வமனுபவிக்கப்பட்டிருகிற, इदं सर्वं - இதெல்லாம், भुज्यते - அனுபவிக்கப்படாநின்றது. ततः - அது காரணத்தினின்றும், उच्छिष्टं - எச்சிலுக்கு சமானமான, राज्यं - ராஜ்யமானது, त्यज्यतां - விடப்பட்டது, तथाहि - அப்படியன்றோ, ह्यसुभृद्भवाः - ஜீவன்களுடைய பவங்கள், अनन्ता हि - அனந்தமன்றோ. 67.

*பொருள் : - ஏ, உயிரே, உன்னால் இவையெல்லாம் முன்னமே அனுபவிக்கப்பட்டுவிட்டன. பிறகு, மீதமிருக்கும் அரசை விட்டுவிடு. ஏனெனில் உடல்களால் கொள்ளப்படும் செயல்கள் முடிவற்றவை. அதாவது இவ்வுடல், இதுவரை எல்லாவற்றையும் முன்னமேயே துய்த்துவிட்டது. மீதமுள்ள அரசுரிமை என்பது எச்சிலுக்குச் சமமானது. மனிதன் இப்பிறப்பில் செய்த செயல்களுக்கான பயன்கள் எண்ணிலடங்கா. ஆகவே இப்பிறப்பில் ஏற்பட்டுள்ள இன்பதுன்பங்களை விட்டொழிக்கவேண்டும்.*

अवश्यं यदि नश्यन्ति स्थित्वापि विषयाश्चिरम् ।
स्वयं त्याज्यास्तथा हि स्यान्मुक्तिः संसृतिरन्यथा ॥68

எது, विषायाः - விஷயங்கள், चिरं - நெடுங்காலம், स्थित्वापि - இருந்தும், अवश्यं - நிச்சயமாக, नश्यति - நாசமாக நின்ற து ஆகில், स्वयं - தான், त्याज्याः - விடப்படும், - तथाहि - அப்படியாகில், मुक्तिः - மோக்ஷமானது, स्यात् - 'ஆகக்கடவது,' अन्यथा - அல்லாவிட்டால், संसृतिः - சம்சாரமானது, स्यात् - ஆகக்கடவது, 68.

பொருள் : - வெகுகாலம் இருந்துவிட்டு, இவ்வுலகப்பற்று தானாகவே அழிந்து போனாலும் கூட, அவைகளை ஒருவன் தானாகவே முன்வந்து,அவை விலகிச்செல்லுமுன்னரே விட்டொழிக்க வேண்டும். அப்படிச்செய்தால் வீடுபேறு நிச்சயம். இல்லாவிட்டால், மீண்டும் உலகவாழ்வுதான் ஏற்படும். அதாவது, ஈடுபாட்டை துறந்தால் வீடு உறுதி. ஈடுபாட்டைக் கொண்டால் மறுபிறவி உறுதி.

त्यज्यते रज्यमानेन राज्येनान्येन वा जनः ।
भज्यते त्यज्यमानेन तत्त्यागोऽस्तु विवेकिनाम् ॥ 69

எது, रज्यमानेन - ஆசையா இருக்க வேணும் என்றிருக்கிற, राज्येन - ராஜ்ஜியத்தினாலேதான், अन्येन वा - அன்யமான வஸ்துவினாலேதான், जनः - ஜனமானது, त्यजयते - விடப்படாநின்றது. त्यजयमानेन - விடவேணும் என்றிருக்கிற ராஜ்ய முதலானதினாலேதான், भज्यते - பஜிக்கப்படா நின்றது. तत्त्यागः - அந்த ராகத்வேஷங்களிடையே விடுகையானது, विवेकिनां - விவேகிகளுக்கு, अस्तु - ஆகக்கடவது. 69.

பொருள் : - ஈடுபாடு கொண்டுள்ள அரசையோ, மற்ற பொருட்களையோ ஒருவன் விட்டுவிட்டால், அதனை விட்டதாலேயே அவன் போற்றப்படுகிறான். பகுத்தறிவு கொண்டவன் அப்படிப்பட்ட தியாகத்தைச் செய்ய வேண்டும்.

इति भावनया राजा वैराग्यं परमीयिवान् ।
त्यक्त्वा सङ्गं निजाङ्गं च दिव्यां संपदमासदत् ॥ 70

एतु, इति - என்று, भावनया - பாவனையினாலே, परं - உத்கிருஷ்ட்டமான, वैराग्यं - வைராக்யத்தை, यिवान् - அடைந்திருக்கிற, राजा - ராஜாவானவன், सङ्गञ्च - பரிகிரஹத்தையும், निजाङ्गञ्च - தன்னுடைய சரீரத்தையும், त्यक्त्वा - விட்டு, दिव्या - தேவ சம்மந்தமான, संपदं - சம்பத்தை, आसदत् - அடைந்தான்.

பொருள் : - இப்படிப்பட்ட எண்ணங்களால் அரசன் உலகின் பொருட்களின்மீது மிகுந்த பற்றற்ற தன்மையை அடைந்தான். ஈடுபாட்டையும், தனதுடலையும் ஒருங்கே துறந்த அரசன் விண்ணுலகச் செல்வத்தை அடைந்தன்.

पौरा जानपदाः सर्वे निर्वेदं प्रतिपेदिरे ।
पीडा ह्यभिनवा नृणां प्रायो वैराग्यकारणम् ॥ 71

पौराः - புரஜனங்கள், जानपदाः - தேச ஜனங்கள், सर्वे - சமஸ்தர்கள், निर्वेदां - வைராக்கியத்தை, प्रतिपेदिरे - அடைந்தார்கள், तथाहि - அப்படியன்றோ. नृणां - மனுஷ்யர்களுக்கு, अभिनव - நூதனமான, पीडाः - பீடையானதுகள், மிகவும் वैराग्यकारणं हि - வைராக்யகாரணமன்றோ. 71.

*பொருள் : - நகரத்து மக்கள் யாவரும் உலகப் பொருட்களில் உள்ள ஈடுபாட்டைத்துறந்தனர். பொதுவாகப் புதிய துன்பங்கள் மனதுக்குப் பற்றற்ற நிலையை அளிக்கின்றன. அதாவது, அரசனின் மரணம், மக்களுக்குத் துன்பத்தை விளைவித்ததால், அவர்களும் அரசனைப் போன்றே உலகப்பொருட்களில் ஈடுபாடு கொள்ளாமல் இருந்தனர். (அரசனின் இறப்பு இங்கு புதிய துன்பமாகக் கொள்ளப்படுகிறது)*

अधिस्त्रि रागः क्रूरोऽयं राज्यं प्राज्यमसूनपि ।
तद्वञ्चिता हि मुञ्चन्ति किं न मुञ्चन्ति रागिणः ॥ 72

எது, तद्वञ्चिताः - அந்த ஸ்திரிகளினாலே, வாஞ்சிக்கப்பட்டவர்கள், प्राज्यं - பெரிதான, राज्यमपि - ராஜ்யத்தை உண்டான ஆசையானது, क्रूरः - க்ரூரமானது, तथाहि - அப்படியன்றோ. रागिणः - ஆசையுடையவர்கள், किन्न मुञ्चन्ति - எண்ணத்தை விடாநின்றார்களல்ல. 72.

*பொருள் : - அந்த பெண்களைக் குறித்த ஈடுபாடு மிகக் கொடுமையானது. அவர்களால் வஞ்சிக்கப் பட்டவர்கள், பெரிய உயிரையும் கூட விட்டுவிடுகின்றனர். ஆசை கொண்டவர்கள் எதைத்தான் விடமாட்டார்கள் ? பெண்ணாசையாலே அரசன், காஷ்டாங்காரனிடம் அரசை ஒப்படைத்து, அதனையும் இழந்து, உயிரையும் இழந்து, அவன் விருப்புக்கொண்ட மனையாளையும் இழந்துவிட்டான். பெண்ணாசையாலே எல்லாவற்றையும் இழக்கவேண்டியதுதான்.*

किं कीदृशं कियत्क्वेति विचारे सति दुःसहम् ।
अविचारितरम्यं हि रामासंपर्कजं सुखम् ॥

किं - என்ன, कीदृशं - எப்படிப்பட்டது. कियत् - எவ்வளவு, वा - அல்லது, इति - என்று, विचारे - விசாரமானது, सति - உண்டாயுள்ளளவில், दुःसहम् - பொறுக்க முடியாதது, सति - உண்டான, रामासंपर्कजं - பெண்ணின் சேர்க்கையினால் ஏற்படும், सुखं - சுகமானது, अविचारितरम्यं हि - விசாரமில்லாததத்தினாலே ரம்யமன்றோ.

*பொருள் : - என்ன, எப்படிப்பட்டது, எவ்வளவு, எங்கு என்ற விசாரணைகளைப் பொறுக்காத, எந்தவிதமான ஆலோசனைகளுமற்ற அழகைக்கொண்டது, அழகிய பெண்ணின் சேர்க்கையால் ஏற்படும் இன்பம். (அதாவது அழகிய பெண்ணின் சேர்க்கை எந்தவிதமான கேள்விகளுக்கும் அப்பாற்பட்ட இன்பம் என்பது பொருள்)*

निवारिताप्यकृत्ये स्यान्निष्फला दुष्फला च धीः ।
कृत्ये तु नापि यत्नेन कोऽत्र हेतुर्निरूप्यताम् ॥ 75

धीः - புத்தியானது, अकृत्ये - அக்ருத்யமான பாப கார்யத்திலே, निवारितापि - தடையிடப்பட்டாலும், निष्फला - நிஷ்பலமானதும், दुष्फलात् - துஷ்பலமானதும், स्यात् - ஆகக்கடவது. तु - விசேஷமுண்டு, कृत्ये - தர்மகார்யத்திலே, यत्नेनापि - பிரயத்தினத்தினாலேயும், न - ஆகக்கடவதல்ல. अत्र - இவ்விடத்திலே, हेतुः - காரணமானது, कः - எது, निरूप्यताम् - சொல்லப்படுமது.75

*பொருள் : - இதைச் செய்யக்கூடாது என்று தடுத்தாலும், பயனற்ற அல்லது தீயபயனைத்தரக்கூடிய செயலில்தான் புத்தி செல்லும்; செய்ய வேண்டிய செயலில் மிகுந்த முயற்சி செய்தாலும் புத்தி செல்வதில்லை. இதற்குக் காரணம் எது என்று நிரூபியுங்கள்!*

निश्चित्याप्यघहेतुत्वं दुश्चित्तानां निवारणे ।
येनात्मन्निपुणो नासि तद्धि दुष्कर्मवैभवम् ॥ 76

अघहेतुत्वं - பாபகாரணத்தை, निश्चित्यापि - நிச்சயம் பண்ணியும், दुश्चित्तानां துச்சித்தங்களிடையே, निवारणे - நிவாரிக்கிறதிலே, येन - யாதொரு கர்மத்தினாலே, आत्मन्- ஆத்மனே, निपुणः - நிபுணனானவன், असि - ஆகா நின்றாய், न - இல்லை, तत् - அது, दुष्कर्म वैभवं हि - துஷ்கர்மத்தினுடைய விபவமன்றோ. 76

*பொருள் : - கெட்டவர்களை விலக்குவதற்காக, அவர்களின் வாயிலாக அடையக்கூடிய துன்பங்களை அறிந்திருந்தபோதிலும், ஒருவன் தன்னையும், தன் நிலையையும் புரிந்து கொள்ளாமல் இருப்பது ஊழ்வினையின் பயன் ஆகும்.*

हेये स्वयं सती बुद्धिर्यत्नेनाप्यसती शुभे ।
तद्धेतुकर्म तद्धन्तमात्मानमपि साधयेत् ॥ 77

हेये - பாபகார்யத்திலே, स्वयं - தான், बुद्धिः - புத்தியானது, सती - பிரசஸ்தமானது, शुभे - புண்ணிய

कार्यत्तिலே, यत्नेनापि - பிரயத்தினத்தினாலேயும், असति - அப்பிரசஸ்த்தமானது, तद्धेतुः - அதுக்குக் காரணம், कर्म - கர்மமானது, तद्वन्तं - அந்த கர்மத்தை உடைய, आत्मानमपि - தன்னையும், साधयेत् - சாதிக்கக்கடவது. 77.

பொருள் : - புத்தி தான் இருக்கும்போது தானாகவே ஊகித்துக்கொள்ளும் திறமை கொண்டது. நற்செயல்களில் ஈடுபாடு இல்லாதபோதும் பெரு முயற்சியுடன் ஈடுபடவைப்பதுவும் அதுவே அதற்குக் காரணமான ஊழ்வினை, அதைப்போலவே தன்னைத்தான் உணர்தலையும் தரவல்லது.

कोऽहं कीदृग्गुणः क्वत्यः किंप्राप्यः किंनिमित्तकः ।
इत्यूहः प्रत्यहं नो चेदस्थाने हि मतिर्भवेत् ॥ 78

कोऽहं - நான், कः - எவன், कीदृग्गुणः - எப்படிப்பட்ட குணத்தை உடையவன், क्वत्यः - எங்கு நின்றும் வந்தவன், किं प्राप्यः - எதனை அடைந்தவன், किंनिमित्तः - என்ன காரணத்தை உடையவன், इति - என்று, ऊहः - விசாரமானது, प्रत्यहं - நாள்தோறும், नोचेत् - இல்லையாகில், अस्थाने - ஸ்தானமில்லாத, मतिः - புத்தியானது, भवेत् - ஆகக்கடவது.

பொருள் : - நான் யார், நான் எப்படிப்பட்ட தன்மையை உடையவன், எங்கிருந்து தோன்றியவன், எதனை அடைய வல்லமை கொண்டவன், எதனைக் காரணமாக உடையவன் என்ற ஊகம் ஒவ்வொரு நாளும் ஒருவனுக்கு இல்லையென்றால், மனம் தகாத இடத்திற்குத்தான் செல்லும்.

मुह्यन्ति देहिनो मोहान्मोहनीयेन कर्मणा ।
निर्मिताज्निर्मिताशेषकर्मणा धर्मवैरिणा ॥ 79

देहिनः ஜீவன்கள், निर्मिताशेषकर्मणा - நிச்சிக்கப்பட்டிருக்கிற சமஸ்த கர்மத்தை உடைய, धर्मवैरिणा - தர்மத்து்கு வைரியான, मोहनीयेन - மோஹனீய சம்மந்தமான, कर्मणा - கர்மத்தினாலே, निर्मितात् -நிச்சித்தான நிர்ஜிக்கப்பட்டிருக்கிற, मोहात् - மோஹத்தினின்றும், मुह्यन्ति- மோஹியா நின்றார்கள். 79

*பொருள் : - உயிரினங்கள் யாவும், அறியாமையால், மயக்கம் தரக்கூடிய செயல்களைச் செய்து, தவறான வழியில் செல்கின்றவை. அந்த மயக்கம் அறத்திற்கு எதிரி. அதுவே எல்லாத் தவறான செய்கைகளையும் வகுக்கிறது. அந்த மயக்கம் விதியால் வகுக்கப்பட்டது.*

किं नु कर्तु त्वयारब्धं किं नु वा क्रियतेऽधुना ।
आत्मन्नारब्धमुत्सृज्य हन्त बाह्येन मुह्यसि ॥ 80

किं नु - என்னதான், कर्त्तु - பண்ணுகிறதற்கு, त्वया - உன்னாலே, आरब्धं - துடங்கப்பட்டது, किं नु वा - என்னதான், अधुना - இப்பொழுது, क्रियते - பண்ணப்படாநின்றது. आत्मन् - வாராய், आत्मने आरब्धं - துடங்கினதை, उत्सृज्य - விட்டு, वाह्ये - பாஹ்யத்திலே, हि - ஸ்புடமாக, मुह्यसि - மோஹியா நின்றாய், हन्त - கெட்ட கெட்ட. 80

***பொருள் : - ஏ உயிரே, நீ எதைச் செய்யத் துவங்கினாய்? இப்போது நீ என்ன செய்கிறாய் ? எதைச் செய்யத் துவங்கினாயோ அதை விட்டுவிட்டு, வெளித்தோற்றத்தைக் கண்டு மயக்கமுறுகிறாயே !***

इदमिष्टमनिष्टं वेत्यात्मन्संकल्पयन्मुधा ।
किं नु मोमुह्यसे बाह्ये स्वस्वान्तं स्ववशीकुरु ॥ 81

इदं - இது, इष्ट वा - இஷ்டம்தான், अनिष्टं वा - அநிஷ்டம்தான். इति - என்று, आत्मन् - வாராய் ஆத்மனே, मुधा - வ்யர்த்தத்தினாலே, संकल्पयन् - சங்கல்ப்பியா நின்றவனாய்க்கொண்டு, बाह्ये - பாஹ்யத்திலே, किं नु - என்னதான், मोमुह्यसे - மோஹியா நின்றாய், स्वस्वान्तं - தன்னுடைய மனதை, स्ववशी - ஸ்வவசமாக, कुरु - பண்ணு.

*பொருள் : - உயிரே ! இது விருப்பமானது அல்லது விரும்பத்தகாதது என்ற எண்ணங்களைக் மனதில்கொண்டு, வெளிப்படையாக மயக்கமுறுகிறாயே ! உன்னை நீ முதலில் உன் வயப்படுத்து.*

लोकद्वयाहितोत्पादि हन्त स्वान्तमशान्तिमत् ।
न द्वेक्षि द्वेक्षिते मौढ्यादन्यं संकल्प्य विद्विषम् ॥ 82

लोकद्वयाहितोत्पादि - இகபரலோகத்திற்கும் அஹிதத்தை உண்டாக்குவதான, अशान्तिमत् - சாந்தியல்லாத, स्वन्तं - தன்னுடைய மனதை, न द्वेक्षि - த்வேக்ஷியா நின்றாயில்லை. मौढ्यात् - மூடத்தினின்றும், अन्यं - அன்யனை, विद्विषं - சத்ருவாக, संकल्प्य - சங்கல்பித்து, द्वेक्षिते - த்வேஷியா நின்றாய், हन्त - கெட்ட கெட்ட. 82

*பொருள் : - ஐயோ ! இம்மையிலும், மறுமையிலும் நன்மை பயக்காத, அமைதியற்ற தன் மனதை வெறுக்காமல், தனது முட்டாள்தனத்தால், வேறொருவனைப் பகைவனாக எண்ணி, அவனை வெறுக்கிறாயே.*

अन्यदीयमिवात्मीयमपि दोषं प्रपश्यता ।
कः समः खलु मुक्तोऽयं युक्तः कायेन चेदपि ॥ 83

आत्मीयं - தன்னுடைய சம்மந்தமான, दोषं - தோஷத்தை, इव - போல, अन्यदीयमपि - அன்யனுடைய சம்மந்தமான, प्रपश्यता - பார்க்கிறவனோட, समः - சமானமானவன், कः - எவன், अयं - இவன், खलु - ஸ்புடமாக, कायेन - சரீரத்தோட, युक्तः - கூடப்பட்டவன், चेदपि - ஆகிலும், मुक्तः - முக்தனானவன். 83

*பொருள் : - பிறர் செய்த தவறையும் தான் செய்த தவறுபோல் கருதி, எவனொருவன் இரண்டுக்கும் ஒரே அளவிலான முடிவை எட்டுகிறானோ அவனே உடலோடு உயிருடன் இருப்பினும், வீடுபேறு பெற்றவன் ஆவான்.*

इत्याद्यूहपरे लोके केकी तु वियता गतः ।
पातयामास राज्ञीं तां तत्पुरप्रेतवेश्मनि ॥ 84

लोके - ஜனமானது, इत्यादूहपरे - இது முதலான விசார தாத்பர்யத்தையுடைத்தாய் உள்ளளவில், तु - பின்னை, वियता - ஆகாயத்தினாலே, गतः - அடையப்பட்டிருக்கிற, केकी - மயில்பொறியானது, तां राज्ञीं - அந்த விஜயமகாதேவியை, तत्पुरप्रेतवेश्मनि - அந்த ராஜமகாபுரத்தினுடைய ஸ்மசான பூமியிலே, पातयामास - விழப்படுத்தித்து.

*பொருள் : - இவ்வாறு (அரசன்) ஆராய்ச்சி செய்து கொண்டு இருக்கும்போது, சத்யந்திரனால் வானத்தில் அனுப்பப்பட்ட மயிற்பொறி விஜயமகாதேவியைச் சுமந்தவாறு மயானத்தின் தரையில் வீழ்ந்தது.*

* जीवानां पापवैचित्रीं श्रुतवन्तः श्रुतौ पुरा ।
पश्येयुरधुनेतीव श्रीकल्पाभूदकिंचना ॥ 85

जीवानां - ஜீவன்களுக்கு, पापवैचित्रीं - பாபவிசித்திரத்தை, पुरा - முன்னே, श्रुतौ - சாஸ்த்திரத்திலே, श्रुतवन्तः - கேளா நின்றவர்கள், अधुना - இப்பொழுது, इति इव - என்றது போல, पश्येयुः - கண்டார்கள், तथाहि - அப்படியன்றோ, श्रीकल्पा - ஐச்வர்யகல்ப்பனையும், अकिञ्चना - ஒன்று மில்லாதது, अभूत् - ஆச்சுது. 85

*பொருள் : - உயிர்களின் ஊழ்வினை பற்றி அறிவியல் நூல்கள் வாயிலாக அறிந்திருந்த சான்றோர், இப்போது அதனைக் கண்ணால் கண்டனர். (நல்வினையின் உருவமாக இருந்த அவள் ஒன்றுமில்லாமல் மயானத்தில் வீழ்ந்து கிடந்தாள்)*

क्षणनश्वरमैश्वर्यमित्यर्थं सर्वथा जनः ।
निरणैषीदिमां दृष्ट्वा दृष्टान्ते हि स्फुटा मतिः ॥ 86

जनः - ஜனமாவது, सर्वथा - சர்வபிரகாரத்தினாலே, ऐश्वर्यम् - ஐச்வர்யமானது, क्षणनश्वरं - க்ஷணத்திலே கெடுக்கிறது, इति - என்று, अर्थं - இந்த அர்த்தத்தை, इमां - இந்த விஜயமகாதேவியை, दृष्ट्वा - கண்டு, निरणैषीत् - நிச்சயம் பண்ணுவித்து, तथाहि - அப்படியன்றோ, दृष्टान्ते - த்ருஷ்டாந்தத்திலே, मतिः - புத்தியானது, स्फुटा हि - வியர்த்தமன்றோ. 86

---

* *உண்டெனவுரையிற் கேட்பா ருயிருறு பாவமெல்லாங்*
*கண்டினித் தெளிகவென்று காட்டுவாள் போலவாகி*
*விண்டொடநிவந்த கோயில்விண்ணவர் மகளிற் சென்றாள்*
*வெண்டலை பயின்ற காட்டுள் விளங்கிழை தமியளானாள்.*
*(சீவகசிந்தாமணி)*

*பொருள் : - இந்த விஜயமகாதேவியைக் கண்டு, மக்கள், தாம் பெற்றிருக்கும் செல்வம் யாவும், ஒரு கணநேரத்தில் அழியக் கூடியது என்ற உண்மையை அறிந்து கொண்டனர். எடுத்துக்காட்டைக் கண்ட அறிவு தெளிவடையுமல்லவா ?*

पूर्वाह्ने पूजिता राज्ञी राज्ञा सैवापराह्णके ।
परेतभूशरण्याभूत्पापाद्विभ्यन्तु पण्डिताः ॥ 87

पूर्वाह्ने - பூர்வாங்கத்திலே, पूजिता - பூஜிக்கப்பட்டிருக்கிற, राज्ञी - விஜயமஹாதேவி, राज्ञा - ராஜாவினாலே, सैव - அவளே, अपराह्णके - அபரானஹகத்திலே, परेतभूशरण्या - ச்மசானபூமியை சரணமாக உடைத்தானவன், अभूत् - ஆனான், तथाहि - அப்படியன்றோ. पापात् - பாபத்தினின்றும், पण्डिताः - வித்வாம்சர்கள், बिभ्यन्तु - பயப்படாநின்றார்களன்றோ. 87

*பொருள் : - முற்பகலில் அரசனால் போற்றப்பட்ட அரசி, பிற்பகலில் பிரேதங்கள் விளங்கும் இடத்தைச் சரணடைந்தாள் என்பதால், அறிவாளிகளே ! தீவினைகண்டு அஞ்சுங்கள்.*

सा तु मूर्च्छापराधीना सूतिपीडामजानती ।
मासि वैजनने सूनुं सुषुवे हन्त तद्दिने ॥ 88

तु- பின்னை, मूर्च्छपराधीना - மூர்ச்சாபராதினையாய், सूतिपीडां प्रसूति - ப்ரஸூதி பீடையை, अजानती - அறியாதவா இருக்கிற, सा - அந்த விஜயமஹாதேவி யானவள், वैजनने मासि - தனது மகப்பேற்றின் கடைசி மாதத்திலே, तद्दिने - அந்த திவசத்திலே, सूनुं - புத்திரனை, सुषुवे - பெற்றாள், हन्त - கெட்டகெட்ட. 88

பொருள் : - மூர்ச்சையடைந்த அரசி, மகப்பேற்றின் துயரை அறியாதவளாக, அம்மகப்பேறு காலத்தின் முடிவாகிய அந்த நாளில்(மயானத்தில் இறங்கிய நாளில்) மகனை ஈன்றெடுத்தாள்.

तावता देवता काचिद्धात्रीवेषेण सन्यधात् ।
तत्रैव पुत्रपुण्येन पुण्ये किं वा दुरासदम् ॥ 89

तावता - அவ்வளவினாலே, काचित् - ஒரு தேவதையானது, धात्रीवेषण -தாத்ரிவேஷத்திலே, तत्रैव - அவ்விடத்திலேயே, पुत्रपुण्येन - புத்திரனுடைய புண்ணியத்திலே, सन्यधात् - சன்னிதியாச்சுது, तथाहि - அப்படியன்னே, पुण्ये - புண்ணியமானது உண்டாகியுள்ள அளவில், , दुरासदम् - துர்லபமானது, किं वा - என்னதான்.

பொருள் : - நல்வினைக்கு ஈடு இணை உண்டோ! அப்போது முன்வினைப்பயனால் ஒருதேவதை தாதியுருக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தது.

तां पश्यन्त्या अभूत्तस्या उद्वेलः शोकसागरः ।
सन्निधौ हि स्वबन्धूनां दुःखमुन्मस्तकं भवेत् ॥ 90

तां - அந்த தேவதையை, पश्यन्ताः - பாராநின்றிருக்கிற, तस्याः - அந்த விஜயமஹாதேவிக்கு, शोकसागरः - துக்க சமுத்திரமானது, उद्वेलः - கரை மீறினது, अभूत् - ஆச்சுது, तथाहि - அப்படியன்றோ. स्वबन्धूनां - ஸ்வபந்துக்களுடைய, सन्निधौ - சன்னிதியிலே, दुःखं - துக்கமானது, उन्मस्तकं - சிரசை மீறினது, भवेद्धि - ஆகக்கடதன்றோ. 90

*பொருள் : - அந்தத் தேவதையைக் கண்டவுடன் அவளது துயர்க்கடல் கரைகடந்தது. தமது உறவினர் முன் துயர் மிக அதிகமாகிவிட்டால் , தலைக்கு மேலே வெள்ளம் போனது போல் ஆகிவிடும் அல்லவா ?*

देवता तु समाश्वास्य जातमाहात्म्यवर्णनैः ।
ऊर्णादि दर्शनोद्भूतैर्देवीं तामित्यवोचत ॥ 91

तु - பின்னை, देवता - தேவதையானது, जातमाहात्म्य वर्णनै: - பிறந்த புத்திரனுடைய மாஹாத்மியத்தை வர்ணிக்கிறவர்களான, ऊर्णादिदर्शनोत्पातै: - சுழி முதலானதைக் காட்டுகிற பிரசஸ்தங்களினாலே, तां देवीं - அந்த தேவியை, समाश्वास्य - விஸ்வஸிக்கப்பண்ணுவித்து, इति - என்று, अवोचत - சொல்லப்பட்டது, 91.

*பொருள் : - அங்கு வந்த தேவதை அவளைத் தேற்றியது. மகப்பேற்றின் உயர்வினைப்பற்றியும், அந்த மகனின் உடலில் காணப்படும் அரசச் சின்னங்களான சுழி, மச்சம் இவைகளைச் சுட்டிக்காட்டியபடி அவளிடம் இவ்வாறு கூறத்துவங்கியது.*

पुत्राभिवर्धनोपाये देवि चिन्ता निवर्त्यताम् ।
क्षत्रपुत्रोचितं कश्चिदेनं संवर्धयिष्यति ॥ 92

पुत्राभिवर्द्धनोपाये - புத்திரனை வர்த்திக்க பண்ணவேணாமென்கிற உபாயத்திலே, देवि - வாராய் தேவியே, चिन्ता - சிந்தையானது, निवर्त्यताम् - விடப்படுமது, कश्चित् - ஒருத்தன், क्षत्रपुत्रोचितं - ராஜபுத்ர யோக்யமான, एनं - இவனை, संवर्द्धयिष्यति - வளரப்பண்ணிவியா நின்றான். 92

*க்ஷத்ர - 7*

பொருள் : - மகனை வளர்ப்பதில் நீ கவலையுற வேண்டாம் அரசியே, இளவரசனைப்போலவே இவனை ஒருவன் வளர்ப்பான்.

इत्युक्ते कोऽपि दृष्टोऽभूद्विसृष्टप्रेतसूनुकः ।
सूनुं सूनृतयोगीन्द्रवाक्यात्तत्र गवेषयन् ॥ 93

इति - என்று, उक्त - சொல்லியுள்ள அளவில் विसृष्टप्रेतसूनुकः - விடப்பட்ட செத்த பிள்ளையை உடையவனாய், सूनुं - புத்திரனை, सूनृतयोगीन्द्रवाक्यात् - சத்யவசனத்தோடே கூட இருக்கிற, யோகீந்திரனுடைய வாக்யத்தினின்றும், तत्र - அவ்விடத்திலே, गवेषयन् - தேடாநின்றவனாய்க்கொண்டு. कोऽपि - ஒருத்தன், दृष्टः - விஜயமகாதேவியினாலே காணப்பட்டவன், अभूत् - ஆனான். 93

பொருள் : - இவ்வாறு அந்தத் தேவதை கூறியவுடன், இறந்த பிள்ளையை இடுகாட்டில் விட்டுவிட்டு, யோகத்திற் சிறந்த ஒருவரின் சொல்லில் நம்பிக்கை கொண்டிருந்த ஒருவன், அங்கேயே தனது (உயிருடன் இருக்கும்) பிள்ளையைத் தேடுபவனாகக் காணப்பட்டான்.

तद्दर्शनेन तद्वाक्यं प्रमाणं निर्णिनाय सा ।
निश्चलादविसंवादद्वस्तुनो हि विनिश्चयः ॥ 94

तद्दर्शनेन - அந்த கந்தோத்கட செட்டியாரைக் கண்டதினாலே, सा - அந்த விஜயமகாதேவியானவள்,

तद्वाक्यं - தேவதையினுடைய வசனத்தை, प्रमाणम् - பிரமாணமாக, निर्णिनाय - நிச்சயம் பண்ணினான். तथाहि - அப்படியன்றோ, निश्चलात् - நிச்சலமான, अविसंवादात् - மாறுபாடு இல்லாத்தினின்றும், वस्तुनः - வஸ்துவுக்கு, विनिश्चयो हि - நிச்சயமன்றோ. 94

*பொருள் : - அவனைப் பார்த்ததனால் அவளது சொற்களில் நம்பிக்கை கொண்டாள் அரசி. மாறுபாடற்ற திடமான பொருட்கள் உண்மையாக இருக்கின்றன அல்லவா ?*

ततो गत्यन्तराभावाद्देवताप्रेरणाच्च सा ।
पित्रीयमुद्रयोपेतमाशास्यान्तरधात्सुतम् ॥ 95

ततः - அங்குநின்றும், गत्यन्तराभावात् - போக்கிடமில்லாதத்தினின்றும், देवताप्रेरणाच्च - தேவதையினுடைய ஏவலினின்றும், सा - விஜயமகாதேவி யானவள், पित्रीयमुद्रयोपेतं - பித்ரு சம்மந்தமான முத்திரை மோதிரத்தோடு கூடி இருக்கிற, सुतम् - புத்திரனை, आशास्य - ஆசீர்வாதத்தைப்பண்ணி, अन्तरधात् - மறைந்தாள். 95

*பொருள் : - வேறு வழியேதும் புலப்படாத அரசி, தேவதையின் வழிகாட்டுதலின்படி, அந்தக் குழந்தையுடைய முன்னோர்களின் இலச்சினையோடு கூடிய கணையாழியை அக்குழந்தைக்கு அணிவித்து, ஆசி கூறி, (அதனை விட்டுவிட்டு) மறைந்து நின்றாள்.*

गन्धोत्कटोऽपि तं पश्यन्नातृपद्वैश्यनायकः ।
एधोन्वेषिजनैर्दृष्टः किं वा न प्रीतये मणिः ॥ 96

वैश्यनायकः - வைஸ்யமுக்யனான, गन्धोत्कटोऽपि - கந்தோத்கடனும், तं - அவனை, पश्यन् - பாராய் நின்றவனாய்க்கொண்டு, अतृपत् - சந்தோஷித்தான். तथाहि - அப்படியன்றோ, एधोन्वेषिजनैः - விறகு தேடுகிற ஜனங்களினாலே, दृष्टः - காணப்பட்டிருக்கிற, मणिः - ரத்தினமானது, किं वा - என்ன தான், प्रीतये - ப்ரீதியின் பொருட்டு, न - அல்ல. 96

*பொருள் : - கந்தோத்கடன் என்ற வணிகர் குலத்தலைவன் அவன். அந்தக் குழந்தையைக் கண்டபோதே மிகவும் மகிழ்ந்தான். (மனம் நிறைந்தான்). விறகு தேடுபவனுக்கு விலையுயர்ந்த மாணிக்கம் கிடைத்தால் மனம் மகிழமாட்டானா என்ன ?*

हर्षकण्टकिताङ्गोऽयमादधानस्तमङ्गजम् ।
जीवेत्याशिषमाकर्ण्य तन्नाम समकल्पयत् ॥ 97

எது, हर्षकण्टकीताङ्गः - சந்தோஷத்தினாலே மயிர்கூச்சத்தையுடைய சரீரத்தை அடைந்தான். तमङ्गजम् - அந்தபுரத்தினை, आदधानः - தரியாநின்றிருக்கிற, अयं - இந்த கந்தோத்கடனானவன், जीव - ஜீவிக்கக்கடவன், इति - என்று, आशीषं - ஆசீர்வசனத்தை, आकर्ण्य - கேட்டு, तन्नाम - ஜீவந்தரன் என்கிற பேரை, समकल्पयत् - கல்ப்பித்தான். 97

*பொருள் : - மகிழ்ச்சியினால் உடல் புல்லரித்துப் போன அந்த வணிகன் அந்தக் குழந்தையை எடுத்து,*

*"நீண்டநாள் வாழ்க" என்று வாழ்த்தி, ஜீவந்தரன் என்ற பெயரை அக்குழந்தைக்குச் சூட்டினான்.*

अमृतं सूनुमज्ञानात्संस्थितं कथमभ्यधाः ।
इति क्रुध्यन्स्वभार्यायै सानन्दोऽयमदात्सुतम् ॥ 98

अमृतं - அமிருதமில்லாத, सूनुं - புத்திரனை, अज्ञानात् - அக்ஞானத்தினின்றும், संस्थितं - செத்தவனாக, कथं - எப்படி, अभ्यधाः - சொன்னாய், इति - என்று, क्रुध्यन् - கோபியா நின்றவனாய்க்கொண்டு, स्वभार्या - தன்னுடைய தேவியின் பொருட்டு, सानन्द : - சந்தோஷத்தோடு கூடியிருக்கிறவனாய்க்கொண்டு, अयं - இந்த கந்தோத்கடனானவன், सुतं - புத்திரனை, आदात् - கொடுத்தான். 98

*பொருள் : - "இறக்காத மகனை எவ்வாறு இறந்துவிட்டதாக நினைத்தாய்" என்று, மனைவியைக் கடிந்துகொண்டு, அக்குழந்தையை மிக்க மகிழ்ச்சியுடன் அவளிடம் அளித்தான்.*

अभ्यनन्दीत्सुनन्दापि नन्दनस्यावलोकनात् ।
प्राणवत्प्रीतये पुत्रा मृतोत्पन्नास्तु किं पुनः ॥ 99

सुनन्दापि - சுனந்தையும், नन्दनस्य - புத்திரனுடைய, अवलोकनात् - காண்கிறத்திநின்றும், अभ्यनन्दीत् -

சந்தோஷித்தாள், तथाहि - அப்படியன்றோ, प्राणवत् - பிராணனானது போல, पुत्राः - புத்திரர்கள், प्रीतये - ப்ரீதியின் பொருட்டு, तु - பின்னை, मृतोत्पन्नः - செத்துப் பிழைத்தவர்கள், किं पुनः - சொல்ல வேணுமோ. 99

***பொருள் : - சுனந்தா என்றழைக்கப்படும் அவ்வணிகன் மனைவி, தனது மகனைக் கண்டவுடன் மிகவும் மனம் மகிழ்ந்தாள். மக்கள் உயிருக்கு ஒப்பாவர். இறந்து பிறந்த மக்களைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ !***

देवता जननीमस्य बन्धुवेश्मपराङ्मुखीम् ।
दण्डकारण्यमध्यस्थमनैषीत्तापसाश्रमम् ॥ 100

बन्धुवेश्मपराङ्मुखात् - பந்துக்கள் மனைக்கு விமுக்யையான, अस्य - ஜீவந்தாரனுடைய, जननीं - தாயை, देवता - தேவதையானது, दण्डकारण्यमध्यस्थं - தண்டகாரண்ய மென்கிற வனமத்யத்தில் இருக்கிற, तापसाश्रमम् - தாபசாஸ்ரமத்தை, अनैषीत् - அடைவித்தது. 100

***பொருள் : - உறவினர் வீட்டுக்குச் செல்ல விருப்பம் இல்லாத, அக்குழந்தையின் (உண்மையான) தாயை, அந்தத் தேவதை தண்டகம் என்ற காட்டின் நடுவே உள்ள தவம் செய்வோரின் குடிலுக்கு அழைத்துச் சென்றது.***

कृत्वा च तां तपस्यन्तीं सतोषा सा मिषादगात् ।
समीहितार्थसंसिद्धौ मनः कस्य न तुष्यति ॥ 101

ता - அந்த விஜயமஹாதேவியை, तपस्यन्तीं - தபஸ் பண்ணுகிறவளாக, कृत्वा च - பண்ணுவித்தும், सतोषा - சந்தோஷத்தோடு கூடின, सा - அந்த தேவதை, मिषात् - கண்ணிமைக்கும் நேரத்தில், अगात् - அடைந்தது. समीहितार्थसंसिद्धौ - வாஞ்சிதார்த்த சம்சித்தியிலே, तु - பின்னை, कस्य - எவருக்கு, मनः - மனசானது, तुष्यति - சந்தோஷமாகா நின்றது, न - அல்ல.101

*பொருள் : - விஜயமாதேவியைத் தவத்தில் ஈடுபடுத்திவிட்டு, அந்தத் தேவதை கண்ணிமைக்கும் நேரத்தில் மறைந்தது. விரும்பிய பொருளை அடைந்த பின்னர் எவருக்குத்தான் மகிழ்ச்சி ஏற்படாது ?*

अवात्सीद्राजपत्नी च वत्सं निजमनोगृहे ।
जिनपादाम्बुजं चैव ध्यायन्ती हन्त तापसी ॥ 102

राजपत्नी च - ராஜாவினுடைய தேவியான, तापसी - தபஸியானவளும், निजमनोगृहे - தன்னுடைய மனசாகிற கிரஹத்திலே, निजपादाम्बुजं चैव - ஜினருடைய பாதமாகிற தாமரையை, ध्यायन्ती - த்யானியாய் நின்றவளாய்க் கொண்டு, वत्सं - புத்திரனையும், अवासीत् - வசித்தாள், நினைத்துக்கொண்டிருந்தாள் என்பது அர்த்தம். हन्त - கெட்ட கெட்ட. 102

*பொருள் : - அரசி தனது மகனை மனமென்னும் இல்லத்தில் வைத்துக்கொண்டு, ஜினருடைய தாமரைப் பதங்களைத் தியானித்தவாறு வசித்துவந்தாள்.*

अनल्पतूलतल्पस्थसवृन्तप्रसवादपि ।
निर्भरं हन्त सीदन्त्यै दर्भशय्याप्यरोचत ॥ 103

अनल्पतूलतल्पस्थसवृन्तप्रसवादपि - பகுவான பஞ்சணை மெத்தையில் இருக்கும், காம்போடு கூடியிருக்கிற புஷ்பத்தினின்றும், निर्भरं - மிகவும் வெகுவாக, सीदन्त्यै - துக்கமாய் இருக்கிறவள் பொருட்டு, दर्भशय्यापि - தர்ப்பச்யனமும், अरोचत - ருசித்து, हन्त - கெட்ட கெட்ட. 103

***பொருள் : - ஐயகோ ! பஞ்சு மெத்தையில், மலர்கள் தூவிக்கிடக்க, அதில் படுத்துறங்கும் அரசி, தற்போது மிக்க துயரை அளிக்கும் தர்பம் என்னும் புல்லால் வேயப்பட்ட படுக்கையை விரும்பினாள்.***

स्वहस्तलूननीवारोऽप्याहारोऽस्याः परेण किम् ।
अवश्यं ह्यनुभोक्तव्यं कृतं कर्म शुभाशुभम् ॥ 104

अस्याः - இந்த விஜய மகாதேவிக்கு, स्वहस्तलून नीवारोऽपि - தன்னுடைய கையினால் அறுக்கப்பட்ட குணச்சென்னலும், आहारः - ஆஹாரமானது, परेण - அன்யத்தினாலே, किं - என்ன, तथाहि - அப்படியன்றோ, कृतं - பண்ணப்பட்ட, शुभाशुभम् - சுபாசுபமான, कर्म - கர்மமானது, अवश्यं - நிச்சயமாக, अनुभोक्तव्यम् - அனுபவிக்கப்படுமன்றோ. 104.

***பொருள் : - தன் கையால் அறுக்கப்பட்டு, பதப்படுத்தப்பட்ட புல்லரிசியே அவளுக்கு உணவாகியது. வேறு ஏதும் உணவாகவில்லை. செய்வினைப்பயனை உண்மையாகவே ஒருவர் துய்க்கவேண்டுமல்லவா ?***

*अथ गन्धोत्कटायार्थमर्भकार्थं महोत्सवम् ।
आत्मार्थं गणयन्मूढः काष्टाङ्गरोऽप्यदान्मुदा ॥ 105

अथ - பிற்பாடு, अर्भकार्थमहोत्सवं - புத்ர நிமித்தமாய் பண்ணுகிற மஹோத்சவத்தை, आत्मार्थं - தன்னுடைய நிமித்தமாக, गणयन्- எண்ணா நின்றிருக்கிற, मूढः - மூடனானவன், काष्टाङ्गारोऽपि - காஷ்ட்டாங்காரனும், अर्थं - திரவியத்தை, मुदा - சந்தோஷத்தினாலே, गन्धोत्कटाय - கந்தோத்கடன் பொருட்டு, अदात् - கொடுத்தான். 105

*பொருள் :- அந்த வணிகன், தனக்குப் பிள்ளை மறுபடி உயிருடன் கிடைத்ததைக் கொண்டாடி மகிழ்ந்தான். அந்தக் கொண்டாட்டச் செய்தியைக் கேள்வியுற்ற காஷ்டாங்காரன், தான் பதவியேற்றதைக் கொண்டாடும் வகையில் வணிகன் தனது இல்லத்தில் விழா நடத்தினான் என்று நினைத்து கந்தோத்கடன் (வணிகன்) பொருட்டுப் பரிசில்களை அனுப்பிவைத்தான்.*

तत्क्षणे तत्पुरे जाताञ्जातानपि तदाज्ञया ।
लब्ध्वा वैश्यपतिः पुत्रं मित्रैः सार्द्धमवर्द्धयत् ॥ 106

तत्क्षणे - அந்த க்ஷணத்திலே, तत्पुरे - அந்த ராஜமஹாபுரத்திலே, जातान् - பிறந்திருப்பார்களாய்

---

** அழகுரன் மயங்கிய வல்ல லாவணத்*
*தெழுகிளை மகிழ்ந்தெம தரசு வேண்டினான்*
*கழிபெருங் காதலான் கந்து நாமனென்*
*றுழிதரு பெருநிதி யுவப்ப நல்கினான்.*
*(சீவகசிந்தாமணி)*

*க்ஷத்ர - 8*

இருக்கிற, जातानपि - புத்திரர்களையும், तदाज्ञाया - காஷ்ட்டாங்காரன் ஆக்ஞையினாலே, वैश्यपति - கந்தோத்கடச்ரேஷ்டியானவன், लब्ध्वा - பெற்று, मित्रैः - மித்ரர்களோட, सार्द्धं - கூட, पुत्रं - புத்ரனை, अवर्द्धयत् - வர்த்திப் படித்தான். 106

*பொருள் : - அப்போது பிறந்த மற்ற மக்களையும், அரசன் காஷ்டாங்காரன் ஆணைப்படி, வணிகன் கந்தோத்கடன் ஜீவந்தரனோடு சேர்ந்து மற்ற குழந்தைகளையும் நண்பர்களாக வளர்க்க முயற்சிகள் மேற்கொண்டான்.*

अथ जातः सुनन्दाया नन्दाढ्यो नाम नन्दनः ।
तेन जीवन्धरो रेजे सौभ्रात्रं हि दुरासदम् ॥ 107

अथ - பிற்பாடு, सुनन्दायाः - சுனந்தா தேவிக்கு, नन्दाढ्यः - நந்தாட்யனென்று, नाम - பேரையுடைய, नन्दनः - புத்திரனானவன், जातः - உண்டானான், तेन - நந்தாட்யனோடு, जीवन्धरः - ஜீவந்தரனானவன், रेजे - விளங்கினான், तथाहि - அப்படியன்றோ, सौभ्रात्रं - கூடப்பிறக்கிற உடன்பிறப்பானது, दुरासदं हि - துர்லபமன்றோ. 108

*பொருள் : - பிறகு, வணிகன் கந்தோத்கடனுக்குத் தன் மனைவியிடம் நந்தன் என்ற மனதை மகிழ்விக்கும் மகன் தோன்றினான். ஜீவந்தரனும் நந்தனனும் சகோதரத்துவத்துக்கு இலக்கணமாக விளங்கினர்.*

एवं सद्बन्धुमित्रोऽयमेधमानो दिनेदिने ।
अतिशेते स्म शीतांशुमकलङ्काङ्गभावतः ॥ 108

एवं - இப்படி, सद्बन्धुमित्रः - சத்பந்துமித்ரனான, दिने दिने - தினத்திலே, தினத்திலே, एधमानः - வர்தியா நின்றிருக்கிற, अयं - இந்த ஜீவன்தரனானவன், शीतांशुं - சந்திரனை, अकलङ्कभावतः - களங்கமில்லாத சரீரஸ்வரூபத்திநின்று, अतिशेते स्म - அதிசயித்தான். 108

*பொருள் : - இவ்வாறு நல்ல உறவினர்களாகவும், நண்பர்களாகவும், ஒவ்வொரு நாளும் வளர்ந்து வந்த இருவரும், தங்களது மாசற்ற தன்மையால் நிலவை விஞ்சினர்.*

ततः शैशवसंभूष्णु सर्वव्यसनदूरगः ।
पञ्चमं च वयो भेजे भाग्ये जाग्रति का व्यथा ॥ 109

ततः - பிற்பாடு, शैशवसंभूष्णुः - சிசுப்பிராயத்திலே நிறைந்திருப்பானாய், सर्वव्यसनदूरगः - சர்வவியசனங்களை விட்டு இருக்கிற ஜீவன்தரனானவன், पञ्चमञ्च - ஐந்தாவதான, वयः - வயதையும், भेजे -. அடைந்தான். तथाहि - அப்படியன்றோ, भाग्ये - பாக்யமானது, जाग्रति सति - விழித்திரா நின்றுள்ளளவில், व्यथा - துக்கமானது, का - எது.

*பொருள் : - பிறகு, குழந்தைப்பருவம் நிரம்பி, எல்லாத் துயர்களையும் விட்டுவிட்டு இருக்கும் ஜீவந்தரன் தனது ஐந்தாவது வயதை எட்டினான். நல்லநேரம் விழித்திருக்கும்போது துயர்ப்படும் நேரம் எங்கு வரும் ?*

अथानर्थकमव्यक्तमतिहृद्यं च वाङ्मयम् ।
मुक्त्वातिव्यक्तगर्वासीत्स्वयं वृण्वन्ति हि स्त्रियः ॥110

अथ - பிற்பாடு, अनर्थकः - பிரயோஜனமில்லாத, अव्यक्तं - வியக்தமில்லாத, अतिहृद्यं च - மிகவும் மனோகரமான, व इयं - வசனமயத்தையும், मुक्त्वा - விட்டு, अतिव्यक्तगः - மிகவும் வியக்தமான வசனத்தை யுடைத்தானவன், आसीत् - ஆனான். तथाहि - அப்படியன்றோ, स्त्रियः - ஸ்திரியர்கள். स्वयं - தானே, वृण्वन्ति हि - வரியாநின்றார்களன்றோ. 110

*பொருள் : - பிறகு, பொருள் புலப்படாத, தெளிவற்ற, மனமகிழ்ச்சியை வழங்கக்கூடிய மழலைச் சொற்களை விட்டுவிட்டு, ஜீவந்தரன் தெளிவான பேச்சை உடையவனாக மாறினான். பெண்கள் இதனைத்தான் விரும்புவர்.*

आचार्यकवपुः कश्चिदार्यनन्दीति कीर्तितः ।
आसीदस्य गुरुः पुण्याद्गुरुरेव हि देवताः ॥ 111

आचार्यवपुः - ஆச்சார்யருக்கு யோக்யமான சரீரத்தையுடைய, आर्यनन्दीति - ஆர்யநந்தீ என்ற कीर्तितः - கீர்த்திக்கப்பட்டிருக்கிற, कश्चित् - ஒருத்தர், अस्य - ஜீவந்தரனுக்கு, गुरूः - குருவானவர், पुण्यात् - புண்ணியத்தினின்றும், आसीत् - ஆனார். तथाहि - அப்படியன்றோ. 111

*பொருள் : - ஆரியநந்தீ என்ற பெயரைக்கொண்ட ஆசிரியர் ஒருவர், அவனது நல்வினைப்பயனாய் அவனுக்கு ஆசிரியராக அமைந்தார். ஆசிரியர் இறைவனன்றோ!*

निष्प्रत्यूहेष्टसिध्यर्थं सिद्धपूजादिपूर्वकम् ।
सिद्धमातृकया सिद्धामथ लेभे सरस्वतीम् ॥ 112

निष्प्रत्यूहेष्टसिध्यर्थं - விக்னமில்லாமல் நினைக்கப்பட்ட இஷ்டகாம்ய சித்தி நிமித்தம், சித்த பூஜாதிபூர்வகம், सिद्धमातृकया - ப்ரசித்தமான மாத்ரபிரமாணத்திலே, सिद्धां - சித்திக்கப்பட்ட, सरस्वती - சரஸ்வதியை, अयं - இவன், लेभे - பெற்றான்.

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
सरस्वतीलम्भो नाम प्रथमो लम्भः ॥

इति - என்று ஸ்ரீமத் வாதீபசிம்மசூரிவிரசிதே - ஐச்வர்யத்தோடே கூடி வாதிகளாகிற யானைகளுக்கு ஸிம்ஹம் போல இருக்கிற ஆச்சார்யராலே பண்ணப்பட்டு இருப்பதாய் இருக்கிற क्षत्रचूडामणौ க்ஷத்ர சூடாமனௌ க்ஷத்ர சூடாமணி என்கிற காவ்யத்திலே सरस्वतीलम्भः नाम ஸரஸ்வதி லம்பம் என்ற பேரையுடைய प्रथमो लम्भः ப்ரதமோலம்பமானது பரிசமாப்தமாச்சுது.

பொருள் : - பின்னர், விரும்பிய செயலை இடையூறின்றி நிறைவேற்றவும், போற்றுதல்களால் மரியாதை செய்யப்பட்ட, மாத்ருகாக்ஷரங்களால் நிலைபெற்றிருக்கும் கலைமகளை அந்த ஆசிரியர் வழியாக ஜீவந்தரன் அடைந்தான்.



## द्वितीयो लम्भः

## गोविन्दालम्भः

## கோவிந்தாலம்பம்

अथ विद्यागृहं किंचिदासाद्य सखिमण्डितः ।
पाण्डिताद्विश्वविद्यायामध्यगीष्टातिपण्डितः ॥ 1

अथ - பிற்பாடு, सखिमण्डितः - மித்திரர்களினாலே, किञ्चि विद्यागृहं - சிறு வித்யாகிருஹத்தை, आसाद्य - அடைந்து, पण्डितात् - ஆச்சாரியார் இடத்தினின்றும், विश्वविद्यायां - சமஸ்த வித்யையிலே, अतिपण्डितः - வித்வாம்சரை மீறினவனாய்க்கொண்டு, अध्यगीष्ट - படித்தான். 1

*பொருள் :- அப்பால் மேதாவியாகிய ஜீவகன் பாடசாலைக்குச் சென்று நண்பர்களோடு சேர்ந்து குருவிடம் பிரஸித்தமான கலைகளைக் கற்றான்.*

तस्य प्रश्रयशुश्रूषाचातुर्याद्गुरुगोचरात् ।
स्मृता इवाभवन्विद्या गुरुस्नेहो हि कामसूः ॥ 2

तस्य - ஜீவந்தரனுக்கு, प्रश्रयशुश्रूषाचातुर्यात् - வணங்குகிறது, சேவைபண்ணுகிறதென்னும் இரண்டு பிரகாரங்களிடையே சாதுர்யமான, गुरुगोचरात् - குரு விஷயத்தினின்றும், विद्या - வித்யைகள், स्मृता इव - ஸ்மரிக்கப்பட்டதுகள் போல, अभवत् - ஆச்சுதுகள், तथाहि - அப்படியன்றோ, गुरुस्नेहः - குருஸ்நேகமானது, कामसूः - வாஞ்சித்ததைக் கறப்பதன்றோ.

பொருள் : - அவன் ஆசிரியரிடத்தில் பணிவு கொண்டு தொண்டு செய்தான். அவனது இயல்பான அறிவினால் எல்லாவிதமான கல்வியறிவும், முன்னமே அறிவுறுத்தப் பட்டவைகள் போல விளங்கின. ஆசிரியரிடத்தில் கொள்ளும் மாறாதபற்று விரும்பியதைத் தரும் கற்பகமரமன்றோ?

अनुजीवकमेवात्र जीवलोके विपश्चितः ।
इति निश्चयतः सूरिः सुतरां प्रीतिमव्रजत् ॥ 3

जीवलोके - இந்த ஜீவலோகத்திலே, अनुजीवकमेव - ஜீவகனைப்பின் சென்றே, विपश्चितः - வித்வாம்சர்கள், इति - என்று, निश्चयतः - நிச்சயத்தினின்றும், सूरिः - ஆச்சாரிரானவர், सुतरां - மிகவும், प्रीति - ப்ரீதியை, अव्रजत् - அடைந்தார்கள். 3

பொருள் : - இவ்வுலகில் அறிவாளிகள் யாவரும் சீவகனைப் பின்பற்றியே இருப்பார்கள் என்று உறுதிகொண்டு, அவனது ஆசிரியர் யாவரும் மிகுந்த மகிழ்ச்சியை எய்தினர்.

आत्मकृत्यमकृत्यं च सफलं प्रीतये नृणाम् ।
किं पुनः श्लाघ्यभूतं तत्किं विद्यास्थापनात्परम् ॥ 4

अकृत्यश्च - ஆத்ம அக்ருத்யமான, आत्मकृत्यं - தான் பண்ணுகிற காரியமும், सफलं - பலத்தோடு கூடினால், नृणाम् - மனுஷ்யர்களுக்கு, प्रीतये - ப்ரீதியின் பொருட்டு, तत् - தான் பண்ணுகிற அந்தக் காரியம், श्लाघ्यभूतं - ச்லாக்ய பூதமானால், किं पुनः - சொல்ல வேணுமோ, तथाहि - அப்படியன்றோ, विद्यास्थापनात् - வித்யை ஸ்தாபிக்கிறத்தி னின்றும், परम् - உத்கிருஷ்ட்டமானது. किं - என்ன ? 4

பொருள் : - தான் செய்யும் காரியம் தகாத செய்கையானாலும் பயனுடன் கூடியிருப்பின் மனிதரை மகிழ்விக்கும். தகுந்த செயலாகிய, சரியான இடத்தில் கல்வியைச் சேர்ப்பது, பிறரால் போற்றுதற்கு உரித்தன்றோ!

अथ प्रसन्नधीः सूरिरन्तेवासिनमेकदा ।
एकान्ते हि निजप्रान्तमावसन्तमचीकथत् ॥ 5

अथ - பிற்பாடு, प्रसन्नधीः - பிரகாசமான புத்தியுடைய, सूरिः - ஆச்சாரியர், एकदा - மற்றொரு நாள், एकान्ते हि - ஏகாந்த பிரதேசத்திலே, निजप्रान्तः - தன்னுடைய சமீபத்தே, आवसन्तं - வசியாநின்றிருக்கிற, अन्तेवासिनं - சிஷ்யனை, हि - தெளிவாக, अचीकथत् - சொன்னார். 5

பொருள் : - தெளிவான மனம்கொண்ட ஆசான், ஒரு சமயம் தனியாக இருக்கும்போது, தன்னருகில் சீவகனை அழைத்துப் பின்வருமாறு அறிவுரை கூறினார். 5

श्रुतशालिन्महाभाग श्रूयतामिह कस्यचित् ।
चरितं चरितार्थेन यदत्यर्थं दयावहम् ॥ 6

श्रुतशालिन् - (வாராய்) ச்ருதசாலியே, महाभाग - மஹாபாக்யவானே, इह - இவ்விடத்திலே, कस्यचित् - ஒருவனுடைய, चरितार्थेन - நடந்த சரிதத்தினாலே, यत् - யாதொன்றும், अत्यर्थं - மிகவும் அர்த்தத்தையுடைய, दयावहम् - தயையை வஹித்திருக்கிற, चरितं - கதையானது, श्रूयतां - கேட்கப்படும் அது. 6

*பொருள் : - சிறந்த பேறு பெற்றவனே ! கல்வியிற் சிறந்தவனே ! கருணையை மையமாகக் கொண்டுள்ள ஒரு (நடந்துமுடிந்த) உண்மைக் கதையைக் கேள்.*

विद्याधरास्पदे लोके लोकपालाह्वयान्वितः ।
लोकं वै पालयन्भूपः कोऽपि कालमजीगमत् ॥ 7

विद्याधरास्पदे - வித்யாதர ஜனங்களுக்கு இருப்பிடமாய் இருக்கும், लोके - லோகத்திலே வெள்ளியம்பெருமலை என்பது அர்த்தம், लोकपालाह्वयान्वितः - லோகபாலன் என்கிற பேரினாலே கூடியிருக்கிற, कोऽपि भूपः - ஒரு ராஜாவானவன் லோகஜனத்தை, वै - ஸ்புடமாக, पालयन् - ர்க்ஷியா நின்றவனாய்க்கொண்டு, कालं - காலத்தை, अजीगमत् - அடைவித்தான். 7

*பொருள் : - வித்யாதரர்கள் என்ற வகுப்பைச் சார்ந்தவர்கள் வசிக்குமிடத்தில் 'உலகபாலன்' என்ற அரசன் இவ்வுலகை ஆண்டு வந்தான்.*

क्षणक्षीणत्वमैश्वर्ये क्षीबाणामिव बोधयत् ।
क्षेपीयः पश्यतां नश्यदभ्रमैक्षिष्ट सोऽधिराट् ॥ 8

ऐश्वर्ये - ஐச்வர்யத்திலே, क्षणक्षीणत्वं - க்ஷணத்திலே கெட்டுபோகின்ற, क्षीबाणां - அறிவில்லாத பேர்களுக்கு, बोधयत् - அறிவியாநின்றது, इव - போல், पश्यतां - பார்க்கிற பேர்களுக்கு, क्षेपीयः - சீக்கிரமாக, नश्यत् - நாசமாகாநின்றிருக்கிற, अभ्रं - மேகத்தை, अधिराट् - அதிராஜனான, सः - அவன், ऐक्षिष्ट - கண்டான். 8

பொருள் :- செல்வமென்பது கண நேரத்தில் அழிவுறுமென்பதை அறிவிலிகளுக்குக்கூட அறிவிப்பது போல, விரைந்து கலைந்து செல்லும் மேகக்கூட்டங்களை அரசன் கண்டான்.

तद्वीक्षणेन वैराग्यं विजजृम्भे महीभुजः ।
पम्फुलीति हि निर्वेदो भव्यानां कालपाकतः ॥ 9

तद्वीक्षणेन - மேகவிநாசத்தைக் கண்டதினாலே. महीभुजः - ராஜாவுக்கு, वैराग्यम् - வைராக்கியமானது. विजजृम्भे - வர்த்திச்சுது, तथाहि - அப்படியன்றோ, भव्यानां - பவ்ய ஜீவன்களுக்கு, कालपाकतः - காலலப்தியினின்றும். निर्वेदः - வைராக்யமானது, पम्पुलीति हि - மிகவும் வர்த்தியாநின்றதன்றோ. 9

பொருள் :- அதனைக் கண்டதனால் அரசனுக்கு உலகப்பொருட்கள் மீது வெறுப்பு ஏற்பட்டது. தகுந்த நேரம் வரும்போதுதானே பற்றற்ற தன்மை விரிந்து மலர்கின்றது?

ततोऽयं पुत्रनिक्षिप्तराज्यभारः क्षितीश्वरः ।
जैनीं दीक्षामुपादत्त यस्यां कायेऽपि हेयता ॥ 10

ततः - பிற்பாடு, पुत्रनिक्षिप्तराज्यभारः - புத்திரனிடத்திலே வைக்கப்பட்ட ராஜ்யபாரத்தை உடைய, अयं क्षितीश्वरः - இந்த ராஜாவானவன், यस्य - யாதொரு ஜின தீக்ஷையிலே, कायेऽपि - சரீரத்திலேயும், हेयतां - விடுகையானது, जैनदीक्षा - ஜைன சம்மந்தமான தீக்ஷையை உபாதத்தைக் கொண்டான். 10

பொருள் : - பின்னர் அரசன் தனது புதல்வனிடம் அரசை ஒப்பித்துவிட்டு உடலையும் வெருக்கும் ஜின தீக்ஷையை ஏற்றுக்கொண்டு தவம் செய்யத் தொடங்கினான்.

तपांसि तप्यमानस्य तस्य चासीदहो पुनः ।
भस्मकाख्यो महारोगो भुक्तां यो भस्मयेत्क्षणात् ॥ 11

तपांसि - தபசுக்களை, तप्यमानस्य - தவிக்கப்பட்டிருக்கிற, तस्य च - அந்த ரிஷிக்கும், पुनः - பிற்பாடு, यः - யாதொரு ரோகமானது, भुक्तं - போஜிக்கிற வஸ்த்துவை, क्षणात् - க்ஷணத்தினின்றும், भस्मयेत् - சாம்பலாகக்கடவது, भस्मकाख्यः - பஸ்மகமென்று பேரையுடைய, महारोगः - மகாரோகமானது, आसीत् - ஆச்சுது, अहो - ஆச்சரியம். 11

பொருள் : - இவ்வாறு இறைவன் தவம் செய்துகொண்டிருக்கையில் அவனை "பஸ்மக" மென்ற கொடியநோய் அணுகி வருத்திற்று. அந்நோய் உட்கொண்ட உணவை உடனே சீரணித்துவிடும்.

न हि वारयितुं शक्यं दुष्कर्माल्पतपस्यया ।
विस्फुलिङ्गेन किं शक्यं दग्धुमार्द्रमपीन्धनम् ॥ 12

எது, अल्पतपस्या - அல்ப தபசினாலே, दुष्कर्म - பாப கர்மத்தை, वारयितुं - தடையிடுகிறதற்கு, शक्यं - சமர்த்தமானது, नहि - இல்லையன்றோ, तथाहि - அப்படியன்றோ, विस्फुलिङ्गेन - நெருப்புப்பொறியினாலே, आद्रम् - ஈரமாயிருக்கிற, इन्धनमपि - விறகையும், दग्धुं - எறிக்கிறதற்கு, शक्यं - சமர்த்தமானது, किं - என்ன. 12

பொருள் : - தீ வினையை அற்பமான தவத்தினால் வெல்லுவதற்கு இயலாது, தீப்பொறியானது நனைந்த விறகைப் பொசுக்க இயலுமோ ?

अशक्त्यैव तपः सोऽयं राजा राज्यमिवात्यजत् ।
श्रेयांसि बहुविघ्नानीत्येतन्नह्यधुनाभवत् ॥ 13

राजा - ராஜாவானவன், राज्यं - ராஜ்யத்தை, अत्यजत् - விட்டவன், इव - போல், सः - அப்படிப்பட்டிருக்கிறவன், अयं - தபஸ்வியானவன், अशक्त्यैव - சாமரத்தியம் இல்லாததினாலேயே, तपः - தபஸை, अत्यजत् - விட்டான். तथाहि - அப்படியன்றோ, श्रेयांसि - கண்மைகள், बहुविघ्नानि - பகுவிக்னங்களை யுடைத்தானதுகள், इति - என்று, एतत् - இந்த வசனம், अधुना - இப்பொழுது, अभवत् - ஆச்சுது என்கிறது. नहि - இல்லையன்றோ. 13.

பொருள் : - (எப்போதும் பசித்திருத்தலால்) வலிமைகுன்றிய மன்னன் தான் ஏற்றுக்கொண்ட தவத்தையும் விட்டொழித்தான். (தவம் செய்வதற்கு உடல் வலுவேண்டுமே !) நற்செயல்களைச் செய்யும்போது, அவை தடைகளைச் சந்திக்க நேரிடுமென்பது சான்றோர் வாக்கு.

तपसाच्छादितस्तिष्टन्स्वैराचारी हि पातकी ।
गुल्मेनान्तर्हितो गृह्णन्विष्किरानिव नाफलः ॥ 14

गुल्मेन - செடியினாலே, अन्तर्हितः - மறைக்கப் பட்டிருக்கிற, नाफलः - வேடனானவன், विष्किरान् -

பக்ஷிகளை, गृह्णन् - க்ருஹ்ணீயா நின்றவன், इव - போல, तपसा - தபஸினாலே, तिष्ठन् - நின்றான். तथाहि - அப்படியன்றோ, स्वैराचारी - ஸ்வேச்சாசாரமான தபஸால், पातकी हि - கெடாநின்றதன்றோ. 14

*பொருள் : - புதரில் மறைந்து பறவைகளைப் பிடிக்கும் வேடனைப் போல தவம் செய்வது போல, அபிநயித்துக் கொண்டு, மனம் போனவாறு நடப்பவன் பெரும் பாவியல்லவா ? அவ்வரசன் கபடமான தவத்தினால் மீண்டும் மனம் போனபடி நடக்கலானான். (ஜின தீக்ஷையானது மனம் போனவாறு நடப்பதை தவிர்க்கின்றதல்லவா)*

अवर्तिष्ट यथेष्टं स पाषाण्डितपसा पुनः ।
चित्रं जैनी तपस्या हि स्वैराचारविरोधिनी ॥ 15

सः - அந்த ரிஷியானவன், पाषण्डितपसा - பாஷண்டி தவசினாலே, पुनः - பிற்பாடு, यथेष्टं - யதேஷ்ட்டமாக, अवर्तिष्ट - வர்த்தித்தான், चित्रं - ஆச்சரியம், तथाहि - அப்படியன்றோ, जैनीतपस्या - ஜைன சம்மந்தமான தபசானது, स्वैराचारविरोधिनीहि - ஸ்வேச்சையாக நடக்கிறதற்கு விரோதமன்றோ. 15

*பொருள் : - அந்த முனிவன் போலியான தவத்தால் தன் விருப்பப்படி இயங்கி வந்தார். ஆனால் ஜைன மதத்தில் தவம் என்பது விருப்பப்படி இருப்பது என்பதற்கு மாறானது.*

अथ भिक्षुर्बुभुक्षुः सन् गन्धोत्कटगृहं गतः ।
उपतापरुजोऽप्येष धार्मिकाणां भिषक्तमः ॥ 16

अथ - பிற்பாடு, भिक्षुः - பிக்ஷுவானவன், बुभुक्षुस्सन् - போஜிக்கவேண்டுமென்று இச்சையை உடைத்தானவனாய்க் கொண்டு, गन्धोत्कटगृहं - கந்தோகடசெட்டியாரிடை மனையை, गतः - அடைந்தான். तथाहि - அப்படியன்றோ. धार्मिकाणां - தார்மீகர்களுக்கு, उपतापरञ्जोऽपि - வியாதியிலே தவிக்கும் பேருக்கு, एषः - கந்தோத்கடனாவன், भिषत्तमः हि - வைத்யோத்தமனன்றோ.

**பொருள் : - பிறகு ஜைன தீட்சையை ஒட்டி, பிச்சயெடுக்க விரும்பி, அரசன் நகரத்திற்கு வந்தான். அங்கு கந்தோத்கடனுடைய இல்லம் சென்றான். கந்தோத்கடன் தவச்செல்வன். அறத்தின் வழி செல்வோர்க்கெல்லாம் துயர் களையும் மருத்துவன்.**

धार्मिकाणां शरण्यं हि धार्मिका एव नापरे ।
अहेर्नकुलवत्तेषां प्रकृत्याख्ये हि विद्विषः ।। 17

धार्मिकाणां - தார்மீகர்களுக்கு, धार्मिका एव - தார்மிகர்களே, हि - ஸ்புடமாக, शरण्यं - சரண்யமானது, अपरे - அன்யர்களுக்கு, न - அல்ல, अहेः - சர்ப்பத்துக்கு, नकुलवत् - கீரியானது போல, तेषां - அவர்களுக்கு, अन्ये - அன்யர்கள், प्रकृत्या - ஸ்வபாவத்தினாலே, विद्विषो हि - சத்ருக்கள் அன்றோ. 17

**பொருள் : - அறநெறியின் வழிச்செல்வோர்க்கு அத்தகையோரே அன்றிப் பிறர் புகலிடமாகார். பாம்புக்குக் கீரி போல, அவர்களுக்குப் பிறர் பகைவரே யாவர்.**

तत्र मध्येगृहं भिक्षुरद्राक्षीत्पुत्रपुङ्गवम् ।
अङ्ग त्वां त्वं च तं वीक्ष्य तद्बुभुक्षामलक्षयः ॥ 18

எது, तत्र - அவ்விடத்திலே, मध्येगृहं - க்ருஹ மத்யத்திலே, भिक्षुः - ரிஷியானவன், पुत्रपुङ्गवं - புத்ரஸ்ரேஷ்ட்டனான, त्वां - உன்னை, अद्राक्षीत् - கண்டான். अङ्ग - வாராய் புத்ரனே, त्वं च नीयं तं - நீயும் அந்த ரிஷியை, वीक्ष्य - பார்த்து, तद्बुभुक्षां - அவனுடைய போஜிக்க வேணுமென்கிற இச்சையை, अलक्षयः - கண்டுகொள்ள வில்லை. 18

*பொருள் : - அந்த வீட்டின் உள்ளே நீ இருப்பதை அந்த முனிவன் கண்டான். நீயும் அவனைக் கண்டாய். உணவு உண்பதில் அவனுக்கு இருந்த ஈடுபாட்டை உணர்ந்தாய்.*

भोक्तुमारब्धमाणस्त्वं पौरोगवमचीकथः ।
भोज्यतामयमित्येष पुनरेनमबूभुजत् ॥ 19

எது, भोक्तुं - போஜிக்கிறதுக்கு, आरब्धमाणः - துடங்கி இருக்கிற, त्वं - நீ, पौरोगवं - பாகசாலை அதிகாரியை, अयं - ரிஷியானவன், भोज्यतां - போஜிக்கப்படுபவன், इति - என்று, अचीकथः - சொன்னாய், एषः - பாகசாலை அதிகாரியானவன், पुनः - பிற்பாடு, एनं - ரிஷியை, अभुभुजत् - போஜிப்பித்தான்.

*பொருள் : - உணவு உண்ணத் தொடங்கிய நீ, சமையலறை மேலாளரிடம், அந்த முனிவருக்கு உணவு வழங்குமாறு பணித்தாய், அவனும், பின்னர், அந்த முனிவரை முறைப்படி விருந்தோம்பலால் மகிழ்வித்தான்.*

अन्नैस्तद्गृहसंपन्नैर्नाभूत्तत्कुक्षिपूरणम् ।
अहो पापस्य घोरत्वमाशाब्धिः केन पूर्यते ॥ 20

तत् गृहसंपन्नैः - அந்த கிருஹத்திலே நிறைந்திருக்கும். अन्नैः - அன்னங்களினாலே, तत्कुक्षिपूरणम् - அந்த ரிஷியினுடைய உதரபூரணமானது, नाभूत् - ஆச்சுதில்லை. अहो - ஆச்சரியம், पापस्य - பாபத்தினுடைய, घोरत्वं - கொடிதானது, तथाहि - அப்படியன்றோ, आशाब्धिः - ஆசையாகிற சமுத்ரமானது, केन - எதனாலே, पूर्यते - நிறைக்கப்படாநின்றதுகள், 20

*பொருள் : - அவ்வீட்டின் உணவுகளை எல்லாம் புசித்தும், அம்முனிவனின் வயிறு நிறையவில்லை. அந்தோ பாபத்தின் கொடுமையை என்னென்று கூறுவது. ஆசைக் கடலை எவரே நிரப்புவர்?*

अभुञ्जानस्त्वमाश्चर्यादासीनोऽस्मै वितीर्णवान् ।
कारुण्यादस्य पुण्याद्वा करस्थं कबलं मुदा ॥ 21

आसीनः - உட்கார்ந்திருக்கிற, अभुञ्जानः - போஜியாமலிருக்கிற, त्वं - நீ, आश्चर्यात् - ஆச்சர்யத்தினின்றும், अस्मै - இவன் பொருட்டு, कारुण्यात् - க்ருபையினின்றுதான், अस्य - இவனுடைய, पुण्याद्वा - புண்ணியத்தினின்றுதான், करस्थं - கையிலே இருக்கிற, कबलं - கபலத்தை, मुदा - சந்தோஷத்தினாலே, वितीर्णवान् - கொடுத்தாய்.

*பொருள் : - புசிக்காமலே முனிவரைப் பார்த்துக் கொண்டிருந்த நீ வியப்புற்று, சந்தோஷத்துடன் கருணையினாலோ அல்லது அம்முனிவரின் புண்ணியவசத்தினாலோ உன் கையில் இருந்த கவளத்தை அவனுக்குக் கொடுத்தாய்.*

वर्णिनां जठरं पूर्णं तदास्वादनतः क्षणात् ।
आशाब्धिरिव नैराश्यादहो पुण्यस्य वैभवम् ॥ 22

वर्णिनः - ரிஷியருடைய, जठरं- உதரம், तदास्वादनतत्क्षणात् - அந்த கபலத்தை பக்ஷிக்கிற அந்த க்ஷணத்தினின்றும், अशाब्धिरिव नैराश्यात् - ஆசையாகிற சமுத்திரத்திற்கு ஆசையில்லாதத்தினின்றும் போல, पूर्ण - பரிபூர்ணமாச்சுது, तथाहि - அப்படியன்றோ, पुण्यस्य - புண்ணியத்தினுடைய, वैभवम् - விபவமானது, अहो - ஆச்சரியம். 22

*பொருள் : - அந்த கவளத்தால் அந்தக் கணத்தில் கரையற்ற கடலுக்குக் கரையேற்பட்டதுபோல, அவரது வயிறு நிரம்பியது. நற்செயல்களின் ஆச்சரியமான ஒரு நிகழ்ச்சியாக அது விளங்கியது.*

परिव्राडपि संप्राप्य सौहित्यं तत्क्षणे चिरात् ।
महोपकारिणोऽस्याहं किं करोमीत्यचिन्तयत् ॥ 23

परिव्राडपि - பரிவ்ராஜகனும், तत्क्षणे - அந்த க்ஷணத்திலே, अचिरात् - சீக்கிரத்தினின்றும், सौहित्यं - திருப்தியை, संप्राप्य - அடைந்து, महोपकारिणः - மகோபகாரியான, अस्य - இவனுக்கு, अहं - நான், किं - என்னத்தை, करोमि - பண்ணுவேன், इति - என்று, अचिन्तयत् - சிந்தித்தான். 23

***பொருள் : - அந்த முனிவனும் அக்கணத்தில் உடனே வயிறு நிரம்பியவனாக மனம் மகிழ்ந்து, உனக்கு தான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்! என்று எண்ணினான்.***

अपश्चिमफलां विद्यां निश्चित्यात्र प्रतिक्रियाम् ।
आयुष्मन्तमसौ पश्चाद्विपश्चितमकल्पयत् ॥ 24

अपश्चिमकलां - கடைசியில்லாத பலத்தையுடைய, विद्यां - வித்யை, अत्र - இவ்விடத்திலே, प्रतिक्रियाम् - ப்ரதிக்ரியையாக, निश्चित्य - நிச்சயம் பண்ணி, आयुष्मन्तं - ஆயுஷ்யமானான ஜீவந்தரனை, असौ - ரிஷியானவன், पश्चात् - பிற்பாடு, विपश्चितः - வித்வாம்சனாக, अकल्पयत् - கல்ப்பித்தான். 24

*பொருள் : - (தனது நன்றிக்கடனாக) முனிவன், முடிவற்ற பயனைக்கொண்ட கல்வியை அவனுக்கு அளிக்கத் தீர்மானித்து, நீண்ட காலம் வாழத்தகுதிபெற்ற ஜீவந்தரனை, அறிஞனாக மாற்றினான்.*

विद्या हि विद्यमानेयं वितीर्णापि प्रकृष्यते ।
नाकृष्यते च चोराद्यैः पुष्यत्येव मनीषितम् ॥ 25

विद्यमाना - உண்டாயிருக்கிற, इयं विद्या - இந்த வித்தையானது, हि - ஸ்புடமாக, वितीर्णापि - யாருக்குக் கொடுத்தாலும், प्रकृष्यते - வர்த்தியாநின்றது. चोराद्यैः - சோர முதலானவர்களினாலேயும், आकृष्यते च - ஸ்வீகரிக்கப் படாநின்றதும், न - இல்லை, मनीषितं - வாஞ்சிதத்தை, पुष्यत्येव - நிறைப்பியாநின்றதே. 25

*பொருள் : - இந்தக் கல்வியறிவு, செலவிடப் பட்டாலும் விரிவடைகிறது. கள்வர்களால் களவிட முடியாதது. விரும்பியதை அளிக்கக்கூடியது. 25*

वैदुष्येण हि वंश्यत्वं वैभवं सदुपास्यता ।
सदस्यतालमुक्तेन विद्वान्सर्वत्र पूज्यते ॥ 26

वैदुष्येण - வித்தையினாலே, हि - ஸ்புடமாக, वंश्यत्वं- நற்குடிப்பிறப்பும், वैभवम् - விபவமும், सदुपास्यता - சத்புருஷர்களுடைய சேவையும், सदस्यतां - சபாயோக்யத்வமாம், उक्तेन - சொல்லுகிறதினாலே, अलं - அமைஞ்சு, विद्वान् - வித்வானானவன், सर्वत्र - எல்லா இடத்திலேயும், पूज्यते - பூஜிக்கப்படுகிறான். 26

*பொருள் :* - *கல்வியறிவால் மட்டுமே, ஒருவனது நற்குடிப்பிறப்பும், சிறப்பும், சான்றாண்மையும், அவையத்து இருத்தலும். இது ஒன்றைக் கூறினாலே போதும். அறிஞன் எல்லா இடங்களிலும் போற்றப்படுகிறான்.*

वैपश्चित्यं हि जीवानामाजीवितमनिन्दितम् ।
अपवर्गेऽपि मार्गोऽयमदः[1] क्षीरमिवौषधम् ॥ 27

जीवानाम् - ஜீவன்களுக்கு, वैपश्चित्यं - வித்தையானது, आजीवितं - ஜீவிதபர்யந்தம், अनिन्दितम् हि - அநிந்திதமில்லாததன்றோ, क्षीरम् - பாலானது. औषधमिव - ஔஷதமானது போல், இது மரணத்தினின்றும், अयं - (இந்த) வித்தையானது, अपवर्गेऽपि - மோக்ஷத்திலேயும், मार्गः - மார்க்கமானது. 27

*பொருள் :* - *உயிர்களுக்கு கல்வி, உயிருள்ள வரை போற்றத்தக்கது. பால், மரணத்துக்கும் மருந்தாவது போல், இந்தக் கல்வி வீடுபேறு பெற வழியாகிறது.*

---

*1.* अदस् = *இது.*

इत्युदन्तं गुरोः श्रुत्वा शिष्यो नोत्तरमूचिवान् ।
स्ववाचा किन्तु वक्त्रेण शैष्योपाध्यायिका हि सा ॥ 28

इति - என்று, गुरोः - குருவினுடைய, उदन्तं - விருத்தாந்தத்தை, स्ववाचा - தன்னுடைய வசனத்தினாலே, ऊचिवान् - சொன்னான், न - இல்லை, किन्तु - விசேஷமுண்டு, वक्त्रेण - முகத்தினாலே சொன்னார் என்பது, तथाहि - அப்படியன்றோ, सा - அது, शैष्य-उपाध्यायिका हि - சிஷ்யோபாத்யாய லக்ஷணமன்றோ. 28

*பொருள் :- இவ்வாறு, தன்னுடைய ஆசிரியரின் கதையைக் கேட்டு பதிலைத் தனது வாயால் கூறாமல் முகத்தினால் தன் உணர்வை வெளிப்படுத்தினான். அதுவே மாணவ-ஆசிரியரின் இலக்கணமாகும்.*

विज्ञातगुरुशुद्धिः स विशेषात्पिप्रियेतराम् ।
माणिक्यस्य हि लब्धस्य शुद्धेर्मोदो विशेषतः ॥ 29

विज्ञातगुरुशुद्धिः - அறியப்பட்ட குரு சுத்தியையுடைய, सः - ஜீவந்தரஸ்வாமியானவன், विशेषात् - விசேஷத்தினின்றும், तराम् - மிகவும், पिप्रिये - சந்தோஷித்தான், तथाहि - அப்படியன்றோ, लब्धस्य - பெறப்பட்டிருக்கிற, माणिक्यस्य - ரத்னத்தினுடைய, शुद्धेः - சுத்தியினின்றும், मोदः - சந்தோஷமானது, विशेषतोहि - விசேஷத்தினின்றாமன்றோ. 29

*பொருள் :- ஆசிரியனால் சுத்திகரிக்கப்படவன் என்ற விவரமறிந்த ஜீவந்தரன் மிக மகிழ்ந்தான். மாணிக்கக் கல்லை அடைந்த ஒருவன் அது தூய்மையாக இருக்கிறதா என்று எண்ணுவதைக் காட்டிலும், அக்கல் கிடைத்த மகிழ்ச்சியைத்தான் மிகவும் கொண்டாடுவான்.*

रत्नत्रयविशुद्धः सन्पात्रस्नेही परार्थकृत् ।
परिपालितधर्मो हि भवाब्धेस्तारको गुरुः ॥ 30

रत्नत्रयविशुद्धः - ரத்னத்த்ரயத்திலே, சுத்தனானவன், सन् - சத்புருஷனானவன், पात्रस्नेही - பாத்திரத்திலே ஸ்நேகத்தையுடையவன், परार्थकृत् - பரப்ரயோஜனத்தை பண்ணுகிறவன், परिपालितधर्मः - ரக்ஷிக்கப்பட்ட தர்மத்தை உடையவன், भवाब्धेः - சம்சார சமுத்திரத்தினின்றும், तारकः - கடப்பிக்கிறவன், हि - ஸ்புடமாக, गुरुः - குருவாம். 30

*பொருள் : - நல்ல கண், புலனறிவு, அவற்றால் ஏற்படும் தீர்மானம், நல்லொழுக்கம் ஆகிய மூன்று ரத்தினங்களைப் பெற்றுத் தூய்மையடைந்து, சான்றோரிடத்தில் நட்புக் கொண்டு, பிறருக்காகத்தான் செயல்களைச் செய்து, அறத்தைக் கடைப்பிடிப்பவனே பிறவிப்பெருங்கடலைத் தாண்டக்கடவன்.*

गुरुभक्तो भवाद्भीतो विनीतो धार्मिकः सुधीः ।
शान्तस्वान्तो ह्यतन्द्रालुः शिष्टः शिष्योऽयमिष्यते ॥ 31

गुरुभक्तः - குருபக்தனானவன், भवात् - சம்சாரத்தினின்று, भीतः - பீதியையுடையவன், विनीतः - விநயத்தையுடையவன், धार्मिकः - தார்மீகனானவன், सुधीः - புத்திமானானவன், शान्तस्वान्तः - சாந்தமான மனதை உடையவன், अतन्द्रालुः - ஆலஸ்யமில்லாதவன், शिष्टः - சிஷ்டனானவன், अयं - இவன், शिष्यः - சிஷ்யனென்று, इष्यते - அங்கீகரிக்கப்படாநின்றான். 31

பொருள் : - ஆசிரியனிடம் ஈடுபட்டவன், உலக வாழ்வைக் கண்டு அஞ்சுபவன், அறவோன், அறிவுடையவன், அமைதியான மனமுடையவன், சோம்பலற்றவன், சான்றோன், இத்தன்மைகளை உடையவனே மாணாக்கனாக ஏற்றுக்கொள்ளப்படுகிறான்.

गुरुभक्तिः सती मुक्त्यै क्षुद्रं किं वा न साधयेत् ।
त्रिलोकीमूल्यरत्नेन दुर्लभः किं तुषोत्करः ॥ 32

सती - ப்ரசன்னமான, गुरुभक्तिः - குருபக்தியானது, मुक्त्यै - மோக்ஷத்தின் பொருட்டு, क्षुद्रं - தேவேந்திர சக்ரவர்த்தியின் பதவியான, किं वा - என்னத்தைத்தான், न साधयेत् - சாதிக்கக்கடவதல்ல, तथाहि - அப்படியன்றோ, त्रिलोकीमूल्यरत्नेन - மூன்று லோகமும் விலை பெறுகிற ரத்தனத்தினாலே, तुषोत्करः - உமியானது, दुर्लभः किं - துர்லபமோ. 32

பொருள் : - வீடுபேறு பெறுதலின் பொருட்டு, ஏற்படும் ஆசிரியரிடத்தில் உண்டாகும் ஈடுபாடு, இந்திரபதவியை ஏற்படுத்திதராதா என்ன ? மூன்று உலகுக்கும் ஈடான அல்லது மூன்று உலகின் விலையைக் காட்டிலும் அதிக மதிப்புப்பெற்ற ரத்தினக்கல்லால் உமியை வாங்குவது கடினமா ? (இல்லவே இல்லை. இந்திர பதவி முதலானவை காற்றில் பறக்கும் உமிக்கு ஒப்பானவை என்பது கருத்து)

गुरुद्रुहां गुणः को वा कृतघ्नानां न नश्यति ।
विद्यापि विद्युदाभा स्यादमूलस्य कुतः स्थितिः ।

कृतघ्नानां - செய்த நன்றியை கெடுத்திருப்பர் களாய் இருக்கிற, गुरुद्रुहां - குருதுரோஹிகளுக்கு, को वा गुणः - எந்த குணந்தான், नश्यति - கெடா நின்றதல்ல, विद्यापि - வித்தையும், विद्युदाभा - மின்னலுக்கு சமமானது, स्यात् - ஆகக்கடவது. अमूलयस्य - வேரில்லாததற்கு, स्थितिः - ஸ்திதியானது, कुतः - எங்கிருந்து. 33

பொருள் : - செய்நன்றி கொன்றவர்களுக்கும், ஆசிரியருக்கு துரோகம் இழைத்தவர்களுக்கும் நற்குணங்கள் இருக்காது. வேரில்லாத செடிக்கு உயிர் இருக்காது. இவை (செய்நன்றி மறத்தல், துரோகம்) இல்லாத மனிதனுக்கு உயிர் போன்ற கல்வி நிலைக்காது.

गुरुद्रुहो न हि क्वापि विश्वास्यो विश्वघातिनः ।
अबिभ्यतां गुरुद्रोहादन्यद्रोहात्कुतो भयम् ॥ 34

विश्वघातिनः - சமஸ்தத்தையும் கெடுக்கிறதான, गुरुद्रुहो - குருத்ரோஹிக்கு, क्वापि - எங்கேயும், विश्वास्यः - விஸ்வசிக்கப்படுமது, न हि - இல்லையன்றோ, गुरुद्रोहात् - குருத்ரோஹத்தினின்றும், अबिभ्यतां - பயப்படாதவர்களுக்கு, अन्यद्रोहात् - அன்ய த்ரோஹத்தினின்றும், भयं - பயமானது, कुतः - எங்கு நின்றும். 34

பொருள் : - எல்லாவற்றையும் அழிக்கும் குருத்ரோகியிடம் யாரும் நம்பிக்கை கொள்வதில்லை. குருத்ரோஹத்துக்கே அஞ்சாதவர்கள் எதற்குத்தான் அஞ்சுவர்?

अथ कृत्यविदाचार्यः कृतकृत्यं यथाविधि ।
छात्रं प्रबोधयामास सद्धर्मं गृहमेधिनाम् ॥ 35

अथ - பிற்பாடு, कृत्यवित् - யோக்யத்தை அறிந்திருக்கிற, सःआचार्यः - அந்த ஆச்சாரியாரானவர், कृतकृत्यं - க்ருதக்ருத்யனாக, छात्रं - சிஷ்யனிடம், गृगमोधिनाम्- க்ருஹஸ்தர்களுடைய, धर्मं - தர்மத்தை, यथाविधि - யதாக்ரமாக, प्रबोधयामास - போதித்தார்கள். 35

***பொருள் :*** *- பிறகு செய்யவேண்டிய செயலை அறிந்த ஆசிரியர், கடமையை முடித்த அந்த மாணவனுக்கு, குடும்பத்திலுள்ளவர்களுக்கு ஒத்த அறத்தை, அறிவித்தார்.*

पुनश्च राजपुत्रत्वमपि बोधयितुं गुरुः ।
अनुगृह्याभ्यथाधात्तस्य तदुन्तमिदं तया ॥ 36

पुनश्च - பிற்பாடும், राजपुत्रत्वमपि -ராஜபுத்ர ஸ்வரூபத்தையும், बोधयितुं - அறிவிக்கிறதுக்கு, गुरुः - குருவானவர், अनुगृह्य - அனுகிரஹித்து, तस्य - அந்த ஜீவன்தரனுக்கு, तदुदन्तं - அவனுடைய விருத்தாந்தத்தை, इदं तया - இவ்வளவினாலே, अभ्यथाधात् - சொன்னார். 36

***பொருள் :*** *- பிறகு அவன் ஒரு அரசன் மைந்தன் என்பதைத் தெரியப்படுத்த, அவனது ஆசான் அவனது கதையைக் கூறத்துவங்கினான்.*

काष्टाङ्गारमसौ ज्ञात्वा राजघं गुरुवाक्यतः ।
सत्यन्धरात्मजः क्रोधात्संनाहं तद्वधे व्यधात् ॥ 37

असौ - ஜீவந்தரனானவன், राजघं - ராஜாவை கொன்றவனாயிருக்கிற, काष्टाङ्गारं - காஷ்ட்டாங்காரனை,

गुरुवाक्यतः - குருவசனத்தினின்று, ज्ञात्वा - அறிந்து, सत्यंधरात्मजः - சத்தியந்திரமகாராஜாவினுடைய புத்ரனானவன், क्रोधात् - க்ரோதத்தினின்றும், तद्वधे - காஷ்ட்டாங்காரனைக் கொல்லுகிறதிலே, सन्नाहं - யுத்த சன்னாஹத்தை, व्यधात् - பண்ணினான். 37

பொருள் : - காஷ்டாங்காரனே அரசனைக் கொன்றவனென்றும், தான் சத்யந்தரமன்னனின் மகனென்றும் ஆசான் வாயிலாக உணர்ந்த ஜீவந்தரன் சினமுற்று, போருக்கான ஏற்பாடுகளைச் செய்யத் துவங்கினான்.

मुहुर्निवार्यमाणोऽपि सूरिणा न शशाम सः ।
हन्तात्मानमपि घ्नन्तः क्रुद्धाः किं किं न कुर्वते ॥ 38

सूरिणा - ஆச்சார்யராலே, मुहुः - திரும்ப திரும்ப निवार्यमाणः - தடையிடப்பட்டிருக்கிற, सोपि - ஜீவந்தரனும், शशाम - உபசமித்தான், न - இல்லை. हन्त हन्त - கெட்ட கெட்ட, तथाहि - அப்படியன்றோ, आत्मानमपि - தன்னையும், घ्नन्तः - கொல்லாநின்றிருக்கிற, क्रुद्धाः - கோபிகள், किं न कुर्वते - என்னதை பண்ணா நின்றார்கள் அல்ல. 38

பொருள் : - ஆசிரியரால் மீண்டும் மீண்டும் தடுக்கப்பட்டும்கூட, ஜீவந்தரன் அமைதியுறவில்லை. தன் உயிரையே தியாகம் செய்ய எண்ணம் கொண்டுள்ளவர்கள் என்னதான் செய்யமாட்டார்கள் ?

वत्सरं क्षम्यतामेकं वत्सेयं गुरुदक्षिणा ।
गुरुणोति निषिद्धोऽभूत्कोऽनन्धो लङ्घयेद्गुरुम् ॥ 39

वत्स - வாராய்புத்ரனே, एकवत्सरं - ஒரு வருஷம், क्षम्यतां - க்ஷமிக்கப்படுமது, इयं - இது, गुरुदक्षिणा - குரு தக்ஷணையானது, इति - என்று, गुरुणा - குருவினாலே, निषिद्धः - தடையிடப்பட்டவன், अभूत् - ஆனான். तथाहि - அப்படியன்றோ. अबन्धः - விவேகியானவன், कः - எவன், गुरुं -குருவை, लङ्घयेत् - மீறக்கடவன். 39

**பொருள் : - குழந்தையே ! இது ஆசிரியனுக்கு வழங்கப்படவேண்டிய காணிக்கை. ஒரு வருடம் பொறுமையாக இருப்பாயாக என்று ஆசிரியரால் தடுக்கப் பட்ட பகுத்தறிவுள்ள ஜீவந்தரன் (படையெடுத்துச் செல்ல) தடுக்கப்பட்டான். எவர்தான் ஆசிரியரின் கட்டளையை மீறுவார் ?**

पश्यन्कोपक्षणे तस्य पारवश्यमसौ गुरुः ।
अशिक्षयत्पुनश्चैनमपथघ्नी हि वाग्गुरोः ॥ 40

எது, तस्य - ஜீவந்தரனுடைய, कोपक्षणे - கோபக்ஷணத்திலே, पारवश्यं - பரவசமானதை, पश्यन् - பாராய் நின்றவனாய்க்கொண்டு, असौ गुरुः - இந்த குருவானவன், पुनश्च - பிற்பாடும், एनं - இவனை, अशिक्षयत् - சிக்ஷித்தான், तथाहि - அப்படியன்றோ, गुरोः - குருவினுடைய, वाक् - வசனமானது, अपथघ्नीः - துர்மார்க்கத்தைக் கெடுக்கிறதன்றோ. 40

**பொருள் : - ஜீவந்தரனுடைய சினப்பார்வையால் அவன் தன் வயமிழந்து இருக்கிறான் என்பதை உணர்ந்த ஆசிரியர், மீண்டுமவனுக்கு அறிவுரைகள் கூறினார். ஆசிரியனின் சொல் தகாத வழியை அழிக்கக் கூடியது அல்லவா ?**

अवशः किमहो मोहादकुपः पुत्रपुङ्गव ।
सति हेतौ विकारस्य तदभावो हि धीरता ॥ 41

पुत्रपुङ्गव - வாராய் புத்ர ஸ்ரேஷ்டனே, मोहात् - மோஹத்தினின்றும், अवशः किं - வசமாகாதவனாய்க் கொண்டு என்ன, अहो - ஆச்சரியம், अकुपः - கோபியாக வேண்டாம், विकारस्य - விகாரத்து, हेतौ - காரணமானது, सति - உண்டாயுள்ள அளவில், तदभावः - அந்த விகாரமில்லாதது, धीरता हि - தீரத்துவமன்றோ. 41

*பொருள் : - மக்களிற் சிறந்தவனே, ஒரு பொருளின் மீதுகொண்ட ஈடுபாட்டின் காரணமாக அதன்மீது அளப்பறிய மயக்கம் கொண்டு, சினம் கொள்ள வேண்டாம். மனம் மாறுதலுக்குக் காரணம் இருப்பினும், அவ்வாறு மனம் மாறாமல் திண்மையுடன் விளங்குவதே துணிவு எனப்படும்.*

अपकुर्वति कोपश्चेत्किं न कोपाय कुप्यसि ।
त्रिवर्गस्यापवर्गस्य जीवितस्य च नाशिने ॥ 42

अपकुर्वति - அபகாரம் பண்ணின புருஷனிடத்திலே, कोपः - கோபமானது, चेत् - ஆகில், त्रिवर्गस्य - தர்மார்த்தகாமத்தினுடையவும், अपवर्गस्य - மோக்ஷத்தினுடையவும், जीवितस्य च - ஜீவிதத்தினுடையவும், नाशिने - இதுகளை எல்லாம் கெடுக்கிறதான, कोपाय - கோபத்தின் பொருட்டு, किं न कुप्यसि - ஏன் கோபியா நின்றாய் இல்லை.

*பொருள் : - அறம், பொருள், இன்பம், வீடு இந்நான்கையும் அழிக்கும், தீமையைச் செய்யும் சினத்தின் மீது நீ ஏன் சினப்படவில்லை ?*

दहेत्स्वमेव रोषाग्निर्नापरं विषयं ततः ।
क्रुध्यन्निक्षिपति स्वाङ्गे वह्निमन्यदिधक्षया ॥ 43

रोषाग्निः - கோபாக்னியானது, स्वमेव - தன்னையே, दहेत् - தஹிக்கக்கடவது, विषयम् - விஷயமான, अपरं - அன்யனை, न - தஹிக்கக்கடவதல்ல. ततः - அது காரணத்தினின்றும், क्रुध्यन् - கோபியாநின்றவனாய்க் கொண்டு, अन्यदिधक्षया - அன்யரைச்சுட வேணுமென்கிற, இச்சையினாலே, वह्निं - கோபமாகிற அக்னியை, स्वाङ्गे - தன்னுடைய சரீரத்திலே, निक्षिपति - வையாநின்றான். 43

*பொருள் : - மற்றவரைச் சுட்டுப் பொசுக்க வேண்டும் என்று ஒருவர் வெளிப்படுத்தும் சினம், அவர் மீதே வீழ்ந்து அவரையே எரித்து விடுகிறது. அதைக்காட்டிலும் சினமாகிற நெருப்பு வேறொன்றையும் செய்வதில்லை.*

हेयोपादेयविज्ञानं नो चेद्व्यर्थः श्रमः श्रुतौ ।
किं व्रीहिखण्डनायासैस्तण्डुलानामसंभवे ॥ 44

हेयोपादेयविज्ञानं - ஹேயோபாதேய விஞ்ஞானமானது, नोचेत् - இல்லையாகில், श्रुतौ - சாஸ்த்திரத்திலே, श्रमः - வழிவிக்கை (அப்யாசப்பயிற்சி) व्यर्थः - ப்ரயோஜனமில்லை. तथाहि - அப்படியன்றோ, तण्डुलानाम् - அரிசிகளுடைய, असंभवे - சம்பவமில்லாததினாலே, व्रीहिखण्डनायासैः - நெல்லுகுத்துகிற ப்ரயாசங்களினாலே, किं - என்ன. 44

*பொருள் : - தீயன கழிதலும் நல்லன ஏற்றலுமாகிய பகுத்தறிவு இல்லையென்றால், கல்வி பயிலும் முயற்சியில் யாதொரு பயனும்இல்லை. அரிசி கிடைக்காது என்றால் நெல்லை யாராவது குத்திக்கொண்டிருப்பார்களா ?*

तत्वज्ञानं च मोघं स्यात्तद्विरुद्धप्रवर्तिनाम् ।
पाणौ कृतेन दीपेन किं कूपे पततां फलम् ॥ 45

तत्वज्ञानं च - தத்வஞானமும், तद्विरुद्धप्रवर्तिनाम् पाणौ कृतेन - அதுக்கு மாறுபாடாக வர்த்திக்கப்பட்ட பேர்களுக்கு, मोघं - பழுதானது, स्यात् - ஆகக்கடவது, तथाहि - அப்படியன்றோ, कूपे - கிணத்திலே, पततां - விழுந்தவர்களுக்கு, पाणौ - கையிலே, कृतेन - பண்ணப்பட்டிருக்கிற, दीपेन - தீபத்தினாலே, फलं - பலமானது, किं - என்ன. 45

*பொருள் : - நல்லறிவை அடைந்தவர்கள், அதற்கு மாறாகச் செயல்படுங்கால், நல்லறிவு அழிந்துவிடும். கையில் விளக்கிருந்தும் கிணற்றில் வீழ்பவர்களுக்கு விளக்கால் என்ன பயன் ?*

तत्वज्ञानानुकूलं तदनुष्टातुं त्वमर्हसि ।
मुषितं धीधनं न स्याद्यथा मोहादिदस्युभिः ॥ 46

मोहादिदस्युभिः - மோஹம் முதலான கள்ளர்களினாலே, यथा - எப்படி, धीधनं - புத்தியாகிற தனமானது, मूषितं - திருடப்படுகிறது, नस्यात् - ஆகக்கடவதல்ல. तत् - அந்த புத்தியை தத்வஜ்ஞானத்துக்கு அனுகூலமாக, अनुष्टातुं - அனுஷ்டிக்கிறதுக்கு, त्वं - நீ, अर्हसि - யோக்யனாகாய் நின்றாய். 46

பொருள் : - (தகாத பொருளின் மீது விருப்பம் கொண்டதால் ஏற்படும்) மயக்கமாகிய திருடன், அறிவாகிய செல்வத்தைக் கவர்ந்து செல்லாமலிருக்க நல்லறிவின் பாற்பட்ட செயல்களை நீ செய்யவேண்டும்.

स्त्रीमुखेन कृतद्वारान्स्वपथोत्सुकमानसान् ।
दुर्जनाहीञ्जहीहि त्वं ते हि सर्वंकषाः खलाः ॥ 47

स्त्रीमुखेन - ஸ்திரியருடைய முகத்தினாலே, कृतद्वारान् - பண்ணப்பட்ட துவாரங்களுடைய, स्वपथोत्सुकमानसान् - தங்கள் தங்கள் ஸ்தானத்திலே ஆசக்தியான, மனசுகளை யுடைய, दुर्जनाहीन् - துர்ஜனனாகிற சர்ப்பங்களை, त्वं - நீ, जहीहि - விடு, तथाहि - அப்படியன்றோ, ते खलाः - அந்த துர்ஜனர்கள், सर्वं - சர்வத்தை, कषा हि - ஹிம்சியா நின்றார்களன்றோ. 47

பொருள் : - பெண்களை அல்லது தீயவழிகளைப் பயன்படுத்தி, தங்கள் வழியில் ஈடுபட்ட மனம் கொண்ட தீயவர்களாகிய பாம்புகளை நீ விட்டுவிடு. அவர்கள் எல்லோரும் துயரைத்தரக்கூடிய தரமற்ற இழிமக்கள்.

स्पृष्टानामहिभिर्नश्येद्गात्रं खलजनेन तु ।
वंशवैभववैदुष्यक्षान्तिकीर्त्यादिकं क्षणात् ॥ 48

आहीभिः - சர்பங்களினாலே, स्पृष्टाना - ஸ்பர்சிக்கப்பட்ட பேர்களிடையே, गात्रं - சரீரமானது, नश्येत् - நாசமாக்கக்கடவது. तु - விசேஷமுண்டு. खलजनेन - துர்ஜனத்தினாலே, वंशवैभववैदुष्यक्षान्तिकीर्त्यादिकं - வம்ச, விபவ, வித்தை, க்ஷமை, क्षणात् - க்ஷணத்தினின்றும், கெட்டுப் போமென்றறிவது, 48

பொருள் : - பாம்புகளால் தீண்டப்பட்டால், உடல் மட்டுமே அழிவுறும். ஆனால் தீயவர்களால் தீண்டப் பட்டவன், குலம், சிறப்பு, கல்வி, பொறுமை, புகழ் இவற்றை ஒரு கணத்தில் இழக்கிறான்.

खलः कुर्यात्खलं लोकमन्यमन्यो न कश्चन ।
न हि शक्यं पदार्थानां भावनं च विनाशवत् ॥ 49

खलः - துர்ஜனனானவன், लोकं - ஜனத்தை, खलं - துர்ஜனனாக, कुर्यात् - பண்ணக்கடவன். अन्यः - சஜ்ஜனனானவன், अन्यं - சஜ்ஜனனாக, कश्चन - ஒருத்தனையும், न - பண்ணக்கடவன் அல்ல. तथाहि - அப்படியன்றோ, पदार्थानां - கடபாதாதிகளுடைய, विनाशवत् - விநாசமானது போல, भावनं च - உத்பத்தியும், शक्यं - சமர்த்தமானது, नहि - இல்லையன்றோ. 49

பொருள் : - தீயோன் தீச்செயலைத்தான் செய்வான். நல்லவன் நல்லதைத் தவிர வேறெதையும் செய்ய மாட்டான். பொருட்கள் எதிலிருந்து உற்பத்தி செய்யப்படுகின்றனவோ, அதேபோல, அவை அழிவுறும் போதும் மீண்டும் முன்பிருந்த நிலையைத்தான் அடைகின்றன. அதாவது, காரணத்துக்கு ஏற்றவாறுதான் காரியம் இருக்கும். தீமையை மனதில் கொண்டுள்ளவன் தீமைதான் செய்வான். என்பது பொருள்.

सज्जनास्तु सतां पूर्वं समावर्ज्याः प्रयत्नतः ।
किं लोके लोष्टवत्प्राप्यं श्लाघ्यं रत्नमयत्नतः ॥ 50

तु - பின்னை, सतां - சத்புருஷர்களுக்கு, सज्जनाः - சஜ்ஜனர்கள், पूर्वं - முந்தி, प्रयत्नतः - ப்ரயத்தனத்தினின்றும்,

समावर्ज्याः - தேடப்படுவார்கள். तथाहि - அப்படியன்றோ, लोके - லோகத்திலே, अयत्नतः - ப்ரயத்தினம் இல்லாதத்தினின்றும், लोष्टवत् - ஓடானது போல, श्लाघ्यं - பூஜ்யமான, रत्नं - ரத்னமானது, प्राप्यं किं - அடையப்படுமதோ. 50

*பொருள் : - முதன் முதலில் சான்றோர்கள் எப்போதும் பெருமுயற்சி செய்து, பிற சான்றோர்களைச் சேர்த்து வைத்துக்கொள்வார்கள். முயற்சியில்லாமல் வெறும் கல்போல நினைத்து, அடையப்படும் விலைமதிப்பற்ற ரத்தினம் போற்றப்படுவதில்லையே ! (ஆகவே சான்றோரகள் ரத்தினங்கள் போல கிடைப்பதற்கு அரிதானவர்கள்).*

जाग्रत्वं सौमनस्यं च कुर्यात्सद्वागलं परैः ।
अजलाशय संभूतममृतं हि सतां वचः ॥ 51

स्यात् - ஸத்புருஷர்களுடைய வசனமானது, जाग्रत्वं - எச்சரிக்கையையும், सौमनस्यं च - சுமனத்வத்தையும், सद्वाक्- சான்றோர்களின் சொல்[1], कुर्यात् - பண்ணக்கடவது, परैः - அன்யங்களினாலே, अलं - அமையும், तथाहि - அப்படியன்றோ, सतां - சத்புருஷர்களுடைய, वचः - வசனமானது, अजलाशयसंभूतम् - சமுத்ரமல்லாதத்திலே உண்டான, अमृतं हि - அம்ருதமன்றோ. 51

*பொருள் : - சான்றோர்களின் சொல் விழிப்புணர்வையும், நல்மனதையும் தரும். மற்றவர்கள் தேவையில்லை. சான்றோர்களின் சொற்கள் பாற்கடலிலிருந்து தோன்றாத அமுதத்துக்கு ஒப்பானவை.*

---

1. em.

(அதாவது அமுதம் பாற்கடலில் தோன்றும். சான்றோர்ளின் சொற்கள் பாற்கடலில் தோன்றிய அமுதம் போன்றவை. அதாவது அழிவற்றவை என்று பொருள்).

यौवनं सत्वमैश्वर्यमेकैकं च विकारकृत् ।
समवायो न किं कुर्यादविकारोऽस्तु तैरपि ॥ 52

यौवनं - யௌவனமும், सत्वम् - பலமும், ऐश्वर्य - ஐஸ்வர்யமும், एकैकं च - ஒன்றுக்கொன்றும், विकारकृत् - விகாரத்தைப் பண்ணுகிறது, समवायः - ஸமூகமானது, किं - என்னத்தை, न कुर्यात् - பண்ணக்கடவதல்ல, तैरपि - யௌவனாதிகளினாலேயும், अविकारः - விகாரமில்லாததும், अस्तु - ஆகக்கடவது. 52

பொருள் : - இளமையும், வலிமையும், செல்வம் இவை ஒவ்வொன்றும் மனிதரிடம் மாறுதலை ஏற்படுத்தும். இவை மூன்றும் ஒன்று சேர்ந்தால் என்னதான் செய்யாது ? (இவை ஒவ்வொன்றும் தீயபாதைக்கு இட்டுச்செல்லும், மூன்றும் சேர்ந்தால் நிச்சயமாக ஒருவன் தீய வழியில் செல்லவே செய்வான்) ஆகவே, அவைகளால், ஒருவன் மனமாறுதல் அடையக் கூடாது.

न हि विक्रियते चेतः सतां तद्धेतु संनिधौ ।
किं गोःपदजलक्षोभी क्षोभयेज्जलधेर्जलम् ॥ 53

அந்த விகாரத்துக் காரணமாக சன்னிதியிலே, विक्रियते - விகாரத்தை அடையாநின்றது, नहि - இல்லையன்றோ, तथाहि - அப்படியன்றோ, गोःपदजलक्षोभी - மாட்டுக் குளப்படியினுடைய ஜலத்தினிட கலக்கமானது, जलधेः - சமுத்திரத்தினுடைய, जलम् - ஜலத்தை, क्षोभयेत् - கலக்கக்கடவது, किं - என்ன. 53

பொருள் : - மனமாறுதலுக்கான காரணம் இருப்பினும், சான்றோர்களின் மனம் மாறாது. வாயிற்படியில் தேங்கும் நீரை (தனது கால்களால்) கலக்குபவன், அதேபோல, கடல் நீரைக் கலக்க முடியுமா ? அதாவது மனமாறுதலுக்கான காரணங்கள் உறுதியற்ற மனம் படைத்தவனைத்தான் கலக்கமுறச்செய்யும். உறுதிகொண்ட சான்றோர்களின் மனம்கடலைப் போன்று ஆழமானது. அதனை அக்காரணங்கள் ஏதும் செய்ய இயலாது.

देशकालखलाः किं तैश्चला धीरेव बाधिका ।
अवहितोऽत्र धर्मे स्यादवधानं हि मुक्तये ॥ 54

எது, देशकालखलाः - தேச கால துர்ஜனங்களாலே, किं - என்ன, चला धीरेव - சஞ்சல புத்தியே, बाधिका - பாதிக்கபடாநின்றது. अवहितः - நன்றாக வஹிக்கப்பட்டும். अत्र - அது இவ்விடத்திலே, धर्मे - தர்மத்திலே, स्यात् - ஆகக்கடவது, तथाहि - அப்படியன்றோ, अवधानं - சாவதானமானது. मुक्तये हि - மோக்ஷத்தின் பொருட்டன்றோ. 54

பொருள் : - இடம், நேரம் ஆகிய இவ்விரண்டும் அவை நின்ற மனம் கொண்டவனையே பாதிக்கும் மனதை நிலை நிறுத்தியவன் அறத்தின்பால் செல்வதால் அவன் வீடுபேறு அடைவான்.

शिक्षावचः सहस्रैर्वा क्षीणपुण्ये न धर्मधीः ।
पात्रे तु स्फायते तस्मादात्मैव गुरुरात्मनः ॥ 55

शिक्षावचः सहस्रैर्वा - சிக்ஷிக்கப்பட்ட வசன ஸஹஸ்ரங்களினாலேதான் க்ஷிணபுண்யமில்லாதவனிடத்திலே, धर्मधीः - தர்மபுத்தியானது, न - இல்லை, तु - விசேஷமுண்டு, पात्रे - யோக்யமன பாத்திரத்திலே, स्फायते - ப்ரகாசியானின்றது, तस्मात् - அது காரணத்தினின்றும், आत्मनः - தனக்கு, आत्मैव - தானே, गुरुः - குருவானவன்.

பொருள் : - ஆயிரக்கணக்கான அறிவுரைகள் புண்ணியம் குறைந்தவனை அணுகுவதில்லை. அறம் நிறைந்த அறிவைக் கொண்டவனிடத்தில்தான் அந்த அறிவுரைகள் மிளிர்கின்றன. ஆகவே தான்தான், தனக்கு ஆசான்.

न श्रृण्वन्ति न बुध्यन्ति न प्रयान्ति च सत्पथम् ।
प्रयान्तोऽपि न कार्यान्तं धनान्धा इति चिन्त्यताम् ॥

धनान्धाः - தனாந்தரானவர்கள், सत्पथम् - சன்மார்க்கத்தை, न श्रृण्वन्ति - கேளாநின்றார்களில்லை, न बुध्यन्ति - அறியாநின்றார்களுமல்ல, न प्रयान्ति च - அடையாநின்றார்களுமல்ல, प्रयान्तोऽपि - அடைந்தாலும், कार्यान्तम् - கார்யத்தினுடைய முடிவை न - அடையார்கள் इति - என்று, चिन्त्यताम् - சிந்திக்கப்படுமது. 56

பொருள் : - செல்வச்செருக்கால் குருடாகிப் போனவர்கள் நல்வழியை நாடிச்செல்வதில்லை. அதனை அறிந்து கொள்வதும் இல்லை. அப்படியே நாடிச் சென்றாலும், நல்வழிச்செல்வதால் ஏற்படும் பயன் கிடைக்கும் வரை அப்பாதையில் செல்வதில்லை.

इत्याशास्य तमाश्वास्य कृच्छ्रं स तपसे गतः ।
प्राणप्रयाणवेलायां न हि लोके प्रतिक्रिया ॥ 57

इति - என்று, आशस्य - நெற்றி, तम् - ஜீவந்தரனை, कृच्छ्रं - ப்ரயாசமாக, आश्वास्य - விஸ்வசிக்கபண்ணிவித்து, समः - அந்த आश्चर्यातपसे - தபஸின் பொருட்டு, गतः - அடைந்தார். तथाहि - அப்படியன்றோ. लोके - லோகத்திலே, प्राणप्रयाणवेलायां - பிராணன் போற வேளையிலே, प्रतिक्रिया - ப்ரதிக்ரியையானது, नहि - இல்லையன்றோ. 57

*பொருள் : - இவ்வாறாக நல்வழியை அவனுக்கு போதித்துவிட்டு, அவர் கடுமையான தவம் செய்யப் புறப்பட்டுச் சென்றார். உயிர் போகக்கூடிய நேரத்தில் அதற்கான (உயிர் போகாமலிருப்பதற்கான) வழியைத் தேடுவது இல்லையே! (அதாவது, சிக்கலில் சிக்கிக்கொண்டு தீர்வுதேடுவதைக் காட்டிலும், அதற்கு முன்னமேயே எச்சரிக்கையாக இருந்தால் சிக்கல் ஏற்படாது என்பது பொருள்)*

प्रव्रज्याथ तपः शक्त्या नित्यमानन्दमव्रजत् ।
निष्प्रत्यूहा हि सामग्री नियतं कार्यकारिणी ॥ 58

अथ - பிற்பாடு, प्रव्रज्य - தீக்ஷித்து, तपः शक्त्या - தபஸினுடைய சாமர்த்தியத்தினாலே, नित्यं - நித்யமான, आनन्दम् - மோக்ஷத்தை, अव्रजत् - அடைந்தார். निष्प्रत्यूहा - விக்னமில்லாத விசாரத்துடனே கூடின, सामग्री - சாமக்ரியானது, नियतं - நிச்சயமாக, कार्यकारिणी हि - கார்யத்தை பண்ணுகிறதன்றோ. 58

பொருள் : - பிறகு அவர் துறவை மேற்கொண்டு, அழிவற்ற ஆனந்த நிலையை (ஜீவன்முக்தி) அடைந்தார். தடையற்ற வழிகள் நிச்சயமாக நோக்கத்தை நிறைவேற்றுகின்றன.

तपोवनं गुरौ प्राप्ते शुचं प्रापत्स कौरवः ।
गर्भाधानक्रियामात्रन्यूनौ हि पितरौ गुरुः ॥ 59

तपोवनं - தபோவனத்தை, गुरौ - குருவானவன், प्राप्ते - அடைந்துள்ளளவில், स कौरवः - அந்த ஜீவந்தரனானவன், शुचं - துக்கத்தை, प्राप - அடைந்தான். तथाहि - அப்படியன்றோ. गुरुः - குருவானவர், गर्भाधानक्रियामात्रन्यूनौ - கர்ப்பாதானக்ரியாமாத்ரங்களினாலே, पितरौ हि - தாய்தகப்பனானவர்களன்றோ. 59

பொருள் : - அந்த ஆசிரியர் தவச்சாலையை அடைந்தவுடன் குருவமிசத்தைச் சார்ந்த ஜீவந்தரன் தூய்மையடைந்தான். ஆசிரியர் என்பவர் கர்பாதானம் என்று அழைக்கப்படும் கருவுறுதல் தவிர, எல்லாச் செயல்களையும் மாணவன் பொருட்டுச் செய்கிறார். ஆகவே ஆசிரியன் ஈன்றெடுத்தல் என்ற செயலால் மட்டுமே, பெற்றோரைக் காட்டிலும் வேறுபட்டு நிற்கிறார். வேறு எல்லா நிலைகளிலும் அவர் பெற்றோருக்குச் சமமானவரே.

तत्वज्ञानजलेनाथ शोकाग्निं निरवापयत् ।
शैत्ये जाग्रति किं नु स्यादातपार्तिः कदाचन ॥ 60

अथ - பிற்பாடு, शोकाग्नि - துக்காக்னியை, तत्वज्ञान जलेन - தத்வஞான ஜலத்தினாலே, निखापयत् - அடவிக்கப்பட்டுது, शैत्ये - சைத்யமானது. जाग्रतिसति - உண்டாயுள்ளளவில், आतपार्तिः - வெய்யிலினாலே உண்டான துக்கமானது, कदाचन - ஒருக்காலும், किं नु स्यात् - என்னாகக் கடவது. 60

*பொருள் : - உண்மையறிவு என்ற நீரால் ஜீவந்தரன் துயராகிய நெருப்பை அணைத்தான். குளிர் இருக்கும்போது வெப்பத்தால் ஏற்படும் துயர் ஒருவனைத் துயரப்படுத்தாது.*

अथास्मिन्विद्यया कान्त्या विदुषां योषिणां हृदि ।
रथे च योग्यया भाति तत्र प्रस्तुतमुच्यते ॥ 61

अथ - பிற்பாடு, अस्मिन् - ஜீவந்தரனானவன், विद्यया - வித்யையினாலே, विदुषां - வித்வாம்சர்களுடைய, हृदि - ஹ்ருதயத்திலே, कान्त्या - காந்தியினாலே, योषितां - ஸ்திர்யர்களுடைய, हृदि - ஹ்ருதயத்திலே, रथे च - தேரிலேயும், योग्या - யோகத்தினாலே, भाति - விளங்காநின்றுள்ளளவில், तत्र - அவ்விடத்திலே, प्रस्तुतं - நடந்த நிகழ்ச்சி, उच्यते - சொல்லப்படாநின்றது. 61

*பொருள் : - பிறகு ஜீவந்தரன் கல்வியால் அறிஞர்கள் மனதிலும், தனது இளமையால் மங்கையர் மனதிலும், வில்வித்தையால்(போரிடும் திறமையால்) தேரிலும், சிறந்து விளங்கினான். அப்போது நடந்த நிகழ்ச்சிகள் கூறப் படுகின்றன.*

अथैकदा समभ्येत्य राजाङ्गणभुवि स्तिताः ।
गावोऽवस्कन्दिता व्याधैरिति गोपा हि चुक्रुशुः ॥ 62

अथ - பிற்பாடு, एकदा - மற்றொருநாள், गोपाः - இடையர்கள், समभ्येत्य - அடைந்து, राजाङ्गण भुवि स्थिताः - அரசனது அவையில் வந்து நின்றவர்களாய்க்கொண்டு, व्याधैः - வேடர்களினாலே, गावः - பசுக்கள், अवस्कन्दिताः - ஓட்டப்பட்டதுகள். इति - என்று, हि - ஸ்புடமாக, चुक्रुशुः - கூக்குரலிட்டனர், 62

*பொருள் : - (இது இவ்வாறு இருக்க) (நாட்டில் காஷ்ட்டாங்காரனது அவையில் மாடுமேய்ப்பவர்கள் வந்தனர். அவர்கள் அரசனைப் பார்த்து, வேடர்கள் ஆவினங்களை ஓட்டிச்சென்றுவிட்டனர் என்று தெளிவாகக் கூறி அழுது புலம்பினர்.*

काष्टाङ्गारोऽपि रुष्टोऽभूत्तदाक्रोशवचः श्रुतेः ।
असमानकृतावज्ञा पूज्यानां हि सुदुः सहा ॥ 63

काष्टाङ्गारोऽपि - காஷ்ட்டாங்காரன், *तदा - அப்பொழுது, आक्रोशवचः श्रुतेः - கூப்பிடுகிற வசனத்தை கேட்டதினின்று, रुष्टः - கோபத்தையுடைத்தானவன், अभूत् - ஆனான். तथाहि - அப்படியன்றோ, असमानकृतावज्ञा - சமானமில்லாதவர்களினாலே பண்.ணப்பட்ட அவஸ்தை யானது, पूज्यानां - பூஜ்யர்களுக்கு, सुदुःसहा हि - சஹிக்கிறதர்க்கு அறிதன்றோ. 63

*பொருள் : - இந்தப் பழிச்சொல்லைக் கேட்டவுடன் காஷ்ட்டாங்காரன் மிகச் சினம் கொண்டான். போற்றத்தக்க ஒருவரை அவ்வாறு அற்ற ஒருவர் இழித்தால், அதனைப் போற்றத்தக்கவர் பொறுக்கமாட்டார். அதாவது, அரசன் காஷ்ட்டாங்காரன் போற்றத்தக்கவன் என்று கொள்ள*

---

* Em. तदाक्रोशवचः - *அவர்களுடைய அழுகுரலை*

வேண்டும். கதைப்படி காஷ்ட்டாங்காரன் கதைத் தலைவன், ஜீவந்தரன் எதிரியாகக் கருதப்படுகிறான். இந்தக் கண்ணோட்டத்துடன் பார்த்தால் கொடுக்கப்பட்டுள்ள வேற்றுப்பொருள் வைப்பணி இங்கு பொருந்தாது.

पराजेष्ट पुनस्तेन गवार्थं प्रहितं बलम् ।
स्वदेशे हि शशप्रायो बलिष्टः कुञ्जरादपि ॥ 64

पुनः - பிற்பாடு காஷ்ட்டாங்காரனாலே, गवार्थं - பசுக்கள் நிமித்தமாக, प्रहितं - அனுப்பப்பட்ட, बलम् - பலமானது, पराजेष्ट - தோற்றது, तथाहि - அப்படியன்றோ, स्वदेशे - தன்னுடைய தேசத்திலே, शशप्रायो - முயல் முதலானதும், कुञ्जरादपि - ஆனையினின்றும், बलिष्टोहि - பலிஷ்ட்டமன்றோ. 64

பொருள் : - ஆவினங்களை மீட்டுவரப் புறப்பட்ட போர்வீரர்கள் தோற்றுத் திரும்பினர். தனது இடத்தில் முயலாக இருந்தாலும் அதற்கு யானை பலம் அன்றோ ! அதாவது, வேடர்கள் மிகக் குறைந்தவர்களாக இருந்தாலும், காட்டில் அவர்களுக்கு மிகுந்த பலம் உண்டு. மிகப் பெரிய படையைக் கூட அவர்களால் எதிர்கொள்ள முடியும். அதைத்தான் கவிஞர், வேடர்களை முயலுக்கு ஒப்பிட்டு, அவர்களது பலத்திற்கான காரணத்தையும் கூறுகிறான்.

व्यजेष्ट व्याधसेनेति श्रुत्वा घोषोऽपि चुक्षुभे ।
न बिभेति कुतो लोक आजीवनपरिक्षये ॥ 65

व्याधसेना - வேடர் சேனையானது, व्यजेष्ट - வென்றது (ஜெயித்தது). इति - என்று, श्रुत्वा - கேட்டு, घोषोऽपि -

இடைப்பாளையமும், चुक्षुभे - கலங்கித்து, तथाहि - அப்படியன்றோ, लोकः - ஜனமானது, आजीवनपरीक्षये - ஜீவிக்கிறதுக்கு கேடுவந்தவிடத்திலே, बिभेति - பயப்படா நின்றது. कुतः - என்ன காரணத்தினின்றும், न - அல்ல. 65

*பொருள் : - வேடர் படை வென்றது என்ற செய்தி கேட்டு, இடையர் குலம் கலங்கியது. உயிர் போகப்போகிறது என்ற போது உலகம் பயப்படாதா என்ன ?*

नन्दगोपाह्वयः कोऽपि तज्जयार्थं व्यचीचरत् ।
किं स्यात्किंकृत इत्येवं चिन्तयन्ति हि पीडिताः ॥ 66

नन्दगोपाह्वयः - நந்தகோபனென்று பேரையுடைய, कोऽपि - ஒருத்தன், तज्जयार्थं - வேடரை ஜயிக்கிற நிமித்தமாக, किं - என்ன, कृतः - பண்ணப்படுமது, किं - என்ன, स्यात् - ஆகக்கடவது, इति - என்று, एवं - இப்படி, व्यचीचरत् - சிந்தித்தான். तथाहि - அப்படியன்றோ, पीडिताः - பீடிதர்கள், चिन्तयन्ति हि - சிந்தியாநின்றார்களன்றோ. 66

*பொருள் : - (இதனிடையே) நந்தகோபன் என்ற ஆயர்தலைவன் வேடர்களை வெல்லத் தன்னால் செய்யக் கூடிய செயல் என்ன என்று சிந்திக்கத் தொடங்கினான். துயர்படுபவர்கள் அத்துயரைக் களைய வழியைச் சிந்திப்பார்கள் அல்லவா ?*

धनार्जनादपि क्षेमे क्षेमादपि च तत्क्षये ।
उत्तरोत्तरवृद्धा हि पीडा नृणामनन्तशः ॥ 67

धनार्जनादपि - த்ரவ்யார்ஜனத்தினின்றும், क्षेमे - ரக்ஷிக்கிறத்திலே, क्षेमादपि - ரக்ஷிக்கிறத்தினின்றும், तत्क्षये -

அந்த த்ரவ்யங்களுடைய க்ஷயத்திலே, उत्तरोत्तरवृद्धा - மென்மேலே விருத்தியாக, पीडा - துக்கமானது, नृणां - மனுஷ்யர்களுக்கு, अनन्तरो हि - அனந்தபிரகாரமன்றோ. 67

பொருள் :- செல்வத்தைச் சேர்ப்பதைக் காட்டிலும், அதனைக் காப்பது கடினம், காப்பதைக் காட்டிலும் அதனைத்தகுந்த வழியில் செலவிடுவது அதைவிடக் கடினம். இவ்வாறு துயர் என்பது மனிதர்களுக்கு ஒன்றன்மேல் ஒன்றாக முடிவில்லாமல் வளர்ந்துகொண்டே இருக்கிறது.

यथाशक्ति प्रतीकारः करणीयस्तथापि चेत् ।
व्यर्थः किमत्र शोकेन यदशोकः प्रतिक्रिया ॥ 68

यथा शक्ति प्रतीकारः - யதாசக்தி ப்ரதீகாரமானது, करणीयः - பண்ணப்படுமது, तथाहि - அப்படியன்றோ, व्यर्थः - வ்யர்த்தமானது, चेत् - ஆகில், अत्र - இவ்விடத்திலே, शोकेन - துக்கத்தினாலே, किं - என்ன, यत् - யாதொன்று, अशोकः - துக்கமில்லாதது, प्रतिक्रिया - ப்ரதிக்ரியையானது. 68

பொருள் :- தன்னால் இயன்றவரை இதற்கான மறுசெயலைச் செய்யவேண்டும். ஏனெனில் துயர்ப்படுவது பயனற்றது. துயரை விலக்குவதே இதற்கு பரிகாரம் ஆகும். அதாவது துயர் விலக வேண்டுமென்றால், ஏதாவது ஒரு செயலைச் செய்து துயரை விலக்க முற்படவேண்டும். அம்முயற்சியில் தாம் எதிர்கொண்ட துயர் மறைந்து போகும். அதுவே சரியான பதிலாகும் என்பது பொருள்.

इत्यूहेन स वीराय विजये हि वनौकसाम् ।
सप्तकल्याणपुत्रीभिर्देया पुत्रीत्यघोषयत् ॥ 69

ऊहेन - விசாரத்தினாலே, वनौकसाम् - வேடர்களிடையே, विजये - ஜயக்கிறத்திலை, ही - ஸ்புடமாக, वीराय - வீரன் பொருட்டு, सः - நந்தகோபனானவன், सप्तकल्याणपुत्रीभिः - ஏழு ஸ்வர்ண புத்ரிகளோட, पुत्री - புத்ரியானவள், देया - கொடுக்கப்படுமவள், इति - என்று, अघोषयत् - கோஷிப்பித்தான். 69

பொருள் : - இவ்வாறாகச் சிந்தித்து நந்தகோபன் ஓர் அறிவிப்பைச் செய்தான், "வேடர்களை எந்த ஒரு வீரன் வெற்றிகொள்கிறானோ, அவனுக்கு ஏழு பொற்பதுமை களுடன் எனது மகளைத் திருமணம் செய்து வைப்பேன்" என்று.

सात्यंधरिस्तु तच्छुत्वा तद्घोषणमवारयत् ।
उदात्तानां हि लोकोऽयमखिलो हि कुडुम्बकम् ॥ 70

तु - பின்னை, सात्यन्धरिः - ஜீவந்தரனானவன், तत् - அதை, श्रुत्वा - கேட்டு, तत् - கோஷணம் அந்த கோஷணையை, अवारयत् - தடையிட்டு, तथा - அப்படியே, उदात्तानां - உதாரபுருஷர்களுக்கு, अखिलः - சமஸ்தமான, अयं लोकोऽपि - லோகோபி, இந்த லோகமும், कुडुम्बकम् हि - குடும்பகமன்றோ. 70

பொருள் : - அந்த அறிவிப்பைக் கேட்ட சத்யந்தரன் மகனாகிய ஜீவந்தரன் அதனை மேலும் எவரும் கேட்காதபடி செய்தான். (அதாவது அவன் அந்தத் துணிவான செயலைச் செய்வதென்று முடிவெடுத்து, நந்தகோபனின் அனுமதியும் பெற்றான்) சான்றோர்க்களுக்கு இவ்வுலகே தமது இல்லம் அல்லவா ? (அதாவது உலகிலுள்ளவர்களின் துயரைத் தன் துயராக மதித்து, அதற்கு ஆவன செய்தல். இல்லத்தோர்க்குச் செய்வதைப்போல் பிறர்க்கும் செய்தல்).

जित्वाथ जीवकस्वामी किरातानाहरत्पशून् ।
तमो ह्यभेद्यं खद्यौतैर्भानुना तु विभिद्यते ॥ 71

अथ - பிற்பாடு, जीवकस्वामी - ஜீவகஸ்வாமியானவன், किरातान् - வேடர்களை, जित्वा - ஜயித்து, पशून् - பசுக்களை, आहरत् - ஸ்வீகரித்தான், तथाहि - அப்படியன்றோ, खद्योतैः - மின்மினி பூச்சிகளினாலே, अभेद्यं - பேதிக்கப்படாத, तमः - இருட்டானது, तु - பின்னை, भानुना - சூர்யனாலே, विभिद्यते हि - பேதிக்கப்படாநின்றதன்றோ. 71

*பொருள் : - பிறகு சீவகன் வேடர்களை வென்று பசுக்களை மீட்டான். மின்மினிப் பூச்சிகளால் (விண்மீன்களால்) அகற்றப்படாத இருள் ஞாயிறால் மட்டுமே அகற்றப்படுகிறது.*

ननन्द नन्दगोपोऽपि गोधनस्योपलम्भतः ।
असुमतामसुभ्योऽपि गरीयो हि भृशं धनम् ॥ 72

नन्दगोपोऽपि - நந்தகோபனும், गोधनस्य - கோதனத்தினுடைய, उपलम्भतः - பெறுகிறத்தினின்றும், ननन्द - சந்தோஷித்தான். तथाहि - அப்படியன்றோ. असुमताम् - ஜீவன்களுக்கு, असुभ्योपि - பிராணன்களைக் காட்டிலும், भृशं - மிகவும், धनम् - தனமானது. गरीयो हि - ஸ்ரேஷ்ட்டமன்றோ. 72

*பொருள் : - நந்தகோபனும் ஆவினங்கள் கிடைத்ததால் மிக மகிழ்ந்தான். மக்களுக்கு தங்கள் உயிரைக் காட்டிலும் செல்வங்கள் மீது மிகுந்த பற்று உண்டு அல்லவா? (உயிரே சிறந்த செல்வம் என்றாலும், உயிர்வாழத் தேவையான செல்வங்களை ஒருவன் பெற்றிருக்க வேண்டும் என்ற*

காரணத்தால், மக்கள் உயிரைக் கொடுத்தாவது செல்வத்தைச் சேர்க்கவேண்டும் என்ற கொள்கையுடைத்தவர்களாக இருக்கிறார்கள். அதாவது தாம் இல்லாவிடினும் தம்மைச் சார்ந்தவர் இன்புற்றிருக்க வேண்டும் என்பதே அதன் வெளிப்பாடு.)

अथानीय सुतां दातुं स्वामिने वार्यपातयत् ।
कृत्याकृत्यविमूढा हि गाढस्नेहान्धजन्तवः ॥ 73

अथ - பிற்பாடு, सुतां - புத்ரியை, आनीय - அழைப்பித்து, स्वामिने - ஜீவந்தர ஸ்வாமியின் பொருட்டு, दातुं - கொடுக்கிறதற்கு, वारि - ஜலத்தை, अपातयत् - விழப்படுத்தி, तथाहि - அப்படியன்றோ, गाढस्नेहान्धजन्तवः - பகு ஸ்னேகத்தினாலே, கண் தெரியாத ஜீவன்கள், कृत्याकृत्यविमूढा हि - யோக்யா யோக்யத்தை அறியாதவர்களன்றோ. 73

*பொருள் :* - *பிறகு நந்தகோபன் தனது மகளை அழைத்து வந்து, ஜீவந்தரனுக்கு தாரைவார்த்தான். கண்மூடித்தனமாக அன்பு செலுத்துபவர்கள் எதைச் செய்யவேண்டும் எதைச் செய்யாமலிருக்க வேண்டும் என்ற பகுத்தறிவற்றவர்களாக இருக்கிறார்கள்.*

जीवन्धरस्तु जग्राह वार्धारां तेन पातितम् ।
पद्मास्यो योग्य इत्युक्त्वा न ह्ययोग्ये स्पृहा सताम् ॥

तु - பின்னை, जीवन्धरः - ஜீவந்தரனானவன், तेन - நந்தகோபனாலே, पतिताम् - விழப்படுத்தாநின்ற, वार्धारां - ஜலதாரையை, पद्मास्यः - பத்மமுகனானவன், योग्यः -

யோக்யனானவன், इति - என்று, उक्त्वा - சொல்லி, जग्राह - க்ருஹித்தான். तथा सताम् - சத் புருஷர்களுக்கு, अयोग्ये - அயோக்யத்தினாலே, स्पृहा - வார்த்தையானது, नहि - இல்லையன்றோ. 74

*பொருள் : - தனது நண்பன் பத்மாஸ்யனே அவளுக்குத் தகுந்தவன் என்று கூறி, அவன் சார்பாக ஜீவந்தரன் அவன் (நந்தகோபன்) அளித்த தாரை நீரை ஏற்றுக்கொண்டான். சான்றோர்கள் தங்களுக்கு எது ஏற்புடையது இல்லையோ அதில் ஈடுபாடு கொள்ளமாட்டார்கள்.*

माम मामेव पद्मास्यं पश्येति पुनरब्रवीत् ।
गात्रमात्रेण भिन्नं हि मित्रत्वं मित्रता भवेत् ॥ 75

माम - வாராய் மாமனே, मामेव - என்னையே, पद्मास्यं - பத்மமுகராக, पश्य - பார். इति - என்று, पुनः - பிற்பாடு, अब्रवीत् - சொன்னான். तथाहि - அப்படியன்றோ, गात्रमात्रेण - சரீரமாத்ரத்தினாலே, भिन्नं - பின்னமான, मित्रत्वं - மித்ரத்வமானது, मित्रता - மித்ரஸ்வரூபமானது, भवेद्धि - ஆகக்கடவதன்றோ. 75

*பொருள் : - மாமனே ! என்னைப்போன்றவன்தான் எனது நண்பன் பத்மாஸ்யன். எவ்வாறு மதிக்கிறீர்களோ அதைப்போலவே பத்மாஸ்யனையும் கொள்ளுங்கள். நாங்களிருவரும் உடலால் மட்டும் வேறுபட்டவர்கள். நட்பு என்பதற்குப் பொருளே நட்பு என்பதுதான்.*

गोदावरीसुतां दत्तां नन्दगोपेन तुष्यताम् ।
परिणिन्येऽथ गोविन्दां पद्मास्यो वह्निसाक्षिकम् ॥

गोदावरी सुतां - கோதாவரி புத்ரியான, तुष्यतां - சந்தோஷமாயிருக்கிற, नन्दगोपेन - நந்தகோபனாலே, दत्ताम् - கொடுக்கப்பட்டு இருப்பாளாயிருக்கிற, गोविन्दां - கோவிந்தயை, पद्मास्यः - பத்மமுகனானவன், अथ - பிற்பாடு, वह्निसाक्षिकाम् - அக்னி சாக்ஷியாக, परिणिन्ये - விவாஹம் பண்ணினான். 76

इति श्रीमद्वादीभसिंहसूरिविरचिते क्षत्रचूडामणौ
गोविन्दालम्भो नाम द्वितीय लम्भः ॥

**பொருள் : - கோதாவரீ என்பவள் மகளை கோவிந்தை என்ற பெயர் கொண்டவளை (நந்தகோபன் மகளை) நந்தகோபன் மிகமகிழ்ச்சியுடன் அக்னி சாட்சியாக பத்மாஸ்யனுக்கு மணமுடித்து வைத்தான்.**

கோவிந்தாலம்பம் முற்றிற்று



## तृतीयोलम्भः

## गन्धर्वदत्तालम्भः

## கந்தர்வதத்தாலம்பம்

[1]अथोपयम्य गोविन्दां पद्मास्ये रमयत्यलम् ।
वीरीश्रियं कुमारे च तत्र प्रस्तुतमुच्यते ॥ 1

अथ - பிற்பாடு, पद्मास्ये - பத்மமுகனானவன், गोविन्दां - கோவிந்தயை, उपयम्य - விவாஹம் பண்ணி, कुमारे च - ஜீவந்தரகுமாரனும், वीरश्रियं - வீரஸ்ரீயை, अलम् - மிகவும், रमयति - ரமித்துள்ளளவில், तत्र - அவ்விடத்திலே, [2]प्रस्तुस्तं - ப்ரஸித்தமானது, उच्यते - சொல்லப்படாநின்றது.1

பொருள் :- பிறகு கோவிந்தையை அடைந்த பத்மாஸ்யன் அவளிடம் இன்பமாக இருந்தான். அப்போது வீரமாகிற செல்வத்தை சீவகன் அடைந்தான். அப்போது நடந்த செய்தி கூறப்படுகிறது.

आसीत्तत्पुरवास्तव्यो वैश्यः श्रीदत्तनामकः ।
वितायास्पृहयत्सोऽयं धनाशा कस्य नो भवेत् ॥ 2

---

1. வீரலட்சுமியை சீவகன் மணந்தான் என்று மொழிப்பெயர்ப்பு கூறுகிறது. ஆனால் பதிப்பில் वीरश्रियं என்பது பெயர்களைக் குறிக்க வழக்கமாகப் பயன்படும். தடித்த எழுத்தில் இல்லை என்பதால், சீவகன் வீரத்தையே செல்வமாக அடைந்தான் என்ற பொருளில் கொள்ளப்படவேண்டும். மேலும் இரண்டாவது லம்பகத்தின்பெயர் கோவிந்தையாரிலம்பகம். தலைவனின் பெயரை ஒட்டித் தலைவியின் பெயரால் இவ்விலம்பகம் அழைக்கப்படவேண்டுமென்றால் வீரலக்ஷ்மி இலம்பகம் என்றுதான் இதற்குப் பெயர் வைக்கப்பட்டிருக்கவேண்டுமென்பதால் வீரலக்ஷ்மியை சீவகன் மணக்கவில்லை என்றுதான் கொள்ளவேண்டும். சீவக சிந்தாமணியிலும் சீவகன் வீரலக்ஷ்மையை மணந்ததான செய்தி இல்லை.

2. प्रशस्तं इति पाठभेदः ।

तत्पुरवास्तव्यः - அந்த ராஜமஹாபுரத்திலே. வசிக்கப்பட்டிருக்கிற, श्रीदत्तनायकः - ஸ்ரீதத்தனென்று பெயரையுடைய, वैश्यः - செட்டியானவன், आसीत् - ஆனான். सोऽयं - அப்படியப்படி இருக்கிற அந்த செட்டியானவன். वित्ताय - திரவ்யத்தின் பொருட்டு, अस्पृहयत् - வாஞ்சித்தான். तथाहि - அப்படியன்றோ. धनाशा - தனத்தின் பொருட்டு, कस्य - எவனுக்கு, नो भवेत् - ஆகக்கடவதல்ல. 2.

**பொருள் : - அப்படியிருக்கும்போது அந்நகரில் ஸ்ரீதத்தன் என்பவன் வசித்துவந்தான். அவன் ஒரு வணிகன். அவன் வணிகம் செய்து பொருள் ஈட்ட எண்ணினான். யாருக்குத்தான் செல்வத்தின்மீது பற்று இருக்காது.**

अर्थार्जननिदानं च तत्फलं चायमौहत ।
निरङ्कुशं हि जीवानामैहिकोपायचिन्तनम् ॥ 3

अर्थार्जननिदानं च - த்ரவ்யார்ஜன காரணத்தையும், तत्फलं च - த்ரவ்யத்தினுடைய பலத்தையும், अयं - ஸ்ரீத்த செட்டியானவன், औहत - சிந்தித்தான். तथाहि-जीवानां - ஜீவன்களுக்கு, ऐहिकोपायचिन्तनम् - இகலோகோபாய சிந்தனையானது, निरङ्कुशं हि - தடையில்லாததன்றோ. 3

**பொருள் : - செல்வத்தைச் சேர்க்கும் வழிகளையும், அதனை அடைவதால் ஏற்படும் பயன்களையும் ஸ்ரீதத்தன் சிந்தித்தான். இவ்வுலகில் வாழ்வதற்கான வழிகளைத்தேடும் சிந்தனை, அங்குசத்தால் கட்டுப்படுத்தப்படாத, (மதம் பிடித்த) யானை போன்று, கட்டுக்கடங்காததன்றோ!**

अस्तु पैतृकमस्तोकं वस्तु किं तेन वस्तुना।
रोचते न हि शौण्डाय परपिण्डादि दीनता ॥ 4

पैतृकं - பித்ரு சம்பந்தமான, वस्तु - திரவியம், अस्तोकं - பகுவானது, अस्तु - ஆகக்கடவது, तेन वस्तुना - அந்த திரவ்யத்தினாலே, किं - என்ன, तथाहि - அப்படியன்றோ, शौण्डाय - தீரனானவன் பொருட்டு, परपिण्डादिदीनता - பரபிண்டம் முதலான அதீனத்துவமானது, रोचते - ருசிக்கப்படாநின்றது, नहि - இல்லையன்றோ. 4

பொருள் : - முன்னோரால் சேர்த்து வைக்கப்பட்ட அளப்பறிய செல்வம் இருப்பினும், அது செல்வமாகாது. திறமைமிக்கவன் பிறருக்கு அளிக்கப்பட்ட பொருளை தன் பொருளாகக் கொள்ளமாட்டான். பிறர், தமது முன்னோர்கள் பொருட்டு அளிக்கப்பட்ட பிண்டத்தை (ஈமக்கடன்களில் முன்னோர்கள் பொருட்டு அளிக்கப்படும் அரிசிச்சாத உருண்டைகள்) உண்பவன் கீழ்நிலையை அடைபவன் போல, அவன் கீழ்நிலையை அடைய விரும்பவில்லை என்பது பொருள்.

स्वापतेयमनायं चेत्सव्ययं व्येति भूर्यपि ।
सर्वदा भुज्यमानो हि पर्वतोऽपि परिक्षयी ॥ 5

सव्ययं - ப்ரயத்நதோட கூடின, स्वापतेयं - தன்னுடைய, சம்மந்தமான, த்ரவ்யமானது, अनायं चेत् - ஆதாயமில்லையாகில், भूर्यपि - பகுவானாலும், व्येति - விகாசத்தை அடையாநின்றது, तथाहि - அப்படியன்றோ, सर्वथा - சர்வகாலத்திலேயும், भुज्यमान - போஜிக்கப்பட்டு இருக்கிற, पर्वतोऽपि - பர்வதமும், परीक्षयी - கெடாநின்றதன்றோ. 5

பொருள் : - தனது செல்வம், எந்தவிதமான வருவாய் இல்லாமல் செலவுமட்டுமே ஆகிக் கொண்டிருந்தால், அது முதலில் மிகுந்திருப்பினும், செலவு செய்யச் செய்யக் குறைவுபடவே செய்யும். எப்போதும் (வெட்டியெடுத்துச் செல்வதால்) பயன்படும் மலைகூட, ஒரு காலத்தில் இல்லாமல் போய்விடும்.

दारिद्र्यादपरं नास्ति जन्तूनामप्यरुन्तुदम् ।
अत्यक्तं मरणं प्राणैः प्राणिनां हि दरिद्रता ॥ 6

जन्तूनां - ஜீவன்களுக்கு, दरिद्रात् - தரித்திரத்தைக் காட்டிலும், अपरं - அன்யமானது, अरुन्तुदम् - துக்கத்தைப் பண்ணுகிறது, नास्ति - இல்லை, तथाहि - அப்படின்றோ, प्राणिनां - ஜீவன்களுக்கு, दरिद्रता - தரித்ரத்வமானது, प्राणैः - ப்ராணன்களினாலே, अत्यक्तं - விடப்படாமல் இருக்கிற, मरणं हि - மரணமன்றோ. 6

பொருள் : - பிராணிகளுக்கு வறுமையினும் கொடியது வேறொன்றில்லை. பொருளற்றவர் நடைபிணமேயாவர். பணம் இல்லாதவர் பிணம் என்பது பழமொழியன்றோ.

रिक्तस्य हि न जागर्ति कीर्तनीयोऽखिलो गुणः ।
हन्त किं तेन विद्यापि विद्यमाना न शोभते ॥ 7

रिक्तस्य - தரித்ரவானுக்கு, हि - ஸ்புடமாக, कीर्तनीय - கீர்த்திக்கப்பட்டிருக்கிற, अखिलोगुणः - சமஸ்தமானதும், न जागर्ति - விழித்திரா நின்றதில்லை, तेन - கீர்த்தியினாலே, किं - என்ன, विद्यमाना - உண்டாயிருக்கிற, विद्यापि - வித்தையையும், न शोभते - சோபியாநின்றதில்லை, हन्त - கெட்ட கெட்ட. 7

பொருள் : - வறுமையுற்றவனுக்கு கொண்டாடத்தக்க குணமும் பிரகாசிப்பதில்லை. பலவாறுரைப்பானேன். அந்தோ ! அவனிடம் கல்வி நிரம்பி இருந்தும் விளங்குவதில்லை.

स्यादकिंचित्करः सोऽयमाकिंचन्येन वञ्चितः ।
अलमन्यैः स साकूतं धन्यवक्त्रं च पश्यति ॥ 8

अकिंचन्येन - தரித்திரத்தினாலே, वञ्चितः - வஞ்சிக்கப்பட்ட, सोऽयं - அப்படிப்பட்டிருக்கிற, आकिञ्चित्करः - ஒன்றையும் பண்ணாதவன், स्यात् - ஆகக்கடவன், साकूतं धन्यवक्त्र च - அபிப்பிராயத்தோடு கூடின தனவானுடைய முகத்தையும், पश्यति - பாராநின்றான். अन्यैः - அன்யங்களினாலே, अलं - அமையும். 8

பொருள் : - தரித்திரன் வறுமையினால் வஞ்சிக்கப்பட்டு எக்காரியத்தையும் செய்ய வல்லமை யற்றவனாய்ச் செல்வந்தரின் முகத்தைக் கருத்தோடு பார்க்கின்றான்.

संपल्लाभफलं पुंसां सज्जनानां हि पोषणम् ।
काकार्थफलनिम्बोऽपि श्लाघ्यते न हि चूतवत् ॥ 9

संपल्लाभफलं - சம்பத்தைப் பெற்றதற்கு பலமானது, पुंसां - புருஷர்களுக்கு, सज्जनानां - சஜ்ஜனங்களிடையே, पोषणं हि - ரக்ஷிக்கிறதன்றோ, तथाहि - அப்படியன்றோ, काकार्थफलनिम्बोऽपि - காக்கைக்குப் ப்ரயோஜனமான வேம்பும், चूतवत् - மாமரமானது போல, श्लाघ्यते - பூஜ்யமாகாநின்றது. नहि - இல்லையன்றோ. 9

பொருள் : - சான்றோர்களை தமது செல்வங்களால் காப்பாற்றி வாழவைத்தால்தான் மனிதர்களுக்கு நிலையான செல்வம் ஏற்படும். பழங்களில், வேப்பம்பழம் காக்கையினால் மட்டுமே உண்ணப்படுகிறது. அதைப்போல, சான்றோரைக் காக்காதவன் செல்வமும், அவனால் மட்டுமே அனுபவிக்கப்படும். ஆனால், ஊர்மெச்ச ஒருவன் செல்வந்தனாக இருக்க வேண்டுமென்றால், அவனது செல்வம் மாம்பழத்தைப்போல எல்லாத் தரப்பினருக்கும் பயன் தருவதாக இருக்கவேண்டும்.

लोकद्वयहितं चापि सुकरं वस्तु नासताम् ।
लवणाब्धिगतं हि स्यान्नादेयं विफलं जलम् ॥ 10

असताम् - அக்ஞானிகளிடையே, वस्तु - த்ரவ்யமானது, लोकद्वयहितं चापि - இகபரலோகத்துக்கு, ஹிதத்தையும், सुकरं - சுஷ்டுவாகப் பண்ணுகிறது, न - அல்ல, तथाहि - அப்படியன்றோ, लवणाब्धिगतं - லவணசமுத்திரத்தை அடைந்த, नादेयं - நதியினுடைய சம்மந்தமான, जलं - ஜலமானது, विफलं - பலமில்லாதது, स्यात्- ஆகக்கடவதன்றோ. 10

பொருள் : - தீயோருக்கு, இம்மை மறுமை இவ்விரண்டிலும் நன்மை செய்யக்கூடிய செல்வம் கிடைப்பதில்லை. கடலுக்குச் செல்லும் நதி, அங்கு சென்று இணைந்தபின், பயனற்றதாகிவிடுகிறது. அதாவது, இம்மையில் பயன்படும் செல்வம் மறுமைக்குப் பயன்படவேண்டும். சமவெளியில் பாயும் நதிநீர் பூமிக்கு நன்மை செய்துவிட்டு, கடலில் கலக்கும்போது, உப்பாகி, ஒன்றுக்கும் பயனற்றுப் போவதுபோல், இம்மையில் பயன்படும் செல்வம், அறத்தின் வழி ஈட்டப் பட்டிருந்தாலன்றி, அது மறுமைக்குப் பயன்படாது என்பது கருத்து.

इत्यूहान्नावमारुह्य प्रतस्थे स वणिक्पतिः ।
वार्धिमेव धनार्थी किं गाहते पार्थिवानपि ॥ 11

इति - என்று, ऊहात् - விசாரத்தினின்றும், नावं आरुह्य - கப்பலில் ஏறி, स वणिक्पतिः - அந்த ஸ்ரீதத்த செட்டியானவன், प्रतस्थे - புறப்பட்டான், तथाहि - அப்படியன்றோ, धनार्थी - த்ரவ்ய வாஞ்சையை உடையன், वार्धिमेव - சமுத்ரத்தையே, गाहते किं - அடையாநின்றானன்றோ, पार्थिवानपि - ராஜாக்களையும் அடையாநின்றான் என்பது. 11

***பொருள் :*** *- இவ்வாறு சிந்தித்து முடிவெடுத்து, கப்பலில் ஏறிப் புறப்பட்டான். அந்த வணிகர் தலைவன். செல்வத்தை விரும்புபவன் கடலை மட்டுமா தாண்டுவான்? (அதாவது அரசர்களையும் விஞ்சிப் பொருள் சேர்ப்பான் என்பது கருத்து).*

द्वीपान्तराद्व्यवर्तिष्ट पुष्टः सांयात्रिको धनैः ।
अतर्क्यं खलु जीवानामर्थसंचयकारणम् ॥ 12

धनैः - தனங்களினாலே, पुष्टः - நிறைந்திருக்கிற, सांयात्रिकः - கப்பல் செட்டியானவன், द्वीपान्तरात् - தீபான்தரத்துநின்றும், न्यवर्तिष्ट - திரும்பினான், तथाहि - அப்படியன்றோ, जीवानां - ஜீவன்களுக்கு, अर्थसंचयकारणम् - செல்வம் சேர்த்த முறை, खलु - ஸ்புடமாக, अतर्क्यं - வழி விசாரிக்கப் போகாததன்றோ. 12

***பொருள் :*** *- அவ்வணிகன் வேறு தீவுக்குச் சென்று ஆங்குள்ள அரசனுக்கு காணிக்கைக் கொடுத்து, அனுமதி பெற்று, அங்கே வியாபாரம் செய்து ஏராளமான பொருளைச்*

சம்பாதித்துக்கொண்டு, மீண்டும் கப்பலேறித் திரும்பினான். மனிதர்களுக்கு பொருள் சேருவதற்குரிய காரணத்தைக் கண்டுபிடிக்க வியலுமோ ?

अवारान्तमथ प्रापत्पारावारस्य नाविकः ।
चुक्षुभे नौरिहासाराञ्च हि वेद्यो विपत्क्षणः ॥ 13

अथ - பிற்பாடு, नाविकः - கப்பல் செட்டியானவன், पारावारस्य - சமுத்திரத்தினுடைய, अवान्तरं - கரையை, प्रापत्- அடைந்தான். नौः - கப்பலானது. इह - இவ்விடத்திலே, आसारान् - அலையில் நின்றும், चुक्षुभे - கலங்கியது. तथाहि विपत्क्षणः - ஆபத்காலமானது, वेद्यः - அறியப்படுமது, नहि - இல்லையன்றோ. 13

பொருள் : - பின்னர் அவன் கப்பல் வழியாகத் தன் தேசத்திற்குச் சமீபம் வந்து சேர்ந்தான். அப்பொழுது புயலுடன் பெருமழை பெய்தது. கப்பல் வேகமாக அசைந்தாடியது. ஆபத்துக் காலத்தை அறியவல்லவர் எவர்.

पूर्वमेव तु नौनाशच्छोकाब्धिं पोतगा गताः ।
काष्ठागतस्य दुःखस्य दृष्टान्तं तद्धि नौक्षये ॥ 14

तु - பின்னை, पोतगाः - கப்பலிலே அடைந்திருக்கிறவர்கள், नौनाशात् - கப்பலுடையத்தி னின்றும், पूर्वमेव - முந்திய, शोकाब्धि - துக்க சமுத்திரத்தை, गताः - அடைந்தார்கள், तथाहि नौक्षये - கப்பல் உடைந்துள்ளளவில், काष्टागतस्य - உத்கிருஷ்ட்டமான, दुःखस्य - கப்பலுடைந்த துக்கத்துக்கு, दृष्टान्तं तत् - த்ருஷ்டாந்தமன்றோ.

பொருள் : - கப்பலில் இருந்த பயனிகள் யாவரும், கப்பல் கடலில் மூழ்குவதற்கு முன்னமேயே துன்பக்கடலில் மூழ்கினர். இது, இனி வரப்போகும் துயருக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது.

सांयात्रिकस्तु तत्वज्ञो विकारं नैव जग्मिवान् ।
अज्ञात्प्राज्ञस्य को भेदो हेतोश्चेद्विकृतिर्द्वयोः ॥ 15

तु - பின்னை, तत्वज्ञः - தத்வத்தை அறிந்திருக்கிற, सांयात्रिकस्तु - கப்பல் செட்டியானவன், विकारं - விகாரத்தை, जग्मिवान् - அடைந்தவன், नैव - இல்லையே, तथाहि द्वयोज्ञान्य - ஞானிகளுக்கு, हेतोः - காரணத்தினின்றும், विकृतिः - விகாரமானது, चेत् - ஆகில், अज्ञानात् - அக்ஞானியினின்றும், प्राज्ञस्य - ஞானிகளுக்கு, भेदः - பேதமானது, कः - எது. 15

பொருள் : - அப்போதும் திரை வணிகன் ஸ்ரீதத்தன் மனக்கலக்கம் அடையவில்லை. ஒரே காரணத்தை முன்னிட்டு, அறிஞனும் அறிவிலியும் மனமாறுதலை அடைந்தால் , இருவருக்கும் உள்ள வேறுபாடுதான் என்ன ? அதாவது, அறிவிலி துயர்கண்டு துயருருவான். இன்பம் கண்டு இன்புறுவான். அறிஞன் இவ்விரு உணர்வுகளையும் துய்க்காமல், எதுவரினும் மன அமைதி காப்பான். மிகுந்த செல்வம் சேர்ந்தபோதும் மிக மனமகிழ்வடையாத ஸ்ரீதத்தன், தான் வரும் கப்பலே மூழ்கும் நிலையிலும் மனத்துயர் அடையவில்லை. அதாவது துயரையும் மகிழ்ச்சியையும் ஒருங்கே காண்பவனாக அவன் விளங்கினான்.

भाविन्याः विपदो यूयं विपन्नाः किं बुधाः शुचा ।
सर्पशङ्काविभीताः किं सर्पास्ये करदायिनः ॥ 16

भाविन्याः - வருகிறதாய் இருக்கிற, विपदः - ஆபத்தினின்றும், बुधाः - வாராய் ஞானவான்களே, यूयं - நீங்கள், शुचा - துக்கத்தினாலே, विपन्नः - விபத்தை அடைந்தவர்கள், किं - என்ன ? तथाहि सर्पशंकाविभीताः - சர்ப்பமென்கிற சக்கையினாலே பயந்தவர்கள், सर्पस्य - சர்ப்பத்தினுடைய வாயிலே, करदायिनः किं - கையைக் கொடுப்பார்களோ என்ன ? 16

*பொருள் : - நண்பர்களான அறிஞர்களே ! வரப்போகிற ஆபத்தைக் குறித்து நீங்கள் வருந்துகிறீர்களே ! நீங்கள் வீணே வருந்துவதன் பயன் என்ன ? பாம்பிடம் பயப்படுகிறவர்கள் பாம்பின் வாயில் கையை வைப்பார்களா ?*

विपदस्तु प्रतीकारो निर्भयत्वं न शोकिता ।
तच्च तत्वविदामेव तत्वज्ञाः स्यात तद्बुधाः ॥ 17

तु - பின்னை, विपदः - ஆபத்திற்கு, प्रतीकारः - ப்ரதிகாரமானது, निर्भयत्वं - பயமில்லாததும், न शोकिताः - துக்கமில்லாததும், तच्च - அதுவும், तत्वविदामेव - தத்வஞானிக்கே, तथाहि तद्बुधाः - அந்த பிரகாரத்தை அறிந்தவர்கள், तत्वज्ञाः - தத்வஞானிகள், स्यात - ஆகக்கடவீர்களன்றோ. 17

*பொருள் : - இடர்வரின், அஞ்சாமையே அதற்கான சரியான முடிவு. துன்புறுவது சரியன்று. உண்மையுணர்ந்த அறிஞர்களாக, இடரைக் களையும் வழியை அறிந்தவர்களாக நீங்கள் ஆகவேண்டும்.*

इत्यप्यबोध यत्सोऽयं वणिक्पोताश्रितान्सुधीः ।
तत्वज्ञानं हि जीवानां लोकद्वयसुखावहम् ॥ 18

सुधीः - புத்திமானான, सः - அப்படிப்பட்டிருக்கிற, अयं वणिक् - இந்த ஸ்ரீதத்த செட்டியானவன், पोताश्रितान् - கப்பலிலே அடைந்திருக்கிறவர்களை, उद्यापि - இப்படி என்றும், अबोधयत् - போதித்தான். तथाहि जीवानां - ஜீவன்களுக்கு, तत्वज्ञानं - தத்வ ஞானமானது, लोकद्वयसुखावहम् हि - இஹபர லோகத்துக்கும் சுகத்தை வகிக்கிறதன்றோ. 18

*பொருள் : - அறிவு நிறைந்த ஸ்ரீதத்தன் இவ்வாறு அம்மரக்கலத்தில் வரும் பயணிகளைப் பார்த்து அறிவுறுத்தினான். உண்மையறிவே உயிர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் இன்பமளிப்பதாகும்.*

तावता नावि नष्टयां दृष्टोऽभूत्कूपखण्डकः ।
सत्यायुषि हि जायेत प्राणिनां प्राणरक्षणम् ॥ 19

तावता - அவ்வளவிலே, नावि - கப்பலானது, नष्टायां - கேடுள்ளளவில், कूपखण्डकः - கப்பலிலே உடைந்த பலகையானது, दृष्टः - காணப்பட்டது. अभूत् - ஆச்சுது. आयुषि - ஆயுஷ்யமானது, सति - உண்டாயுள்ளளவில், प्राणरक्षणम् - ப்ராண ரக்ஷணமானது. जायेत - உண்டாகா நின்றதன்றோ. 19

*பொருள் : - கப்பலுக்குக் கேடு நிகழ்ந்தபோது, அதிலிருந்து உடைந்த பாய்மரத்தைக் கண்டான். ஒருவனுக்கு உயிர் இருந்தே தீரவேண்டும் என்ற விதி இருந்தால். உயிர் நிச்சயமாகக் காப்பாற்றப்படும்.*

श्रीदत्तस्तु तमारुह्य प्रासदद्दीपसंश्रितः ।
राज्य भ्रष्टोऽपि तुष्टः स्याल्लब्धप्राणो हि जन्तुकः ॥ 20

तु - பின்னை, ஸ்ரீதத்த செட்டியானவன், तं - அந்த பலகையை, आरुह्य - ஏறி, द्वीपसंश्रितः - த்வீபத்தை அடைந்தவனாய்க்கொண்டு, प्रासदत् - அடைந்தான். तथाहि - ஆகவே, राज्यभ्रष्टोऽपि - ராஜ்யப்ரஷ்டமான, जन्तुकः - ஜீவனானது, लब्धप्राणः - பெறப்பட்ட ப்ராணனை உடைத்தானது, तुष्टः - சந்தோஷத்தை உடைத்தானது. स्यात् - ஆகக்கடவதன்றோ. 20

பொருள் : - ஸ்ரீதத்தன் அந்த மரத்தின் மீதேறி, ஒரு தீவை அடைந்தான். எந்த உயிரினமும், தான் அரசை இழந்தாலும்கூட, உயிர் மட்டுமே பிழைத்திருந்தால் நிச்சயமாக மகிழ்ச்சியடையும். (ஸ்ரீ தத்தனும் தான் எல்லாச் செல்வங்களையும் இழந்துவிட்டபோதிலும், உயிர் பிழைத்ததனால் மட்டுமே மிக மகிழ்ச்சியுடன் விளங்கினான்.

नष्टशेवधिरप्येष मृष्टमेवमतर्कयत् ।
दुःखार्तोऽपि सुखार्थो हि तत्वज्ञानधने सति ॥ 21

नष्टशेवधिः - கெட்ட திரவியத்தை உடைய, एषोपि - இந்த ஸ்ரீதத்தனும், मृष्टं - சந்தோஷத்தை (குழப்பமடையாமல்) एवं - இப்படி, अतर्कयत् - சிந்தித்தான். तथाहि तत्वज्ञानधने - தத்வஞான தனமானது, सति - உண்டாயுள்ளளவில், दुःखार्तोऽपि सुखार्थोहि சுகார்த்தனன்றோ. 21

பொருள் : - செல்வத்தை இழந்தபோதும் கூட, குழப்பமடையாமல் ஸ்ரீதத்தன் இவ்வாறு சிந்தனை செய்தான். உண்மையறிவாகிய பொருள் இருக்கும்போது துயரால் வருந்துபவன்கூட இன்பமாகிய செல்வத்தைப் பெற்றவனாகிறான்.

तृष्णाग्निदह्यमानस्त्वं मूढात्मन् किं नु मुह्यसि ।
लोकद्वयहितध्वंसोर्न हि तृष्णारुषोर्भिदा ॥ 22

तृष्णाग्निदह्यमानः - ஆசையாகிற அக்னியினாலே சுடப்பட்டிருக்கிற, त्वं - நீ, मूढात्मन् - வாராய் மூடாத்மனே, किं नु मुह्यसि - ஏன் மோஹியா நின்றாய், लोकद्वयहित ध्वंसोः - இஹபரலோகத்தினுடைய ஹிதத்தை இம்மையிலும் மறுமையிலும் ஏற்புடையதை அழிக்கின்ற, तृष्णारुषोः - கொடுக்கிறதுகளான ராகத்வேஷங்களுக்கு வேட்கைக்கும், சினத்துக்கும், भिदा - பேதமானது, नहि - இல்லையன்றோ.22

பொருள் : - முட்டாள் மனமே,* வேட்கை என்னும் நெருப்பால் எரிக்கப்படும் நீ, ஏன் குழப்பமுறுகிறாய் ? இம்மையிலும் மறுமையிலும் ஏற்படும் நன்மையை அழிக்க வல்ல வேட்கைக்கும் சினத்துக்கும், எந்தவிதமான வேறுபாடும் இல்லை. அதாவது வேட்கையே சினமாக மாறுகிறது என்பது பொருள்.

लोकद्वयहितायात्मन्नैराश्यनिरतो भव ।
धर्नसौख्यच्छिदाशा ते तरूच्छेदः फलार्थिनाम् ॥ 23

आत्मन् - வாராய், लोकद्वयहिताय - இகபரலோகத்துக்கும் ஹிதத்தின் பொருட்டு, नैराश्यनिरतः - ஆசையில்லாதத்திலே, தாத்பர்யத்தையுடையவன், भव - ஆகக்கடவே, (तथाहि) कलार्थिनां - பலத்தை

* இங்கு मूढात्मन् என்ற சொல் அறியாமையால் மறைக்கப் பட்டிருக்கும் ஆன்மாவைக் குறிக்காது. மனதையே குறிக்கும். ஏனெனில் மனம்தான் உணர்வுகளுக்கு அடிமைப்படும்.

வாஞ்சிக்கிறவர்களுக்கு, तरूच्छेदः - வ்ருட்சசேதமானது போல, உன்னுடைய, आशा - ஆசையானது, धर्मसौख्यच्छित् - தர்ம ஸௌக்யத்தை கெடுக்கிறதானது. 23

பொருள் : - மனமே ! இம்மையிலும், மறுமையிலும் நன்மை பெறுவதற்காக நீ ஈடுபாடற்றவனாக இரு. ஈடுபாடு, அறத்தையும் இன்பத்தையும் அழித்துவிடும், பழத்தை விரும்புபவன் மரத்தை வெட்டுவதைப்போல ஈடுபாடு கொண்டவன் அறத்தையும் ,அதன் வழி தோன்றும் இன்பத்தையும் அழித்துவிடுகிறான்.

संसारासारभावोऽयमहो साक्षात्कृतोऽधुना ।
यस्मादन्यदुपक्रान्तमन्यदापतीतं पुनः ॥ 24

यस्मात् - யாதொரு காரணத்தினின்றும், अन्यत् - மற்றொன்று, उपक्रान्तं - துடங்கப்பட்டது. न - பிற்பாடு, अन्यत् - மற்றொன்று, आपतितं - வரப்பட்டது. अयं - இந்த, संसारासारभावः - சம்சாரசாரஸ்வரூபமானது, अधुना - இப்பொழுது, साक्षात् कृतः - பிரத்யக்ஷமாக பண்ணப்படுமது. अहो - ஆச்சரியம். 24

பொருள் : - உலக வாழ்க்கை பயனற்றது என்பது இப்போது தெளிவாகிவிட்டது. ஏனெனில் ஏதோ ஒன்றை முடிவாக நினைத்துத்தொடங்கிய செயல், வேறொன்றாக முடிந்துவிட்டது.

अत एव हि योगीन्द्रा अपीन्द्रावार्हसंपदम् ।
त्यक्त्वा तपांसि तप्यन्ते मुक्त्यै तेभ्यो नमो नमः ॥ 25

अत एव - இந்த காரணத்தினின்றுமே, हि - ஸ்புடமாக, योगीन्द्रा अपि - ரிஷீந்தரர்களுக்கு, इन्द्रत्वार्हसंपदं - தேவேந்திர பதவிக்கு யோக்யமான ஐச்வர்யத்தை, त्यक्त्वा - விட்டு, मुक्त्यै - மோக்ஷத்தின் பொருட்டு, तपांसि - தபசுக்களை, तप्यन्ते - தபியா நின்றார்கள், तेभ्यः - அவர்கள் பொருட்டு, नमो नमः - நமஸ்காரம். 25

*பொருள் : - சிறந்த முனிவர்கள் இந்திர பதவியையும் தள்ளிவிட்டு வீடுபேறுபெறுதலின் பொருட்டுத் தவமியற்றுகின்றனர். அவர்களுக்கு வணக்கம்.*

इत्यूहोऽपि स दृष्टस्य कस्यचित्स्वार्तिमूचिवान् ।
मध्येमध्ये हि चापल्यमामोहादपि योगिनाम् ॥ 26

इति - என்று, ऊहः - விசாரத்தையுடைய, सोऽपि - ஸ்ரீதத்தனும், दृष्टस्य - காணப்பட்டிருக்கிற, कस्यचित् - ஒருத்தனுக்கு, स्वार्तिं - தன்னுடைய துக்கத்தை, ऊचिवान् - சொன்னான், (तथाहि) योगिनां - ரிஷிகளுக்கு, आमोहादपि - மோஹமுள்ள பர்யந்தமும், मध्येमध्ये - இடையிடையே, चापल्यं हि - சஞ்சலமன்றோ. 26

**பொருள் : - இவ்வாறு சிந்தனை செய்த ஸ்ரீதத்தன் அப்போது அங்கு இயல்பாக இருந்த ஒருவனிடம் தனக்கு நேர்ந்த துயரை எடுத்துரைத்தான். உலகப்பொருட்களைப் பற்றிய ஈடுபாடு நீங்கும்வரை அவர் முற்றும் துறந்தவராக இருந்தாலும், யோகிகளுக்கு மனக்கலக்கம் ஏற்படும்.**

यादृच्छिक इवायातस्तत्कृच्छ्रं सोऽपि शुश्रुवान् ।
संसृतौ व्यवहारस्तु न हि मायाविवर्जितः ॥ 27

याद्दच्छिकः - யத்ருச்சையானவன், इव - போல, आयातः - வந்திருக்கிற, सोऽपि - வித்யாதரன், तत् कृच्छ्रं - ஸ்ரீதத்தனுடைய ப்ரஸம்ஸத்தை, शुश्रुवान् - கேட்டான். तथाहि संसृतौ - சம்சாரத்திலே, तु - விசேஷமுண்டு, व्यवहारः - நடக்கையானது, मायाविवर्जितः - மாயையை விட்டது. नहि - இல்லையன்றோ. 27

*பொருள் : - தற்செயலாக வந்தவன் போலக் காணப்பட்ட அவன் அவனது துயரக்கதையை முழுவதும் கேட்டான். படைப்பில் நடைபெறும் நிகழ்வுகளெல்லாம் இல்லாதவற்றை இருப்பவைப் போலக் காட்டும் மாயை என்னும் வெளித்தோற்றமே.*

श्रुत्वा मीषेण केनापि नीत्वा राजतभूधरम् ।
स्वागतेः कारणं सर्वमभाणीत्स वणिक्पतेः ॥ 28

सः - வித்யாதரனானவன், श्रुत्वा - கேட்டு, आमिषेणकेनापि - ஒரு வ்யாஜ்யத்தினாலேயும், राजतभूधरम् - வெள்ளியம்பெருமலையை, नीत्वा - அடைவித்து, स्वागते - தன்னுடைய வரவினுடைய காரணமான, सर्वं - சமஸ்த்தை, वणिक्पतेः - ஸ்ரீதத்த செட்டிக்கு, आभाणीत् - சொன்னான். 28

*பொருள் : - அப்புருஷன் பிறகு வியாபாரியைக் கபடமாய் வெள்ளிமலைக்கு அழைத்துச் சென்று தான் வந்த காரணத்தையும் அவனுக்கு சொன்னான்.*

विजयार्धगिरावस्ति दक्षिणश्रेणिमण्डने ।
गान्धारविषये ख्याता नित्यालोकाह्वया पुरी ॥ 29

विजयार्धगिरौ - வெள்ளியம்பெருமலையிலே, दक्षिणश्रेणिमण्डने - தக்ஷிணஸ்ரேணிக்கு, அவஸ்காரமான, गान्धारविषये - காந்தாரமென்கிற தேசத்திலே, ख्याता - ப்ரக்யாதமான, नित्यलोकाह्वया - நித்யலோகமென்னும் பேரையுடைய, पुरी - பட்டணமானது, आस्ति - இருந்தது.

**பொருள் : - தெற்கு மலைத் தொடருக்கு அணிகலனாக விளங்கும் வெள்ளிமலை என்ற இடத்தில் காந்தார நாடு (Afghanistan) உள்ளது. அதில் நித்யாலோகம் என்றழைக்கப்படும் நகரம் உள்ளது.**

गरूडवेगनामास्यां राजा राज्ञी तु धारिणी ।
पुत्री गन्धर्वदत्ताभूदभूत्यसापि यवीयसी ॥ 30

अस्यां - நித்யலோகபுரியிலே, गरूडवेगनामा - கருடவேகனென்னும் பேரையுடைய, राजा - ராஜாவானவன், अभूत् - ஆனான். तु - பின்னை, धारिणी - தாரிணீ, राज्ञी - பட்டத்தரசியானவள், पुत्री - புத்ரியானவள், गान्धर्वदत्ता - கந்தர்வதத்தையென்னும் பேரையுடையவள், सापि - அவளும், यवीयसी - யௌவன வயதை உடையவள், अभूत् - ஆனாள். 30

***பொருள் : - அந்நாட்டில் (நித்யலோகபுரியிலே) கருடவேகன் என்ற அரசன் வசிக்கின்றான். அவனுக்கு "தாரிணி" என்ற அரசியும், "கந்தர்வதத்தை" என்ற மகளும் இருக்கின்றனர். அப்பெண் இளமைப் பருவத்தில் இருக்கிறாள்.***

वीणाविजयिनो भार्या राजपुर्यामियं भवेत् ।
भूमाविति मूहर्तज्ञा जन्मलग्ने व्यजीगणन् ॥ 31

भूमौ - பூமியிலே, राजपुर्या - ராஜபுரியிலே, वीणाविजयिनः - வீணையிலே ஜெயித்தவனுக்கு, इयं - இவள், भार्या - பார்யையானவள், भवेत् - ஆகக்கடவள், इति - என்று, मूहूर्तज्ञाः - மூர்த்தக்ஞர்கள், जन्मलग्ने - ஜன்மலக்னத்திலே, व्यजीगणन् - கணித்தார்கள். 31

*பொருள் :* - *அவள் பிறந்தபோது சோதிடர்கள் "இவள் இராஜமாபுரியில் வீணையினால் தன்னை வெல்லுகின்றவனுக்கே வாழ்க்கைப்படுவாள்" என்று கூறினார்கள்.*

तदर्थं पार्थिवः सार्धमेकान्ते कान्तया तया ।
मन्त्रयित्वा तदन्ते मामन्दप्रीतिरादिशत् ॥ 32

तदर्थं - அவள் நிமித்தமாக, पार्थिवः - ராஜாவானவன், एकान्ते - ஏகாந்தத்திலே, तयाकान्तया - அந்த ஸ்திரியோட, सार्धम् - கூட, मन्त्रयित्वा - ஆலோசனைப் பண்ணி, तदन्ते - அதனுடைய கடைசியிலே, मां - என்னை, अमन्दप्रीतिः - பகுப்ரீதியை உடைத்தானவனாய் கொண்டு, आदिशत् - சொன்னான். 32

*பொருள் : - அதற்காக மன்னன் அரசியுடன் தனிமையிலே ஆலோசனை செய்து, மிக்க அன்பு கொண்டவனாக என்னிடம் அதனைக் கூறினான்.*

कुलक्रमागता मैत्री श्रीदत्तेनास्ति नस्ततः ।
गत्वा सत्वरमत्रैव सोऽयमानीयतामिति ॥ 33

कुलक्रमागता - குலப்பரம்பரையில் வருகிற, मैत्री - மித்ரத்வமானது, श्रीदत्तन् - ஸ்ரீதத்த செட்டியோட கூட, नः - நமக்கு, अस्ति - உண்டாகாநின்றது. ततः - அது காரணத்தினின்றும், गत्वा - போய், सत्वरं - சீக்கிரமாக, अत्रैव - இவ்விடத்திலேயே, सोयं - அந்த ஸ்ரீதத்தனானவன், आनीयतां - கொண்டுவரப்படுமவன், इति - என்று. 33

**பொருள் : - "வழிவழியாகத் தோன்றிய நட்பு எனக்கும் ஸ்ரீதத்தனுக்கும் உள்ளது. உடனே விரைந்து அங்கு சென்று அவனை இங்கு அழைத்து வா" என்று கூறினான்.**

भवन्तं परतन्त्रोऽहं नौभ्रंशभ्रान्तिमावहन् ।
नाम्ना धरः कृतेर्भूम्ना पुनरानीतवानिति ॥ 34

भवन्तं - உன்னை, परतन्त्रः - பராதீனனான, अहं - நான் नौभ्रंशभ्रान्ति - கப்பலுடைந்ததனால், आहन् - வகியாய் நின்றவனாய்க்கொண்டு, भूम्ना - பெரிதான, नाम्ना - பேரினாலே, कृतेः - செயலின், धरः - தரனானவன், कीर्ति - கீர்த்தியுடைய, पुनः - பிற்பாடு, आनीतवान् - கொண்டுவந்தேன், इति - என்று. 34

**பொருள் : - "தர" னென்று பெயருடைய நான் காரியத்தின் மிகுதியால் மரக்கலம் மூழ்கியது போல் தோற்றுவித்து உன்னை இங்கே அழைத்து வந்தேன் என்று கூறினான்.**

श्रीदत्तोऽपि तदाकर्ण्य तुतोष सुतरामसौ ।
दुःखस्यानन्तरं सौख्यमतिमात्रं हि देहिनाम् ॥ 35

असौ - இந்த, श्रीदत्तोऽपि - ஸ்ரீதத்தனும், तत् - அதை आकर्ण्य - கேட்டு, सुतरां - மிகவும். तुषोष - சந்தோஷித்தான், (तथाहि)देहिनाम् - ஜீவன்களுக்கு, दुःखस्य - துக்கத்துக்கு, अनन्तरं - பிற்பாடு, सौख्यं - சுகமானது, अतिमात्रं हि - மிகவும் வருமன்றோ. 35

*பொருள் : - இதனைக் கேட்ட "ஸ்ரீதத்தனும்" மிக்க மகிழ்வுற்றான். உயிரினங்களுக்குத் துன்பத்திற்குப்பின் ஏற்படும் இன்பம் அதிகமன்றோ!*

असुखायत वैश्योऽपि खेचरेन्द्रावलोकनात् ।
मित्रं धात्रीपतिं लोके कोऽपरः पश्यतः सुखी ॥ 36

अथ - பிற்பாடு, वैश्यः - ஸ்ரீதத்தனானவன், खेचरेन्द्रावलोकानात् - வித்யாதர ராஜாவைக் கண்டுநின்றும், असुखायत - சுகீயானான், (तथाहि)लोके - லோகத்திலே, धात्रीपतिं - ராஜாவை, मित्रं - நண்பன், पश्यतः - பார்க்கிறவனைக் காட்டிலும், सुखी - சுகீயானவன், अपरः - அன்யனானவன், कः - எவன். 36

*பொருள் : - பிறகு வணிகன் ஸ்ரீதத்தன் (ஆகாயத்தில் சஞ்சரிப்பவர்கள்) வித்யாதரர்களின் தலைவனைச் சந்தித்ததால் மிக மகிழ்வடைந்தான். தனது நண்பன் அரசனாக இருக்கிறான் என்பதைப் பார்க்கும் ஒருவனைக் காட்டிலும் வேறொருவன் இன்பம் துய்ப்பவனாக இருக்கமாட்டான்.*

नभश्चराधिपः पश्चात्तदायतां सुतां व्यधात् ।
प्राणेष्वपि प्रमाणं यत्ताद्धि मित्रमितीष्यते ॥ 37

नभश्चराधिपः - வித்யாதர ராஜாவானவன், पश्चात् - பிற்பாடு, तदायतां - ஸ்ரீதத்த செட்டியினுடைய सुतां - புத்ரியை, व्यधात् - பண்ணினான், प्राणेष्वपि - ப்ராணங்களிலேயும், प्रमाणं - ப்ரமாணமானது, यत् - யாதொன்று, तत् - அது, मित्रं - மித்ரமானது, इति - என்று, इष्यते हि - அங்கீகரிக்கப்படாநின்றதன்றோ. 37

*பொருள் : - பின்பு வித்யாதரன் கந்தர்வதத்தையை அழைத்துவந்து "நண்ப நீ ராஜமாபுரியில் இவளை வீணை வித்தையில் வெல்பவனுக்கு விவாகம் செய்து கொடு" ! என்று கூறி, ஸ்ரீதத்தனிடம் ஒப்புவித்தான். நட்பு என்பது உயிரைக்கூட நண்பனிடம் நம்பி ஒப்படைப்பதுதான்.*

श्रीदत्तं सत्वरं तस्मात्खेचरेशो न्यवर्तयत् ।
अङ्गजायां हि सूत्यायामयोग्यं कालयापनम् ॥ 38

श्रीतत्तं - ஸ்ரீதத்தனை, सत्वरं - சீக்கிரமாக, तस्मात् - அங்குநின்றும், खेचरेण - வித்யாதரராலே, न्यवर्तयत् - திருப்பப்பட்டது. तथाहि अङ्गजायां - புத்ரியானவள், सूत्यायां - யௌவனையாய் உள்ளளவில், कालयापनम् - காலம் போரதானது. 38

*பொருள் : - இவ்வாறு கூறி, வித்யாதர அரசன் ஸ்ரீதத்தனை அங்கிருந்து உடனே புறப்பட வைத்தான். வயது வந்த பெண்ணை வைத்துக்கொண்டு (திருமணம் செய்யாமல்) காலந்தாழ்த்துவது தவறல்லவா ?*

गृहस्थानां हि *तद्दौःस्थ्ययमतिमात्रमरुन्तुदम् ।
कन्यानामप्रमादेन रक्षणादिसमुद्भवम् ॥ 39

---

* दौःस्थ्यं - दुःखेन स्थातुम् योग्यम् ।

तथाहि गृहस्थानां - க்ருஹஸ்தர்களுக்கு, कन्यानां - கன்யைகளுக்கு, अप्रमादेन - பிரமாதமில்லாததினாலே, रक्षणादिसमुद्भवम् - ரக்ஷணம் முதலானதினாலே உண்டான, तद्दौःस्थ्यं - அந்த துஸ்திதியானது, अतिमात्रं - மிகவும், अरून्तुदं हि - துக்கத்தைப் பண்ணுகிறதன்றோ. 39

*பொருள் : - மிகக் கவனத்துடன் மடந்தையரை காப்பாற்றும் செயல் இல்லற வாழ்வில் ஈடுபட்டுள்ளவர் களுக்கு மிகவும் கடினம். (மர்மஸ்தானத்தைக் குத்திக் கொடுமை செய்வதைப் போன்றது)*

तयामा स्वपुरं प्राप्य श्रीदत्तोऽप्यथ तत्कथाम् ।
पत्न्याः प्रकटयामास स्त्रीणामेव हि *दुर्मतिः ॥ 40

तथाहि श्रीदत्तोऽपि - ஸ்ரீதத்தனும், अथ - பிற்பாடு, तयामा - அவளோடு கூட, स्वपुरं - தன்னுடைய பயனத்தை (புரத்தை) प्राप्य - அடைந்து, तत्कथाः - அவளுடைய கதையை, पत्न्याः - ஸ்திரிக்கு, प्रकटयामास - ப்ரகடனம் பண்ணினான். तथाहि स्त्रीणामेव - ஸ்திரியர்களுக்கே, दुर्मतिः - துர்புத்தியன்றோ. 40

*பொருள் : - அவளுடன் தனது நகரை அடைந்து, ஸ்ரீதத்தன் அவளது கதையைத் தன் மனைவியிடம் கூறினான். பெண்களுக்கு மனம் ஒருநிலையில் இருக்காதல்லவா ? அதாவது பெண்களின் மனம் சஞ்சலமானது என்பதால், அழைத்து வந்த காந்தர்வதத்தையின் மனம் வேறிடம் செல்லாமல் இருப்பதற்காக அச்செய்தியை தனது மனைவியிடம் கூறி, காந்தருவதத்தைக்கு ஏதும் தீங்கு நேராமல் பாதுகாத்தான் என்பது பொருள்.*

---

* दुल्मतिः – दोलायमाना मतिः – ஊஞ்சலாடும் மனம்.

दुल् – ஆடி அசைய.

वीणाविजयिनो योग्या भोग्या पुत्री ममेति सः ।
कटके घोषयामास राजानुमतिपूर्वकम् ॥ 41

वीणाविजयिनः - வீணையிலே ஜயித்தவனுக்கு, धर्मपुत्री - என்னுடைய புத்ரியானவள், योग्या - யோக்யையானவள், भोग्या - போக்யையானவள், इति - என்று, सः- ஸ்ரீதத்தனாவன், कटके - பட்டணத்திலே, राजानुमतिपूर्वकम् - ராஜானுமதிபூர்வகமாக, घोषयामास - கோஷிப்பித்தான். 41

*பொருள் : - அரசனின் அனுமதி பெற்று, "இவளை வீணை வாசிப்பில் வெல்வோரே, எனது மகளை மணம் முடிக்கத் தக்கவர்" என்று நகரில் அவர் அறிவித்தார்.*

अकुतोभीतिता भूमेर्भूपानामाज्ञयान्यथा ।
आस्तामन्यत्सुवृतानां वृत्तं च न हि सुस्थितम् ॥ 42

भूमेः - பூமியில் நின்றும், भूपानां - ராஜாக்களின், आज्ञया - ஆக்ஞையினாலே, अन्या - அல்லாவிட்டால், भीतिता - பயங்கரமானது, अकृतः - என்ன காரணத்தினின்றும் அல்ல, अन्यत् - மற்றொன்று, आस्तां - இருக்கட்டும், सुवृत्तानां - சாரித்ரவான்களுக்கு, वृत्तं च - சரித்ரமும், सुस्थितम् - சுஸ்திதமானது. नहि - இல்லையன்றோ. 42

*பொருள் : - நன்னடத்தை என்பது எப்போதுமே ஒரே நிலையில் ஒருவரிடம் இருப்பதில்லை. அதாவது, நன்னடத்தை என்பது இடம், பொருள் இவைகளால் மாறுபடும். ஓரிடத்தில் நன்மையாக இருப்பது மற்றோரிடத்தில் தீமையாகும். ஆகவே, எல்லோரும் எல்லாச் சான்றோரையும், சான்றோர் எனக் கூறுவது இயலாது. சான்றாண்மை என்பது இடம், காலம், எதிர்படும் மனிதர்*

இவைகளைப் பொறுத்தே அமைகிறது. இந்த நன்னடத்தையைத் தீர்மானிப்பது அரசர்களே. அவர்கள் மற்றவர்கள் மீது கொண்ட அச்சத்தாலோ அல்லது தானே சிறந்தவன் என்ற எண்ணத்தால் பிறப்பித்த ஆணையாலோ நன்னடத்தை என்பது தீர்மானிக்கப்படுகிறது.

वीणामण्डपमासेदुस्तावता धरणीभुजः ।
स्त्रीरागेणात्र के नाम जगत्यां न प्रतारिताः ॥ 43

तावता - அவ்வளவினாலே, धरणीभुजः - ராஜாக்கள், वीणामण्डपं - விணா மண்டபத்தை, आसेदुः - அடைந்தார்கள், तथाहि अत्र जगत्यां - இந்த லோகத்திலே. स्त्रीरागेन - பெண்கள் மீதுள்ள ஆசையினாலே, केनाम - எவர்கள்தான், न प्रतारिताः - வாஞ்சிக்கப்பட்டவர்கள் இல்லை. 43

பொருள் : - அந்த நிலையில் அரசர்கள், வீணை வாசிக்க இருந்த அவையைச் சென்று அடைந்தார்கள். மங்கையர் மீது கொண்ட ஈடுபாட்டினால் எவர்கள் தான் விரட்டப்படவில்லை ?

कन्यायाः परिवादिन्यां पराजेषत पार्थिवाः ।
अपुष्कला हि विद्या स्यादवज्ञैकफला क्वचित् ॥ 44

कन्यायाः - கன்யையுடைய, परिवादिन्यां - வீணை வாசிக்கிறதிலே, पार्थिवाः - ராஜாக்கள், पराजेषत - தோற்றார்கள். तथाहि अपुष्कला - நிறைவற்ற, विद्या - வித்யையானது, क्वचित् - சிறிது) ஓரிடத்திலே, अवज्ञैकफला - அவக்ஞையே முக்ய பலமாயுடைத்தானது, स्यात् - ஆகக்கடவதன்றோ. 44

பொருள் : - மங்கையின் வீணை வாசிப்பில் அரசர்கள் தோற்றனர். நன்கு கற்காத கல்வி, சில இடங்களிலே அவமானப்படுதலையே பயனாக அளிக்கிறது. அதாவது, இளவரசி அளவு பயிற்சியற்ற மற்ற அரசர்கள் தோற்றதால் அவமானமடைந்தார்கள் என்பது பொருள்.

जीवंधरकुमारस्तु घोषवत्यां जिगाय ताम् ।
अनवद्या हि विद्या स्याल्लोकद्वयफलावहा ॥ 45

तु - பின்னை, जीवंधरकुमारः - ஜீவன்தரகுமாரன், घोषवत्यां - கோஷவதி என்கிற வீணையினாலே, तां - அவளை, जिगाय - ஜயித்தான். तथाहि अनवद्या - தோஷமில்லாத, विद्या - வித்யையானது, लोकद्वयफलावहा - இகபர லோகங்களுக்கும் பலத்தை வகிக்கிறது, स्यात् हि - ஆகக்கடவதன்றோ. 45

பொருள் : - கோஷவதீ என்ற வீணையை வாசிப்பதில், கந்தர்வதத்தையை ஜீவந்தரன் வென்றான். மாசற்ற கல்வி இரு உலகிலும் (இம்மையிலும் மறுமையிலும்) பயனைத் தரக்கூடியது.

पराजयं जयाच्छ्लाघ्यं मत्वा सापि तमासदत् ।
अन्तिकं कृतपुण्यानां श्रीरन्विष्य हि गच्छति ॥ 46

जयात् - வீணையிலே ஜயித்ததினின்றும், पराजयं - தோத்து இருக்கிற, सापि - அவளும், तं - அவனை, श्लाघ्यम् - பூஜ்யனாக, मत्वा - எண்ணி, आसदत् - அடைந்தாள், तथाहि कृतपुण्यानां - பண்ணப்பட்ட புண்ணியவான்களுடைய, अन्तिकं - சமீபத்தே, श्रीः - ஐச்வர்யமானது, अन्विष्य - தேடி, गच्छति हि - அடைகின்றதன்றோ. 46

*பொருள் : - கந்தர்வதத்தையும் ஜீவகனிடம் தோல்வியுற்றதை வெற்றியிலும் சிறந்ததாக எண்ணினாள். புண்ணியம் செய்தவரின் சமீபத்தைத் திருமகளே தேடியடைகின்றாள் அல்லவா!*

आमुमोचाथ मोचोरूः स्रजं जीवकवक्षसि ।
कुर्वन्तु तप इत्येवं सर्वेभ्यो ब्रुवतीव सा ॥ **47**

मोचोरूः - வாழைத்தண்டு போலே இருக்கிற துடையையுடைய, सा - கந்தர்வதத்தையானவள், तपः - தபசை, कुर्वन्तु - பண்ணக்கடவர்கள். इति - என்று, एव - இப்படி, सर्वेभ्यः - சமஸ்தர்கள் பொருட்டு, ब्रुवतीव - சொல்லாநின்றவள் போல, जीवकवक्षसि - ஜீவந்தரனுடைய மார்பிலே, स्रजं - மாலையை, आमुमोच - விட்டாள். 47

*பொருள் : - பிறகு அப்பெண் "யாவரும் இவரைக் கணவராகப் பெறுவதற்குத் தவம் செய்யுங்கள்" என்று சொல்லுகிறவள் போல ஜீவகனுடைய கழுத்தில் மாலையைச் சூட்டினாள்.*

काष्टाङ्गारस्तु तद्वीक्ष्य क्षितिपान्समधुक्षयत् ।
अन्याभ्युदयखिन्नत्वं तद्धि दौर्जन्यलक्षणम् ॥ 46

तु - பின்னை, काष्टाङ्गारः - காஷ்டாங்காரனானவன், तद्वीक्ष्य - அதனைப்பார்த்து, क्षितिपान् - ராஜாக்களை, समधुक्षयत् - எழுப்பினான். तथाहि अन्याभ्युदयखिन्नत्वं - அன்யருடைய ஐச்வர்யத்தை கெடுக்கிறதானது, तत् - அது, दौर्जन्यलक्षणं हि - துர்ஜனருடைய லக்ஷணமன்றோ. 46

*பொருள் : - அதனைக் கண்ட காஷ்டாங்காரன் (அந்தப் போட்டியில் தோற்ற) மற்ற அரசர்களைத் (ஜீவந்தரனுக்கு எதிராகத்) தூண்டினான். பிறரது எழுச்சி கண்டு வருத்தமடைவது தீயோரின் இலக்கணம் அல்லவா ?*

क्रयविक्रययोर्योग्यः कुप्यानां वैश्यसूनुकः ।
कथं लभेत स्त्रीरत्नं शस्तं वस्तु हि भूभुजाम् ॥ 49

कुप्यानां - பாத்திரங்கள், வஸ்த்ரம் முதலான சரக்குகளுடைய, क्रयविक्रयोः - க்ரயவிக்ரயங்களுக்கு, योग्यः - யோக்யனான, वैश्यसूनुकः - செட்டி புத்ரனானவன், स्त्रीरत्नं - ஸ்திரீரத்னத்தை, कथं - எப்படி, लभते பெறக்கடவன், शस्तं - ப்ரஸ்தமான, वस्तु - வஸ்துவானது, भूभुजाम् हि - ராஜாக்களுக்கன்றோ. 49

*பொருள் : - பாத்திரங்களை வாங்கி விற்கும் வணிகனின் சிறுமகன் எவ்வாறு அரசர்க்கே உரித்தான மாதர்குல மாணிக்கத்தை எவ்வாறு அடைய முடியும் ?*

इति संधुक्षिताश्चक्रुः स्वामिना तेऽपि संयुगम् ।
प्रकृत्या स्यादकृत्ये धीर्दुः शिक्षायां तु किं पुनः ॥

इति - என்று, संधुक्षिताः - க்ரூரத்தை உண்டாக்கப்பட்டிருப்பார்களான, तेऽपि - அவர்களும், स्वामिना - ஜீவந்தரஸ்வாமியோடே, संयुगं - யுத்தத்தை, चक्रुः - பண்ணினார்கள். तथाहि धीः - புத்தியானது, प्रकृत्या - பாவத்தினாலே, अकृत्ये - அயோக்யத்திலே, स्यात् - ஆகக்கடவது, तु - விசேஷமுண்டு, दुःशिक्षायां - துஸ்சிக்ஷையிலே, किं पुनः - சொல்லவேணுமோ. 50

*பொருள் : - இவ்வாறு நன்கு தூண்டிவிடப்பட்ட அந்த அரசர்கள் ஜீவந்தரனுடன் போர் புரிந்தனர். துர்போதனையைக் கேட்டால் செய்யக்கூடாத செயலில் கூட மனதைச் செலுத்துவர் மக்கள்.*

पराजेषत भूपास्ते धन्विनां चक्रवर्तिनः ।
अलं काकसहस्रेभ्यः एकैव हि दृषद्भवेत् ॥ 51

धन्विनां - வில்லுகளுக்கு, चक्रवर्तिनः - சக்ரவர்த்திகளாய் இருக்கிற, ते भूपाः - அந்த ராஜாக்கள், पराजेषत - தோற்றார்கள், तथाहि काकसहस्रेभ्यः - ஆயிரம் காக்கைகள் பொருட்டு, अलं - மிகவும், दृषत् - கல்லானது, एकैव - ஒன்றே, भवेत् - ஆகக்கடவதன்றோ. 51

*பொருள் : - வில்லேந்துவதில் அரசர்க்கரசராய் விளங்கிய அம்மன்னர்கள் அவனிடம் தோற்றனர். காக்கைகள் ஆயிரம் இருப்பினும் (அவற்றைக் கலைக்க) ஒரு கல்லே போதுமல்லவா ?*

स्थाने कन्यामनः सक्तमित्यूचुः सज्जना मुदा ।
सुधासूते सुधोत्पतिरपि लोके किमद्भुतम् ॥ ॥ 52

कन्यामनः - கன்யையினுடைய மனசானது, स्थाने - யோக்யஸ்தானத்திலே, सक्तं - ஆசக்தியாச்சுது, इति - என்று, सज्जनाः - சஜ்ஜனர்கள், मुदा - சந்தோஷத்தினாலே. ऊचुः - சொன்னார்கள், तथाहि लोके - லோகத்திலே, सुधासूतेः - சந்திரனிடத்தின்றும், सुधोत्पत्तिरपि - அமிருதோத்பத்தியும், अद्भुतम् किम् ? - ஆச்சரியமோ. 52

*பொருள் : - அப்போது நல்லோர்கள் கன்னிகையின் மனம் தக்கவிடத்தில் பதிந்தது. உலகில் சந்திரனிடம் இருந்து அமிர்தம் உண்டானது ஆச்சரியமாகுமோ ? என்று கூறினான்.*

**अथ ग**न्धर्वदत्तां तां श्रीदत्तनाग्निसाक्षिकम् ।
दत्तां स जीवकस्वामी पर्यणैष्ट यथाविधि ॥ 53

अथ - பிற்பாடு, श्रीदत्तेन - ஸ்ரீதத்தசெட்டியினாலே, अग्निसाक्षिकम् - ஹோமசாக்ஷியாக, उक्तां - கொடுக்கப் பட்டிருக்கிற, तां - அந்த கந்தர்வதத்தையை, स जीवकस्वामी- அந்த ஜீவந்தரஸ்வாமியானவன், यथाविधि - விதி கிரமமாக, पर्यणैष्ट - விவாஹம் பண்ணினான். 53

इति श्रीमद्वादीभसिंहसूरि विरचिते क्षत्रचूडामणौ
गन्धर्वदत्तालम्भो नाम तृतीयोलम्भः ॥

*பொருள் : - பிறகு ஸ்ரீதத்தனால், அக்னி சாக்ஷியாக வழங்கப்பட்ட கந்தர்வதத்தையை ஜீவகன் விதிப்படித் திருமணம் செய்து கொண்டான்.*

கந்தர்வத்தாலம்பம் முற்றிற்று



# चतुर्थो लम्भः

## गुणमालालम्भः

## குணமாலாலம்பம்

अथ जीवंधरस्वामी रेमे रामासमन्वितः ।
संसारेऽपि यथायोग्याद्भोग्यान्ननु सुखी जनः ॥ 1

अथ - பிற்பாடு, जीवंधरस्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், रामासमन्वितः - ஸ்திரீயோடே கூடினவனாய்க் கொண்டு, रेमे - ரமித்தான், तथाहि संसारेपि - சம்சாரத்திலேயும், यथायोग्यात् - யதாயோக்யமான, भोग्यात् - போக்யத்தினின்றும், जनः - ஜனமானது, सुखी - சுகீயன்றோ.

*பொருள் : - பிறகு ஜீவந்தரன் தன் மனைவியோடு இல்லற வாழ்க்கையைத் துவங்கினான். ஏற்ற ஒரு பொருளை அடைவதால் உலகியல் வாழ்க்கை இன்பமாகின்றது அல்லவா ?*

माधवोऽथ जलक्रीडां पौराणामुदपादयत् ।
रागान्धानां वसन्तो हि बन्धुरग्नेरिवानिलः ॥ 2

अथ - பிற்பாடு, पौराणां - புரஜனங்களுக்கு, माधवः - வசந்த காலமானது, जलक्रीडां - ஜலக்ரீடையை, उदपादयत् - உண்டாக்கித்து, तथाहि अग्नेः - அக்னிக்கு, अनिलः - காற்றானது, इव - போல, रागान्धानां - ராகாந்தர்களுக்கு, वसन्तः - வசந்த காலமானது, बन्धु हि - பந்துவன்றோ. 2

பொருள் : - இளவேனிற்காலம், தனது இயைந்த வெப்பத்தினால் மக்களைக் குளிர்ந்த நீரில் நீராடச் செய்தது. காதல் வயப்பட்டவர்களுக்கு இளவேனிற்காலம் நெருப்புக்குக் காற்றுப்போல தூண்டுதல் தருவது அல்லவா ?

जीवंधरकुमारोऽपि मित्रैर्द्रष्टुमयादमूम् ।
नवापगाजलक्रीडां लोको ह्यभिनवप्रियः ॥ 3

जीवन्धरकुमारोऽपि - ஜீவந்தரகுமாரனும், मित्रैः - மித்ரர்களோடே, अमुं - இந்த, नवापगा - புதிய நீர்ப்பெருக்கை உடைய, जलक्रीडां - நூதனமான ஜலக்ரீடையை, द्रष्टुं - பார்க்கிறதற்கு, अयात् - அடைந்தான். तथाहि लोकः - ஜனமானது, अभिनवप्रियो हि - நூதனப்பிரியத்தை உடையதன்றோ. 3

பொருள் : - ஜீவந்தரனும் தனது நண்பர்களுடன் புதிய நீர்ப்பெருக்கை உடைய நதியில் நீர்விளையாட்டைக் காணச் சென்றான். புதியதை விரும்புவது உலகத்தின் இயல்பு அல்லவா ?

अवधिषुर्द्विजास्तत्र हविर्दूषितभाषणम् ।
क्रूराः किं किं न कुर्वन्ति कर्मधर्मपराङ्मुखाः ॥ 4

द्विजा - பிராமணர்கள், तत्र - அவ்விடத்திலே, हविर्दूषितभाषणम् - ஹோமத்ரவ்யத்தை தீண்டி தூஷணம் பண்ணிச்சுதென்று நாயை, अवधिषुः - கொன்னார்கள், (तथाहि) धर्मपराङ्मुखाः - தர்மத்துக்கு விமுகரான, क्रूराः - கோபிகள், कर्म - என்னென்ன கார்யத்தை, न कुर्वन्ति - பண்ணா நின்றார்கள். 4

பொருள் : - அவ்விடம் அந்தணர்கள் தமது ஹோம திரவ்யத்தைத் தொட்டுப் பாழாக்கினதற்காக ஓர் நாயைத் துரத்தியடித்துக் குற்றுயிராகக் கிடத்தினார்கள். அறத்தில் பற்றில்லாத தீயோர்கள் எத்தகைய தீய செயலையும் செய்யப் பின்னடைவார்கள்.

निर्निमित्तमपि घ्नन्ति हन्त जन्तूनधार्मिकाः ।
किं पुनः कारणाभासे नो चेदत्र निवारकः ॥ 5

अधार्मिकाः - பாபிகள், निर्निमित्तमपि - காரணம் இல்லாமலும், जन्तून् - ஜீவன்களை, घ्नन्ति - கொல்லா நின்றார்கள், हन्त - கெட்ட, கெட்ட, तथाहि अत्र - இவ்விடத்திலே. निवारकः - தடை பண்ணுகிறவன், नोचेत् - இல்லையாகில், कारणाभासे - காரணமென்ற,- ஆபாஸ முண்டாயுள்ளளவில், किं पुनः - சொல்லவேணுமோ. 5

பொருள் : - அறநெறிச் செல்லாதவர்கள் காரணமின்றியே பிராணிகளைக் கொல்லுகின்றனர். ஓர் போலிக் காரணமும் ஏற்பட்டுத் தடுப்பவரும் இராவிடில் அவர்கள் எதைத்தான் செய்யார்?

तद्व्यथां वीक्ष्यमाणोऽयं कुमारो विषसाद सः ।
तद्धि कारूण्यमन्येषां स्वस्येव व्यसने व्यथा ॥ 6

तद्व्यथां - அந்த நாயினுடைய துக்கத்தை, वीक्ष्यमाणः - பார்க்கப்பட்ட, सः - அப்படிப்பட்டிருக்கிற, अयं कुमारः - இந்த ஜீவந்தரகுமாரனானவன், विषसाद - துக்கித்தான். तथाहि स्वस्य - தன்னுடைய, व्यसने - துக்கத்திலே, व्यथाः - துக்கமான, इव - போல, अन्येषां - அன்யர்களுடைய துக்கத்திலே, கண்டு துக்கப்படுகிறது, तत् - அது, करूण्य हि - க்ருபையன்றோ. 6

*பொருள் : - அந்த நாய் துயர்ப்படுவதைக் கண்ட ஜீவகன் மிக வருந்தினான். தனக்கு துன்பம் நேர்ந்தபோது வருந்துவது போல பிறருக்குத் துயர் உண்டான காலத்தும் வருந்துவதுதான் கருணை எனப்படும்.*

प्रत्युज्जीवयितुं श्वानं यत्नेनाप्यथ नाशकत् ।
नह्यकालकृतो यत्नो भूयानपि फलप्रदः ॥ 7

श्वानं - நாயை, प्रत्युज्जीवयितुं - திரும்பி, ஜீவிப்பிக்கிறதற்கு, यत्नेनापि - ப்ரயத்தனத்தினாலே, नाशकत् सः - ஸமர்த்தமாச்சுதல்ல, तथाहि अकालकृतः - காலமல்லாத காலத்தில் பண்ணப்பட்ட यत्नः - யத்நமானது, भूयानपि - பஹுவானாலும், फलप्रदः - பலத்தைக் கொடுக்கிறது. नहि - இல்லை.

*பொருள் : - ஜீவகன் பெரு முயற்சி செய்தும் ,அதன் உயிரை மீட்க முடியவில்லை. காலம் கழிந்தபின்னர் செய்யும் முயற்சி மிகுந்த பயனை அளிக்காது.*

परलोकार्थमस्यायं पञ्चमन्त्रमुपादिशत् ।
निर्वाणपथपान्थानां पाथेयं तद्धि किं परैः ॥ 8

परलोकार्थं - பரலோக நிமித்தமாக, अस्य - இந்த நாய்க்கு, अयं - இந்த ஜீவந்தரனானவன், पञ्चमन्त्रं* - பஞ்சமந்த்ரத்தை, उपादिशत् - உபதேசித்தான், (तथाहि) निर्वाणपथपान्थानां - மோக்ஷ மார்க்கதிலே நடத்தப்பட்ட

---

* पञ्चमन्त्रः –

ओं नमो अरिहन्ताणम् , ओं नमो सिद्धाणम् , ओं नमो आयरियाणम्, ओं नमो सुहबालाणम्, सैव सिद्धः साधूणम् ।

பேர்களுக்கு, तत् - அந்த மந்த்ரோபதேசமானது, पाथेयं हि- கட்டுச்சாதமன்றோ ! परैः - அன்யங்களினாலே, किं - என்ன? 8

**பொருள் : - மறுமையில் நன்மைக்காக, ஜீவந்தரன் அந்த நாய்க்கு, பஞ்சமந்திரத்தை உபதேசித்தான். துறவு மேற்கொண்டு செல்லும் வழிப்போக்கர்களுக்கு பிறரால் அளிக்கப்படும் கட்டுச்சோறு நல்லுபதேசங்கள் தானே!**

यक्षेन्द्रोऽजनि यक्षोऽयमहो मन्त्रस्य शक्तितः ।
कालायसं हि कल्याणं कल्पते रसयोगतः ॥ 9

अयं यक्षः - இந்த நாயானது, मन्त्रस्य - பஞ்சநமஸ்கார மந்திரத்திடையே, शक्तिः - சாமர்த்தியத்திநின்றும், यक्षेन्द्रः - யக்ஷேந்திரன் ஆனவன், अजनि - ஆனான். अहो - ஓ ! பெருவியப்பு, तथाहि कालायसं - இரும்பானது, रसयोगतः - ரஸயோகத்தினின்றும், कल्याणं - தங்கமாக, कल्पते हि - கல்ப்பிக்கப்படாநின்தன்றோ. 9

**பொருள் : - ஆச்சரியம் ! அந்த நாய் அந்தப் பஞ்சமந்திரத்தின் மகிமையினால் யக்ஷர்களுக்கெல்லாம் தலைவனாக ஆயிற்று. ரஸவாதத்தின் வாயிலாக, இரும்பைத் தங்கமாக மாற்றுவது இயலும்.**

---

*1. சொல்லிய நன்மையில்லாச் சுணங்களின் உடம்பு நீங்கி*
*யெல்லொளித் தேவனாகிப் பிறக்குமோ வென்ன வேண்டா*
*கொல்லுலையகத்திட்டுதிக் கூரிரும் பிரதங்குத்த*
*வெல்லையில் செம்பொன்னாகி யெறிநிறம் பெற்றதன்னே.*

*- சீவக சிந்தாமணி*

2. यक्षः – श्वा – यक्ष इन्द्रमृगः श्वालः कापिलो मण्डलः शुनः । – भोजनिघण्टुः ।

*க்ஷத்ர - 18*

मरणक्षणलब्धेन येन श्वा देवताजनि ।
पञ्चमन्त्रपदं जप्यमिदं केन न धीमता ॥ 10

मरणक्षणलब्धेन - மரண சமயத்திலே பெறப்பட்டிருக்கிற, येन - யாதொரு, பஞ்சநமஸ்காரமந்த்ர உபதேசத்தினாலே, श्वा - நாயனாது, देवता - தேவஸ்வரூபமானது, अजनि - ஆச்சுது, तथाहि धीमतां - புத்திமானான, केन - எவனாலே, इदं - இந்த, पञ्चमन्त्रपदं - பஞ்சமந்த்ரபதமானது, जाप्यम् - ஜபிக்கப்படுமது. न - அல்ல. 10

***பொருள் : - மரண காலத்தில் உபதேசம் பெற்ற பஞ்சமந்திர மகிமையினால் சுனங்கள் தேவனாக மாறும் என்றால் அறிவாளி எவனும் பஞ்ச மந்திரத்தை ஜபம் செய்வான்.***

स कृतज्ञचरो देवः कृतज्ञत्वात्तदागमत् ।
अन्तर्मूहूर्ततः पूर्तिर्दिव्याया हि तनोर्भवेत् ॥ 11

स कृतज्ञचरः - அந்த நாயாய் இருந்த, देवः - தேவனானவன், कृतज्ञत्वात् - செய்த நன்றியை, அறிந்தத்தினின்றும், तदा - அப்பொழுது, अगमत् - அடைந்தான், तथाहि दिव्यायाः - தேவ சம்மந்தமான, तनोः - சரீரத்திற்கு, अन्तर्मूहूर्ततः - அந்த முஹூர்த்த நேரத்திலேயே, पूर्तिः - நிறைவானது, भवेत् - ஆகக்கடவதன்றோ. 11

***பொருள் : - அந்த நன்றியுடைய நாயாய் இருந்த தேவன், செய்நன்றியை மறக்கவில்லை. ஆகவே, ஜீவகன் மந்திரோபதேசம் செய்த ஒரு முஹூர்த்த காலத்துக்குள் (சுமார் 1½ மணிநேரம்) அம்மந்திரத்தின் விளைவாக யக்ஷகர்களின் அரசனான்.***

कुमारममरो दृष्ट्वा हृष्टस्तुष्टाव मृष्टवाक् ।
उपकारस्मृतिः कस्य न स्यान्नो चेदचेतनः ॥ 12

हृष्टः - மனஸை ஹரிக்கப்பட்ட, अमृष्टवाक् - மதுரமான வசனத்தையுடைய, अमरः - தேவனானவன், कुमारं - ஜீவந்தரகுமாரனை, दृष्ट्वा - கண்டு, तुष्टाव - சந்தோஷித்தான். तथाहि अचेतनः - அறிவில்லாதது, नो चेत् - இல்லையாகில், अस्य - எவனுக்கு, उपकारस्मृतिः - உபகாரஸ்மரணையானது, न स्यात् - ஆகக்கடவதல்ல. 12

*பொருள் :- பொய்யாகாத சொற்களால் அத்தேவன் ஜீவந்தரனைப்போற்றினான். கண்டு மகிழ்ந்தான். எவனொருவனுக்கு, பிறரால் உதவி செய்யப்பட்டும், அதை நினைவிற்கொள்ளவில்லையோ, அவன் நிச்சயமாக உயிரற்றவனாகத்தன் இருப்பான். (அதாவது உயிருள்ளவன் செய்நன்றி கொல்லமாட்டான்)*

व्यस्मेष्ट तेन न स्वामी मन्त्रमाहात्म्यनिर्णयात् ।
मुक्तिप्रदेन मन्त्रेण देवत्वं न हि दुर्लभम् ॥ 13

स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், मन्त्र मनुमाहात्म्यनिर्णयात् - மந்த்ர மாஹாத்மிய நிச்சயத்தினின்றும், तेन - அந்த தேவனாலே, व्यस्मेष्ट - ஆச்சரியம் பண்ணப்பட்டவன், न - அல்ல, तथाहि मुक्तिप्रदेन - மோட்சத்தை கொடுக்கிறதான, मन्त्रेण - மந்திரத்தினாலே, देवत्वं - தேவத்வமானது, दुर्लभम् - துர்லபமானது, नहि - இல்லையன்றோ. 13

பொருள் : - சுனங்கன் தேவனாக மாறியதைக் கண்டு ஜீவகன் வியப்படையவில்லை. மோட்சத்தையே கொடுக்கக்கூடிய மந்திரம் தேகசரீரத்தைக் கொடுப்பது அரிதோ?

स्मर्तव्योऽस्मि महाभागेत्युक्त्वा देवस्तिरोऽभवत् ।
प्रतिकर्तु कथं नेच्छेदुपकर्तुः सचेतनः ॥ 14

महाभाग - மாகாபாக்யவானே, स्मर्तव्यः - ஸ்மரிக்கப்படுமவன், अस्मि - ஆகா நின்றேன், इति - என்று, उक्त्वा - சொல்லி, देवः - தேவனாவன், तिरः - மறையப்பட்டவன், अभवत् - ஆனான், तथाहि सचेतनः - ஞானத்தோடு கூடினவன், उपकर्तुः - உபகாரம் பண்ணினவனுக்கு प्रतिकर्तु - ப்ரத்யுபகாரம் பண்ணுகிறதற்கு, कथं - எப்படி, नोचेत् - இச்சிக்கக் கடவனல்ல. 14

பொருள் : - "உயர்ந்தவரே ! தங்களால் நான் நினைவிற் கொள்ளத்தக்கவன்" என்று கூறி, அத்தேவன் மறைந்தான். உயிருள்ள எவன் ஒருவன் தான் பதிலுக்கு உதவிசெய்ய விரும்பமாட்டான் ? (பதிலுக்கு உதவி செய்ய எந்த ஒரு மனிதனும் விரும்புவான் என்பது பொருள்)

सारमेयचरे देवे तमाश्लिष्य मुहुर्मुहुः ।
आपृच्छ्य च गते तस्मिन्नत्र प्रस्तुतमुच्यते ॥ 15

सारमेयचरे - நாயாய் இருந்த, देवे - தேவனானவன், मुहुर्मुहुः - திரும்பத் திரும்ப, तं - ஜீவந்தரனை, आस्लिष्य - ஆலிங்கனம் பண்ணி, आपृच्छ्य च - கேட்டும், तस्मिन् - தேவனானவன், गते सति - போயுள்ளளவில், अत्र - இவ்விடத்திலே, प्रस्तुतं - ப்ரஸ்துதமானது, उच्यते - சொல்லப்படாநின்றது. 15

பொருள் : - நாயிலிருந்து பிறந்த அந்த தேவன் ஜீவகனை மீண்டும் அணைத்தவாறு, அவனை நலம் விசாரித்து விட்டுச் சென்றபிறகு, நடந்த கதை இப்போது கூறப்படுகிறது.

चूर्णार्थं सुरमञ्जर्या स्पर्धाभूद्गुणमालया ।
एकार्थस्पृहया स्पर्धा न वर्धेतात्र कस्य वा ॥ 16

चूर्णार्थं - சூர்ணநிமித்தமாக, सुरमञ्जर्याः - சுரமஞ்சரிக்கு, गुणमालया - குணமாலையோட, स्पर्धा - சண்டையானது, अभूत् - ஆச்சுது, तथाहि एकार्थस्पृहया- ஒரு அர்த்தமென்கிற வார்த்தையினாலே, अत्र - இவ்விடத்திலே, कस्य वा - எவனுக்குத்தான், स्पर्धा - சண்டையானது, न वर्द्धते - வர்த்திக்ககடவதல்ல. 16

பொருள் : - (நீராடுவதற்குப் பயன்படும்) நறுமணப்பொடியின் காரணமாகச் சுரமஞ்சரிக்கும் குணமாலைக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. ஒரே பொருளின் மீது விருப்பம் கொண்டுள்ள இருவரில், ஒருவர் அப்பொருளைப் பெற முயலும்போது போட்டி வளரத்தானே செய்யும் ?

मा भूत्पराजिता स्नाता नादेये वारिणीति वै ।
संगिराते स्म ते सख्यौ मात्सर्यात्किं न नश्यति ॥ 17

नादेये - நதியினுடைய சம்மந்தமான, वारिणि - ஜலத்திலே, पराजिता - தோற்றவள், स्नाता - ஸ்நானம் பண்ணுகிறவள், मा भूत् - ஆகவேண்டாம், इति - என்று, वै - ஸ்புடமாக, ते सख्यौ - அந்த ரெண்டு தோழிமார்களும்,

संगिराते स्म - ப்ரதிக்ஞை பண்ணினார்கள், तथाहि मात्सर्याय - மாத்சர்யத்தினின்றும், किं - என்ன ? नश्यति - கெடா நின்றது, न - அல்ல. 17

பொருள் : - பின்பு அத்தோழிமார் இருவரும் இவ்வாதத்தில் தோற்றவர் நதியில் ஜலக்ரீடை செய்யக்கூடாது என்று சபதம் செய்துகொண்டனர். பொறாமையினால் வாராத துன்பமும் உண்டோ ?

कन्ये प्राहिणुतां पश्चात्चेट्यौ स्वे निकटे सताम् ।
कुप्सितां कर्म किं किं वा मत्सरिभ्यो न रोचते ॥ 18

कन्ये - சுரமஞ்சரி குணமாலைகள், स्वे - தங்களுடைய, चेट्यौ - சேடிகைகளை, पश्चात् - பார்த்து, सतां - சத்புருஷர்களுடைய, निकटे - சமீபத்திலே, प्राहिणुतां - அனுப்பினார்கள், तथाहि कुप्सितं कर्म - குத்ஸிதமான, கர்மமானது, मत्सरिभ्यः - மாத்சர்யமானவர்கள் பொருட்டு, किं किं वा - என்னனென்னதான், न रोचते - ருசியாநின்றதல்ல.

பொருள் : - பிறகு அக்கன்னிகைகள் சான்றோர்களிடம் தங்கள் பணிப்பெண்களை அனுப்பினர். பொறாமை கொண்டவர் எவரும் தீச்செயலைச் செய்ய விரும்புகின்றனர்.

आस्थिषातामथागत्य चेट्यौ जीवककोविदे ।
अनवद्या सती विद्या लोके किं न प्रकाशते ॥ 19

अथ - பிற்பாடு, चेट्यौ - சேடிகைகள், आगत्य - வந்து, जीवककोविदे - ஜீவந்தரஸ்வாமியின் பொருட்டு, अस्थिषातां-

இருந்தார்கள், तथाहि लोके - லோகத்திலே, अनवद्या - தோஷமில்லாத, सति - ப்ரஸஸ்த்தமான, विद्या - வித்யை யானது, किं - என்ன ? प्रकाशते - பிரகாசியா நின்றது.[1] 19

*பொருள் : - அந்தப் பணிப்பெண்கள் அறிவாளியான ஜீவகனிடம் வந்தனர். அப்பழுக்கற்ற அறிவு இவ்வுலகில் எதைத்தான் கண்டுபிடிக்காது ?*

गुणवद्गुणमालायाश्चूर्णं निर्वर्ण्य सोऽभ्यधात् ।
पाण्डित्यं हि पदार्थानां गुणदोषविनिश्चयः ॥ 20[2]

गुणमालायाः - குணமாலையினுடைய, चूर्णं - சூர்ணத்தை, गुणवत् - குணமுள்ளதாக, निर्वर्ण्य - வர்ணித்து, सः - ஜீவந்தரனானவன், अभ्यधात् - சொன்னான். तथाहि पाण्डित्यं - பாண்டித்யமானது, पदार्थानां - பதார்த்தங்கள் இடையே गुणदोषविनिश्चयो हि - குணதோஷங்களை நிச்சயம் பண்ணுகிறதன்றோ. 20

*பொருள் : - ஜீவகன் இரு பொடிகளையும் கவனித்துப் பார்த்து, குணமாலை அனுப்பிய வாசனைப் பொடியே*

---

*1. சுண்ண நல்லன சூழ்ந்தறிந் தெங்களுக்*
*கண்ணல் கூறடி யேங்குறை யென்றலுங்*
*கண்ணிற் கண்டிவை நல்ல கருங்குழல்*
*வண்ண மாலையி னீரெனக் கூறினான். (சீவக சிந்தாமணி)*

*2. மற்றிம் மாநகர் மாந்தர்கனியாவரு*
*மூற்று நானியுங் கண்டு முணர்ந்திவை*
*பொற்ற கண்ணமெனப் புகழ்ந்தார் நம்பி*
*கற்ற தும் மவர் தங்களோடே கொலோ (சீவக சிந்தாமணி)*

சிறந்ததென்று கூறினான். பொருள்களின் குணதோஷங்களை அறிந்து கூறுவது அறிவுடைமையாகும்.

चेटी तु सुरमञ्जर्यास्तच्छ्रुत्वा रोषणाब्रवीत् ।
अन्यैरप्युक्तमुक्तं तैः किमध्यैष्ट भवानिति ॥ 21

तु - பின்னை, सुरमञ्जर्याः - சுரமஞ்சரியினுடைய, चेटी - சேடியானவள், तत् - அதை श्रुत्वा - கேட்டு, रोषणा - கோபத்தினாலே, अन्यैरपि - அன்யர்களாலேயும், उक्तं - சொல்லப்பட்டது. तैः - அவர்களோட, भवान् अध्येष्ट किं - அப்யாசம் பண்ணினாயோ, इति - என்று சொன்னாள். अब्रवीत् - சொன்னான். 21

பொருள் : - அதைக்கேட்ட சுரமஞ்சரியின் தோழி சினம்கொண்டு, "மற்றவர்களும் அப்படித்தான் கூறினர், நீங்கள் அவர்களோடு கல்வி பயின்றவரா" என்று, வினவினாள்.

चूर्णयोरलिभिः स्वामी गुणदोषावसाधयत् ।
निर्विवादविधिर्नो चेन्नैपुण्यं नाम किं भवेत् ॥ 22

स्वामी - ஜீவந்தர ஸ்வாமியானவன், चूर्णयोः - இரண்டு சூர்ணங்களுடைய, गुणदोषौ - குணதோஷங்களை, अलिभिः - வண்டுகளினாலே, असाधयत् - சாதிப்பித்தான், तथाहि निर्वादविधिः - விவாதமில்லாமல் பண்ணின விதியானது, नो चेत् - இல்லையாகில், नैपुण्यं नाम - நிபுணத்துவம் மென்கிறப்போ, किं भवेत् - ஏனாக்கடவது. 22

*பொருள் : - இரண்டு பொடிகளின் தன்மையையும் ஜீவந்தரன், வண்டுகள் முன் வைத்து, நிரூபித்தான். நுண்ணறிவு என்பது விவாதத்திற்கு அப்பாற்பட்டது. (விவாதம் செய்வதையே வீணாக்குவதாகும்)*

आकालिकतया दुष्टं चूर्णमन्यदवर्णयत् ।
न ह्यकालकृतं कर्म कार्यनिष्पादनक्षमम् ॥ 23

आकालिकतया - காலமில்லாத காலத்தில் உண்டானத்தினாலே, अन्यत् - அன்யமான, चूर्णम् - சுரமஞ்சரியுடைய சூர்ணத்தை, दुष्टं - பொல்லாததாக, अवर्णयत् - வர்ணித்தான், तथाहि अकालकृतं - காலமல்லாத காலத்தில் பண்ணப்பட்ட, कर्म - கர்மமானது, कार्य-निष्पादनक्षमं- கார்யத்தை முடிவிக்கிற சமர்த்தமானது, नहि - இல்லையன்றோ. 23

*பொருள் : - தகுந்த காலத்தில் செய்யப்படாத பொடி மற்றொன்று என்பதால் அது ஏற்கத்தகாது என்று சீவகன் கூறினான். காலம் தாழ்த்திச் செய்யும் செயலால் ஏற்படும் பயன் சரியாக அமைவதில்லை.*

कुमारादथ कुट्टन्यौ नुत्वा नत्वा च निर्गते ।
निर्विवादं वितन्वाना न स्तुत्याः केन भूतले ॥ 24

अथ - பிற்பாடு, कुमारात् - ஜீவந்தரனிடத்தினின்றும், कुट्टन्यौ - சேடிகைகள், नुत्वा - ஸ்தோத்திரம் பண்ணி, नत्वा च - நமஸ்கரித்தும், निर्गते - புறப்பட்டார்கள், तथा - அவ்வாறு, निर्विवादं - விவாதமில்லாததை, वितन्वानाः - விஸ்த்தரிக்கப்பட்டவர்கள், केन - எவனாலே, भूतले - பூமியிலே, न स्तुत्याः - ஸ்துதிக்கப்படுபவர்கள் அல்ல. 24

**பொருள் :** - பின்னர் சேடியர் இருவரும் ஜீவகனை வணங்கித் துதித்துவிட்டு, தம் தம் தலைவிகளிடம் வந்து ஜீவகன் கூறியதைத் தெரிவித்தனர். விவாதத்துக்கு இடமில்லாமல் எவனொருவன் தான் கூற வந்த கருத்தைத் தெளிவாகவும், ஏற்கும் வகையிலும் விளக்குகிறானோ, அவனே இவ்வுலகில் போற்றத்தக்கவன்.

तच्चासीत्सुरमञ्जर्या विरागस्यैव कारणम् ।
न ह्यत्र रोचते न्यायमीर्ष्यादूषितचेतसे ॥ 25

तच्च - அதுவும், सुरमञ्जर्याः - சுரமஞ்சரிக்கு, विरागस्यैव - வைராக்யத்திற்கே, कारणम् - காரணமானது, आसीत् - ஆச்சுது, तथाहि अत्र - இவ்விடத்திலே, ईर्ष्या - மாத்சர்யத்தினாலே, दूषितचेतसि - தூஷிக்கப்பட்ட மனதிலே, न्यायं - ந்யாயமானது, रोचते - ருசியாநின்றது, नहि - இல்லையன்றோ. 25

**பொருள் :** - ஜீவகன் கூறியதானது சுரமஞ்சரியின் வருத்தத்திற்கே காரணமாயிற்று, பொறாமையினால் கலக்கப்பெற்ற மனதில் நியாயமான சொல் நிலை பெறாதன்றோ?

प्रार्थिताप्यकृतस्नाना सत्वरं सुरमञ्जरी ।
न्यवर्तिष्ट महारोषादीर्ष्या हि स्त्रीसमुद्भवा ॥ 26

प्रार्थितापि - ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிற, सुरमञ्जरी - சுரமஞ்சரியானவளும், अकृतस्नाना - ஸ்னானம் பண்ணாதவளாய், सत्वरं - சீக்கிரமாக, महारोषात् - மஹா கோபத்தினின்றும், न्यवर्तिष्ट - திரும்பினாள், तथाहि - ஆகவே, ईष्या - மாத்சர்யமானது, स्त्री समुद्भवा हि - ஸ்த்ரியரிடத்திலே உண்டானதன்றோ. 26

பொருள் : - குணமாலை எவ்வளவோ வேண்டிக் கொண்டும், சுரமஞ்சரி ஆற்று நீரில் இறங்காமலே வீடு நோக்கிச் சென்றாள். பொறாமை என்பது பெண்ணிலிருந்து பிறந்ததன்றோ.

जीवकादपरान्नेक्षे पुरूषानिति संविदा ।
कन्यागृहमथ प्रापन्न हि भेद्यं मनः स्त्रियाः ॥ 27

जीवकन् - ஜீவகனைக் காட்டிலும், अपरान् - அன்யர்களான, पुरुषान् - புருஷர்களை, ईक्षे - பார்க்கிறது, न - இல்லை, इति - என்று, संविदा - ப்ரதிக்ஞையினாலே, कन्यागृहं - கன்யாமாடத்தை, अथ - பிற்பாடு, प्रापत् - அடைந்தாள், तथाहि स्त्रीयाः - ஸ்த்ரீகளுடைய, मनः - மனசானது, भेद्यं - பேதிக்கப்படுமது, नहि - இல்லையன்றோ.

பொருள் : - பின்பு, ஜீவகனைத் தவிர வேறு எவரையும் (கண்ணால்கூட) பார்ப்பதில்லை என்று சபதமிட்டு, கன்னிமாடத்தை அடைந்தாள் சுரமஞ்சரி. பெண்கள் ஒரு முடிவெடுத்தால் அவர்களது மனதை மாற்ற இயலாது.

सख्यां तथैव यातायां गुणमाला शुशोच ताम् ।
न ह्यनिष्टेष्टसंयोगवियोगाभ[1]मरून्तुदम् ॥ 28

सख्यां - சுரமஞ்சரியான தோழியானவள், तथैव - அப்படியே, यातायां - ஸ்திதி அடைந்துள்ளளவில், गुणमाला - குணமாலையானவள், शुशोच ताम् - துக்கித்தாள், तथाहि

---

1. वियोगाभ्यां

अनिष्टेष्टसंयोगावियोगाभं - அனிஷ்டசம்யோக இஷ்ட வியோகமானது, अरून्तुदम् - துக்கத்தைப் பண்ணாதது, नहि - இல்லையன்றோ, 28

பொருள் : - தோழி சென்றவுடன் குணமாலை அவளைக் குறித்து வருந்தினாள். தீமையைப் பெறுவதாலும், நன்மையை இழப்பதாலும், மிகுந்த துன்பம் உண்டாகுமன்றோ?

गन्धसिन्धुरतो भीतिरासीदथ पुरौकसाम् ।
विपदोऽपि हि तद्भीतिर्मूढानां हन्त बाधिका ॥ 29

अथ - பிற்பாடு, पुरौकसाम् - பட்டணத்து ஜனங்களுக்கு, गन्धसिन्धुरतः - மதயானையினின்றும், भीतिः - பயமானது, आसीत् - இருந்தது, विपदः अपि - விபத்தைக் காட்டிலும், तद्भीतिः - அதனால் ஏற்படும் அச்சம், मूढानां - மூடர்களுக்கு, बाधिका हि - பாதிக்கிறதன்றோ, हन्त - கெட்ட, கெட்ட.29

பொருள் : - பிறகு மதம் பிடித்த யானையைக் கண்டதால், மக்களுக்கு மிகுந்த அச்சம் ஏற்பட்டது. முட்டாள்களுக்கு விபத்தைக் காட்டிலும், விபத்து ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சமே மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தும்.

परिजनस्तु तं पश्यन्गुणमालामथात्यजत् ।
न हि सन्तीह जन्तूनामपाये सति बान्धवाः ॥ 30

तु - பின்னை, परिजनः - பரிவார ஜனமானது, तं - அதை, पश्यन् - பாராநின்றதாய்க்கொண்டு. गुणमालां - குணமாலையை, अथ - பிற்பாடு, अत्यजत् - விட்டது, तथाहि

जन्तूनां - ஜீவன்களுக்கு. अपायेसति - அபாயமானது உண்டாயுள்ளளவில், बान्धवाः - பந்துக்கள், इह - இவ்விடத்திலே, सन्ति - உண்டாகாநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 30

*பொருள் : - பணிப்பெண்கள் இதைக் கண்டதும் குணமாலையை விட்டு ஓடிப்போயினர். பிராணிகளுக்குத் துன்பம் நேர்ந்தபோது உறவினர் ஒருவரும் அருகில் இருக்கமாட்டார்கள்.*

कृत्वा तां पृष्टतो धात्री काचिदस्थाद्दयावहम् ।
हताया मय्यतः पूर्वे कन्येयं हन्यतामिति ॥ 31

काचित् - ஒருத்தி, धात्री - தாதியானவள், तां - குணமாலையை, पृष्टतः - ப்ருஷ்ட்டபாகத்தினின்றும், कृत्वा - பண்ணி, अतः पूर्वे - இதனின்றும் முந்தினாள், हतायां - கொல்லப்பட்டுள்ளளவில், इयं कन्या - இந்த கன்யகையானவள், हन्यतां - கொல்லப்படுமவள், इति - என்று, दयावहं - தயாவகமாக, अस्थात् - இருந்தாள். 31

*பொருள் : - ஒரு பணிப்பெண் மட்டும் இது என்னைக் கொன்றபின் இக்கன்னிகையைக் கொல்லட்டும் என்று தீர்மானித்து, குணமாலையைப் பின் நிறுத்தி, யானை முன்னே, தான் நின்றாள்.*

समदुःखसुखा एव बन्धवो ह्यत्र बान्धवाः ।
दूता एव कृतान्तस्य द्वन्द्वकाले पराङ्मुखाः ॥ 32

अत्र - இவ்விடத்தில், बान्धवाः - பந்துக்கள், सम दुःसुखा एव - சமான துக்க சுகத்தையுடைத்தானவர்களே, बान्धवो हि - பந்துக்களன்றோ. द्वन्द्वकाले - ஆபத்து காலத்திலே, पराङ्मुखाः - விமுகரானவர்கள், कृतान्तस्य - யமராஜனுடைய, दूता एव - தூதர்களே. 32

*பொருள் : - இன்பம் நேர்ந்த போதும், துன்பம் நேர்ந்த போதும், தன்னைப்போலவே பிறரையும் கருதுகின்றவரே உறவினராவர். துயர்ப்படும்போது விலகியிருப்பவர்கள் எமனுடைய தூதர்களேயாவர்.*

स्वामी परिणतं वीक्ष्य करिणं तं न्यवारयत् ।
स्वापदं न हि पश्यन्ति सन्तः पारार्थ्यतत्पराः ॥ 33

स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், परिणतं - மதத்தினாலே, तं करिणं - அந்த யானையை, वीक्ष्य - பார்த்து, न्यवारयत् - தடையிட்டான், तथाहि पारार्थ्यतत्पराः - பரப்ரயோஜனத்தை பண்ணுகிறதிலே தாத்பர்யத்தை உடையவர்களான, सन्तः - சத்புருஷர்கள், स्वापदं - தங்களுக்கு வருகிற ஆபத்தை, पश्यन्ति - பாராநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 33

*பொருள்:- ஜீவந்தரன், யானை மதம் கொண்டிருப்பதைக் கண்டு, அதனைத் தடுத்தான். பிறருக்கு உதவி செய்வதில் ஈடுபட்டுள்ள சான்றோர்கள் தங்களுக்கு வரும் தீமையைப் பொருட்படுத்துவதில்லை. 33*

यत्र क्वापि हि सन्त्येव सन्तः सार्वगुणोदयाः ।
क्वाचित्किमपि सौजन्यं नो चेल्लोकः कुतो भवेत् ॥ 34

यत्र क्वापि - யாரிடத்திலேயும், सार्वगुणोदयाः - சமஸ்த ஜீவன்களுக்கும் ஹிதமான குணோதயத்தை உடைய, सन्तः- சத்புருஷர்கள், सन्त्येव हि - உண்டாகாநின்றார்களன்றோ. तथाहि क्वाचित् - ஓரிடத்திலேயும், सौजन्यं - சஜ்ஜனத்துவமானது, किमपि - ஒன்றும், नोचेत् - இல்லையாகில், लोकः - ஜனமானது, कुतः - என்ன காரணத்தினின்றும், भवेत् - ஆகக்கடவது. 34

பொருள் : - யாவருக்கும் நன்மை செய்யக்கூடிய தன்மைகளைப் பெற்றவர்கள் எங்கேயாவது இருப்பதனால்தான் உலகம் இயங்கி வருகின்றது. எங்கேயோ நற்குணங்கள் அனைத்தும் படைத்த சான்றோர் இருப்பதனால்தான், எங்காவது சிறிது நன்மை பெற்ற மக்கள் இருக்கிறார்கள். இல்லையென்றால் உலகம் இயங்குமா?

परिवारोऽप्यथायासीदहंपूर्विकया स्वयम् ।
स्वास्थ्येह्यदृष्टपूर्वाश्च कल्पयत्येव बन्धुताम् ॥ 35

अथ - பிற்பாடு, परिवारोपि - பரிவாரமும், अहं पूर्विकया - நான் முந்தி என்கிறத்தினாலே, स्वयं - தான், अयासीत् - அடைந்தது, तथाहि स्वास्थ्ये - ஸ்வஸ்தமாய் இருந்துள்ள அளவில், अदृष्टपूर्वाश्च - ஒருகாலும் காணாத பேர்க்கும், बन्धुताम् - பந்துத்வத்தை, कल्पयन्त्येव हि - கல்ப்பியா நின்றார்களன்றோ. 35

பொருள் : - பிறகு தோழியர் குழாம் குணமாலையிடம் விரைந்து வந்தடைந்தது. ஒருவர் நல்ல நிலையில் இருக்கும்போது முன்பின் அறியாத நபர்களும் தாமே உறவினர்கள் என்று எண்ணுவார்கள் அன்றோ?

अन्योऽन्यदर्शनादासीत्कामः कन्याकुमारयोः ।
दुःखस्यानन्तरं सौख्यं ततो दुःखं हि देहिनाम् ॥ 36

कन्याकुमारयोः - கன்னிகைக்கும் குமாரனுக்கும் இடையேயான, अन्योन्यदर्शनात् - பரஸ்பரம் பார்த்துக்கொண்டதிலிருந்து, कामः - வாஞ்சையானது, आसीत् - ஆச்சுது, तथाहि - ஆகவே, देहिनाम् - ஜீவன்களுக்கு, दुःखस्य - துக்கத்தினுடைய, अनन्तरं - பிற்பாடு, सौख्यं - சௌக்யமானது, ततः - அந்த சுகத்தினின்றும் பிற்பாடு, दुःखं हि - துக்கமன்றோ. 36

பொருள் : - இப்போது ஒருவரையொருவர் சந்தித்ததால் குணமாலைக்கும் ஜீவகனுக்கும் காதல் ஏற்பட்டது. துன்பத்திற்குப்பின் இன்பமேற்படுவது இயற்கையன்றோ ? துன்பத்திற்குப் பிறகு ஏற்படும் இன்பமே, மற்றொரு துன்பத்திற்குக் காரணமாகிறது. (காதல் உணர்வுகள் துன்பத்தை ஏற்படுத்தும் என்பது பொருள்.)

अशान्तस्वान्तसन्तापा निशान्तं प्राप सा पुनः ।
नो चेद्विवेकनीरौघो रागाग्निः केन शाम्यति ॥ 37

अशान्तस्वान्तसन्तापा - சாந்தமில்லாத மனதினுடைய சந்தாபத்தையுடைய, सा - குணமாலையானவள், पुनः - பிற்பாடு, निशान्तं - க்ரஹத்தை, प्राप - அடைந்தாள். तथाहि विवेकनीरौघः - விவேகமான ஜல சமூஹமானது, नो चेत् - இல்லையாகில், रागाग्निः - ஆசையாகிற அக்னியானது, केन - எதனாலே, शाम्यति - உபசமமாகாநின்றது. 37

பொருள் : - பின்னர் மனக்குழப்பத்துடன் குணமாலை தனது இல்லத்தை அடைந்தாள். பகுத்தறிவென்னும் நீர் இல்லாவிடில், காதல் தீயை அணைப்பது எங்ஙனம் ? (எதனால் அணைக்க இயலும்?)

क्रीडाशुकं च प्राहैषीत्सविधे स्वामिनः पुनः ।
योग्यायोग्यविचारोऽयं रागान्धानां कुतो भवेत् ॥ 38

स्वामिनः - ஜீவந்தரஸ்வாமியினுடைய, सविधे - சமீபத்திலே, पुनः - பிற்பாடு, क्रीडाशुकं च - விளையாடுகிற கிளிப்பிள்ளையும், प्राहैषीत् - அனுப்பினாள், तथाहि रागान्धानां - ஆசையினாலே கண் தெரியாதவர்களுக்கு, अयं - இந்த, योग्यायोग्यविचारः - யோக்யாயோக்ய விசாரமானது, कुतः - என்ன காரணத்தினின்றும், भवेत् - ஆகக்கடவது. 38

பொருள் : - பின்பு அந்நங்கை ஜீவகனிடம் தூதாகத் தன் விளையாட்டுக் கிளியை அனுப்பினாள். காமத்தால் கலங்கியவர்களுக்கு, இது தக்கது இது தகாதது என்ற விகாரம் ஏற்படுமோ?

चाटुं प्रायुङ्क्त कीरोऽपि तं पश्यन्स्वेष्ट सिद्धये ।
एतादृशेन लिङ्गेन परलोको हि साध्यते ॥ 39

कीरोपि - கிளிப்பிள்ளையும், तं - ஜீவந்தரனை, पश्यन् - பாராநின்றதாய்க்கொண்டு, स्वेष्टसिद्धये - ஸ்வேஷ்ட்ட சித்தியின் பொருட்டு, चाटुं - வசனத்தை, प्रायुङ्क्त - பிரயோகித்து, तथाहि एतादृशेन - இந்த பிரகாரமான, लिङ्गेन - அடையாளத்திலே, परलोकः - பரலோகமானது, साध्यते हि - சாதிக்கப்படாநின்றதன்றோ. 39

பொருள் : - அக்கிளியும் அவனைப் பார்த்துக் கிள்ளை மொழியில் தன் விருப்பம் ஈடேறும் வண்ணம் பேசியது. இப்படிப்பட்ட வழியால்(காரணத்தால்) விண்ணுலகையும் அடையமுடியும் என்பது உறுதி.

विषयेषु समस्तेषु कामं सफलयन्सदा ।
गुणमालां जगन्मान्यां जीवयञ्जीवताच्चिरम् ॥ 40

समस्तेषु - சமஸ்தமான, विषयेषु - விஷயங்களிலே, कामं - சுகத்தை, सफलयन् - பலத்தோடு கூடினவனாய்க் கொண்டு, सदा - அனவரதமும், जगन्मान्यां - ஜகத்திற்கு பூஜ்யையான, गुणमालां - குணமாலையை, जीवयन् - ஜீவிப்பியாநின்றவனாய்க் கொண்டு, चिरं - நெடுங்காலம், जीवतात् - தானும் ஜீவிக்கக்கடவன். 40

பொருள் : - நற்குணங்களுக்கு இருப்பிடமானவளும், உலகத்தாரால் கொண்டாடத்தக்க வளுமான, குணமாலையை நீ மணந்து, அவளோடு கூடி எல்லா உலகியல் இன்பங்களையும் அடைந்து, வெகுகாலம் வாழ்வீராக ! என்றது அந்தக்கிளி.

इत्याशिषा कुमारोऽपि तत्संदेशाच्च पिप्रिये ।
इष्टस्थाने सति वृष्टिस्तुष्टये हि विशेषतः ॥ 41

इति - என்று, आशिषा - ஆசீர்வசனத்திலே, कुमारोऽपि - ஜீவந்தரகுமாரனும், तत्सन्देशाश्च - குணமாலையினுடைய ஓலையினின்றும், पिप्रिये - மிகவும் சந்தோஷித்தான், तथाहि

इष्टस्थाने - இஷ்ட்டஸ்தானத்திலே, सति - ப்ரஸஸ்த்தமான, वृष्टिः - வ்ருஷ்ட்டியானது, विशेषतः - விசேஷத்தினின்றும், तुष्टये हि - சந்தோஷத்தின் பொருட்டன்றோ. 41

*பொருள் : - இப்படிப்பட்ட ஆசி வழங்கும் தகவலால் சீவகன் மிகவும் மகிழ்ந்தான். விரும்புமிடத்தில் பொழியும் மழை சிறப்பான மகிழ்ச்சியைத் தரவல்லது.*

प्रतिसन्देशमप्येष कीराय प्रत्यपादयत् ।
प्रेक्षावन्तो वितन्वन्ति न ह्युपेक्षामपेक्षिते ॥ 42

प्रतिसन्देशमपि - மறு ஓலையையும், एषः - ஜீவந்தரனானவன், कीराय - கிளிப்பிள்ளையின் பொருட்டு, प्रत्यपादयत् - கொடுத்தான், तथाहि अपेक्षिते - வாஞ்சையுண்டாயுள்ளளவில், प्रेक्षावन्तः - புத்திமான்கள், उपेक्षां - உபேக்ஷை, वितन्वन्ति - விஸ்தரியாநின்றார்கள், नहि - இல்லையன்றோ. 42

*பொருள் : - ஜீவகன் பதில் தகவலையும் கிளியிடம் அளித்தான். அறிவாளிகள் தன்னிடம் வருபவர்களை அலட்சியப்படுத்துவதில்லை.*

मुमुदे गुणमालापि दृष्ट्वा पत्रेण पत्रिणम् ।
स्वस्यैव सकलो यत्नः प्रीतये हि विशेषतः ॥ 43

गुणमालापि - குணமாலையும், पत्रेण - ஓலையினாலே, पत्रिणं - கிளியை, दृष्ट्वा - கண்டு, मुमुदे - சந்தோஷித்தாள்,

तथाहि स्वस्यैव - தனக்கே, यत्नः - யத்னமானது, सफलः - பலத்தோடு கூடினது, विशेषतः - விசேஷத்தினின்றும், प्रीतये हि - ப்ரீதியின் பொருட்டன்றோ. 43

பொருள் : - குணமாலை கிளி கடிதத்தோடு வந்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தாள். ஒருவருக்கு தனது முயற்சி பயனளித்தால் மிகுந்த மகிழ்ச்சி உண்டாகுமன்றோ?

पितरावेतदाकर्ण्य मुमुदाते भृशं पुनः ।
दुर्लभो हि वरो लोके योग्यो भाग्यसमन्वितः ॥ 44

पितरौ - குணமாலை தகப்பனானவர்கள், एतत् - இத்தை, आकर्ण्य - கேட்டு, पुनः - பிற்பாடு, भृशं - மிகவும், मुमुदाते - சந்தோஷித்தார்கள், (तथाहि) लोके - லோகத்திலே, भाग्यसमन्वितः - பாக்யத்தோடுகூடி இருப்பானாய், योग्यः - யோக்யனாயிருக்கிற, वरः - மாப்பிள்ளையானவன், दुर्लभो - பெறுதற்கரிதன்றோ. 44

பொருள் : - குணமாலை ஜீவகனிடம் காதல் கொண்டிருப்பதைக் கேட்டறிந்த அவள் பெற்றோர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தனர். உலகில் சிறப்பையும், தகுதியையும் ஒருங்கே பெற்றிருப்பவன் அரிதானவன் அல்லவா ?

अथामुष्यायणौ कौचिन्नीतौ गन्धोत्कटान्तिकम् ।
न हि नीचमनोवृत्तिरेकरूपा स्थिता भवेत् ॥ 45

अथ - பிற்பாடு, अमुष्यायणौ - இவ்விருவரைச் சேர்ந்த कौचित् - இரண்டு பேர்கள், गन्धोत्कटान्तिकम् -

கந்தோத்கடனது சமீபத்தே, नीतौ - அடைவிக்கப் பட்டார்கள், तथाहि नीचमनोवृत्तिः - நீசமனோவர்த்தினை யானது, एकरूपं - ஒரே ப்ரகாரமாக, स्थिता - இருக்கிறதா, भवेत् - ஆகக்கடவது, नहि - இல்லையன்றோ. 45

*பொருள் :* - பின்னர் குணமாலையின் பெற்றோர் கந்தோத்கடன் மாளிகைக்குச் சென்று, தமது புதல்வி ஜீவகனிடம் காதல் கொண்டிருப்பதை அறிவித்து, அவன் கருத்தை உணர்ந்துவருமாறு இருவரைத் தூதனுப்பினார்கள். அவர்கள் தாழ்ந்த மனநிலை கொண்டவர்கள். ஏனெனில் தாழ்ந்தவர்களின் மனம் ஒரே நிலையில் இருப்பதில்லையே!

अनुमेने तयोर्वाक्यं श्रुत्वा गन्धोत्कटोऽपि सः ।
अदोषोपहतोऽप्यर्थः परोक्त्या नैव दूष्यते ॥ 46

तयोः - அந்த ரெண்டு பேர்களுடைய, वाक्यं - வசனத்தை, श्रुत्वा - கேட்டு, सः गन्धोत्कटोऽपि - அந்த கந்தோத்கட செட்டியும், अनुमेन - சம்மதித்தான், तथाहि अदोषोपहतः - தோஷத்தினாலே கெடுக்கப்படாத, अर्थः - அர்த்தமானது, हि - ஸ்புடமாக, परोक्त्या - பரருடைய யுக்தியினாலே, दूष्यते - தூஷிக்கப்படானென்றது, नैव - இல்லையே. 46

*பொருள் :* - அந்த இரண்டு பேர்களின் சொல்லைக் கேட்டு, கந்தோத்கடனும் குணமாலையை விவாகம் செய்து கொடுக்க அனுமதி கொடுத்தான். தாழ்ந்த மனநிலை கொண்டுள்ளவர்கள் கூறும் நற்செய்தி, தீமையை உள்ளடக்கியில்லாததால், அது அவர்களது மனநிலையால் மாசுபடுவதில்லை.

सुतां विनयमालायाः गुणमालां यथा विधि ।
दत्तां कुबेरमित्रेण परिणिन्येऽथ जीवकः ॥ 47

विनयमालायाः - விநயமாலையினுடைய, सुतां - புத்திரியான, कुबेरमित्रेण - குபேரமித்ரனாலே, दत्तां - கொடுக்கப்பட்டிருக்கிற, गुणमालां - குணமாலையை, यथाविधि - யதாவிதியாக, जीवकः - ஜீவகனானவன், अथ - பிற்பாடு, परिणिन्ये - விவாஹம் பண்ணினான். 47

इति श्रीमद्वादीभसिंहसूरि विरचिते क्षत्रचूडामणौ
गुणमालालम्भो नाम चतुर्थोलम्भः ॥

***பொருள் :*** *- பிறகு குபேரமித்திரன் வினயமாலையின் பெண்ணாகிய குணமாலையை விதிப்படி கொடுக்கவே ஜீவகன் அவளைத் திருமணம் செய்துகொண்டான்.*

குணமாலாலம்பம் முற்றிற்று



प[illegible]

[illegible]

பத்மாலம்பம்

अथ व्यूढामिमां मेने स [illegible]
प्रयत्नेन हि लब्धं [illegible] कारणम् ॥ 1 ॥

अथ - பிறபாடு, [illegible] अन्त - அந்த ஜீவந்தரகுமாரனானவன், ऊढां [illegible] இருக்கிற, इमां - இந்த குணமாலையை, अतिदुर्लभाम् - மிகவும் துர்லபமாக, मेने - எண்ணினான், तथाहि प्रयत्नेन - ப்ரயத்தனத்தினாலே, लब्धं - பெறப்பட்டது, प्रायः - மிகவும், स्नेहस्य - ஸ்நேகத்துக்குக் காரணமானது, स्यात् - ஆகக்கடவதன்றோ. 1

*பொருள் : - அப்பால் ஜீவகன், தான் மணந்து கொண்ட குணமாலையை, கிடைத்தற்கரியதோர் பொருளென நினைத்தான். ஒருவனுக்கு தான் முயற்சித்துப்பெற்ற பொருளானது மிக்க மகிழ்ச்சியைக் கொடுக்குமன்றோ ?*

**नादत्त कबलं दन्ती स्वामीकुण्डलताडितः ।**
**न हि सोढव्यतां याति तिरश्चां वा तिरस्कृतिः ॥ 2**

स्वामीकुण्डलताडितः - ஜீவந்தரஸ்வாமியினுடைய குண்டலத்தினாலே அடிப்பட்ட, दन्ती - யானையானது, कबलं - கபலத்தை, आदत्त - ஸ்வீகரித்து, न - இல்லை, तथाहि तिरश्चां वा - திரியக்குகர்களுக்குத்தான், तिरस्कृतिः - திரஸ்காரமானது, सोढव्यतां - சஹிக்கிறதை, याति - யடையாநின்றது, नहि - இல்லையன்றோ. 2

பொருள் : - ஜீவகன் குண்டலத்தால் அடித்து அவமானப் படுத்தியது முதல் காஷ்ட்டாங்காரனுடைய பட்டத்து யானையானது, ஆகாரமே உட்கொள்ளவில்லை. அவமானத்தை ஆறறிவற்ற பிராணியும் பொறுப்பதரிது.

काष्टाङ्गारस्तदाकर्ण्य चुकोप स्वामिने भृशम् ।
सर्पिष्पातेन सप्तार्चिरूदर्चिः सुतरां भवेत् ॥ 3

काष्टाङ्गारः - காஷ்ட்டாங்காரனானவன், तत् - அதை, आकर्ण्य - கேட்டு, स्वामिने - ஜீவந்தரஸ்வாமியின் பொருட்டு, भृशम् - மிகவும், चुकोप - கோபித்தான், तथाहि सर्पिष्पातेन - அந்த ப்ரஸித்தமான நெய்யினாலே, सप्तार्चिः - அக்னியானது, उदर्चिः- மேலே ஜ்வாலையையுடையது, सुतरां - மிகவும், भवेत् - ஆகக்கடவதன்றோ. 3

பொருள் : - இவ்விஷயத்தைக் காஷ்டாங்காரன் அறிந்ததும் ஜீவகனிடம் அளவற்ற கோபம் கொண்டான் நெய்யை வார்ப்பதால் நெருப்பு வளருமன்றோ ?

सङ्गादनङ्गमालाया विजयाच्च वनौकसाम् ।
वीणाविजयतश्चास्य कोपाग्निः स्थापितो हृदि ॥ 4

अनङ्गमालायः - அனங்கமாலையினுடைய, सङ्गात् - கூட்டுறவினின்றும், वनौकसाम् - வேடர்களுடைய, विजयाश्च - விஜயத்தினின்றும், वीणाविजयाश्च - வீணையிலே ஜயித்தத்தினின்றும், अस्य - காஷ்ட்டாங்காரனுக்கு, हृदि - மனதிலே, कोपाग्निः - கோபமாகிற அக்னியானது, स्थापितः - ஸ்தாபிக்கப்பட்டது.

பொருள் : - ஜீவகன் அனங்கமாலையை அடைந்திருந்ததாலும், வேடர்களை வென்றதாலும், வீணையில் வெற்றிபெற்றதாலும், காஷ்டாங்காரன் மனதில் கோபக் கணல் நிலைத்துவிட்டது.

गुणाधिक्यं च जीवानामाधेरेव हि कारणम् ।
नीचत्वं नाम किं नु स्यादस्ति चेद्गुणरागिता ॥ 5

नीचानां - நீசர்களுக்கு, गुणाधिक्यं च - குணாதிக்யமும், आधेरेव - துக்கத்துக்கு காரணம், हि - காரணமன்றோ, गुणरागिता - குணராகித்வமானது, अस्ति - உண்டாகாநின்றது, चेत् - ஆகில், नीचत्वं नाम - நீசத்வமென்கிற பேரானது, किं नु स्यात् - ஏனாக்கடவது. 5

பொருள் : - தாழ்ந்தவர்களிடம் உள்ள நற்குணங்களும் துயரத்துக்கு காரணமாகின்றது. நற்குணங்கள் மீது ஈடுபாடு கொண்டால், தாழ்மை என்பது எங்கு இருக்கும் ? (இருக்காது என்பது பொருள்)

उपकारोऽपि नीचानामपकाराय कल्पते ।
पन्नगेन पयः पीतं विषस्यैव हि वर्धनम् ॥ 6

नीचानां - நீசர்களுக்கு, उपकारोपि - உபகாரமும், अपकाराय - அபகாரத்தின் பொருட்டு, कल्पते - கல்ப்பிக்கப்படாநின்றது, तथाहि पन्नगेन - சர்ப்பத்தினாலே, पीतं - பானம் பண்ணப்பட்ட, पयः - பாலானது, विषस्यैव - விஷத்துக்கே, वर्द्धनं - வர்த்தனமன்றோ. 6

**பொருள் : - தாழ்ந்தவர்களுக்குச் செய்யும் உதவி, பதிலுக்குத் தீமையையே விளைவிக்கின்றது. பாலைக் குடித்த பாம்பிடம் நஞ்சுதான் அதிகரிக்கிறது.**

हस्तग्राहं ग्रहीतुं स कुमारं प्राहिणोद्बलम् ।
मूढानां हन्त कोपाग्निरस्थानेऽपि हि वर्धते ॥ 7

सः - காஷ்ட்டாங்காரனானவன், कुमारं - ஜீவந்தரகுமாரனை. हस्तग्राहं - கையிலே, ग्रहीतुं - ஸ்வீகரிக்கிறதாக, ग्रहीतुं - கிரஹிக்ரிறதுக்கு, बलम् - பலத்தை, प्राहिणोत् - அனுப்பித்தான். (तथाहि)मूढानां - மூடர்களுக்கு, अस्थानेऽपि - ஸ்தானமல்லாதத்திலேயும், कोपाग्निः - கோபாக்னியானது, वर्धते हि - வர்த்தியாநின்றதன்றோ. हन्त - கெட்ட கெட்ட. 7

**பொருள் : - ஆகவே காஷ்ட்டாங்காரன் ஜீவகனை விலங்கிட்டுப் பிடித்துவந்து சிறைப்படுத்தும்படி நால்வகைப் படையை அனுப்பினான். மூடர்களுக்குத் தகாத விடத்திலும் சினம் உண்டாகுமல்லவா.**

कुमारावसथं पश्चात् सैन्यं पर्यवारयत् ।
मृगाः किं नाम कुर्वन्ति मृगेन्द्रं परितः स्थिताः ॥ 8

कुमारवसथं - ஜீவந்தரகுமாரனுடைய மனையை, पश्चात्- பிற்பாடு, तत्सैन्यं - காஷ்ட்டாங்காரனுடைய சேனையானது, पर्यवारयत् - தடையிட்டது. तथाहि मृगेन्द्रं - சிம்ஹத்தை, परितः - சூழ, स्थिताः - நின்றிருக்கிற, मृगाः - மான்கள், किं नाम - என்னத்தைத்தான், कुर्वन्ति - பண்ணாநின்றார்கள். 8

பொருள் : - பின்னர், அந்தப்படை சீவகன் வசிக்குமிடத்தைச் சூழ்ந்துகொண்டது. மான்கள் சிங்கத்தை சூழ்ந்துகொண்டு என்ன செய்ய முடியும் ?

प्रारेभे स कुमारोऽपि प्रहर्तुं रोषतश्चमूम् ।
तत्वज्ञानजलं नो तेत्क्रोधाग्निः केन शाम्यति ॥ 9

स कुमारोपि - அந்த ஜீவந்தரகுமாரனும், रोषतः - கோபத்தினின்றும், चमूं - சேனையை, प्रहर्तुं - கொல்லுகிறதற்கு, प्रारेभे - துடங்கினான், (तथाहि) तत्वज्ञानजलं - தத்வஞான ஜலமானது, नोचेत् - இல்லையாகில், क्रोधाग्निः - கோபமாகிற அக்னியானது, केन - எதனாலே, शाम्यति - உபசமமாக நின்றது. 9

பொருள் : - இதனைக் கேள்வியுற்ற ஜீவகனும் மிகுந்த கோபம் கொண்டு அப்பொழுதே அவர்களுடன் போர்புரியத் தொடங்கினான். மெய்யறிவாகும் நீர் இராவிடின் கோபக்கணல் எதனால் அனையும்.

न्यरौप्सीत्तस्य संनाहमथ गन्धोत्कटः शनैः ।
अलङ्घ्यं हि पितुर्वाक्यमपत्यैः पथ्यकाङ्क्षिभिः ॥ 10

तस्य - ஜீவந்தரனுடைய, सन्नाहं - யுத்தசன்னாஹத்தை, अथ - பிற்பாடு, गन्धोत्कटः - கந்தோத்கடனானவன், शनैः - மெள்ள மெள்ள, न्यरौसीत् - தடையிட்டான், तथाहि पथ्यकांक्षिभिः - ஹிதத்தை வாஞ்சிக்கப்பட்டவர்களை, अपत्यैः - புத்ரர்களினாலே, पितुः - தகப்பனுடைய, वाक्यं - வசனமானது, अलङ्घ्यं हि - மீறப்போகாதன்றோ. 10

*பொருள் : - பிறகு கந்தோத்கடன் மெதுவாக அவனது ஆக்கிரமிப்பைத் தடை செய்தான். நல்லதை வேண்டும் மக்கள் தந்தை (ஆசிரியர்) சொல்லை மீறுவது இல்லை.*

पश्चाद्बद्धं पश्चादसौ गन्धोत्कटो व्यधात् ।
न हि वारयितुं शक्यं पौरुषेण पुराकृतम् ॥ 11

असौ गन्धोत्कटः - இந்த கந்தோத்கடனானன், अमुं - ஜீவந்தரனை, पश्चात् - பிற்பாடு, पश्चाद्बद्धं - பின்கட்டாக கட்டி, व्यधात् - பண்ணினான், तथाहि पौरुषेण - புருஷ பிரயத்தனத்தினாலே, पुराकृतं - பூர்வத்திலே, பண்ணப் பட்டதை, वारयितुं - தடையிடுகிறதற்கு, शक्यं - சமர்த்தமானது, नहि - இல்லையன்றோ. 11

*பொருள் : - பிறகு கந்ததோக்கடன் ஜீவந்தரனை கைது செய்ய எண்ணி கையைப் பின்கட்டாகக் கட்டி அழைத்துச் சென்றான். விதியின் வலிமையை மனித முயற்சி எங்ஙனம் வெல்ல இயலும் ?*

दृष्ट्वापि तं तथाभूतं हन्तुमाह स दुर्मतिः ।
सतां हि प्रहता शान्त्यै खलानां दर्पकारणम् ॥ 12

दुर्मतिः - துர்புத்தியான, सः - காஷ்ட்டாங்கார னானவன், तथाभूतं - அந்த பிரகாரமான, तं - ஜீவந்தரனை, दृष्ट्वापि - கண்டும், हन्तुं - கொல்லுகிறதுக்கு, आह - சொன்னான், तथाहि सतां - சத்புருஷர்களுடைய, प्रहता शान्त्यै - சாந்தியின் பொருட்டு, खलानां - துர்ஜனர்களுக்கு, दर्पकारणं हि - கர்வத்திற்கு காரணம் அன்றோ. 12

*பொருள் : - அவ்வாறு பின்புறமாகக் கைகள் கட்டப்பட்ட ஜீவகனைக் கெடுமதி கொண்ட காஷ்டாங்காரன், கொல்லுமாறு பணித்தான். சான்றோர்களின் பெரும் அமைதி தீயவர்கள் ஆணவத்துக்குக் காரணமாகி விடுகின்றது.*

काष्टाङ्गारं कुमारोऽयं गुरुवाक्येन नावधीत् ।
नहि प्रणावियोगेऽपि प्राज्ञैर्लङ्घ्यं गुरोर्वचः ॥ 13

अयं कुमारः - இந்த ஜீவந்தரகுமாரனானவன், काष्टाङ्गरं - காஷ்டாங்காரனை, गुरुवाक्येन - குருவினுடைய வசனத்தினாலே, अवधीत् - சொன்னான், न - இல்லை, तथाहि प्राज्ञैः - ஞானவான்களினாலே, प्राणवियोगेऽपि - பிராணன் போற வேளையிலேயும், गुरोः - குருவினுடைய, वचः - வசனமானது, लङ्घ्यं - மீறப்படுமது, नहि - இல்லையன்றோ.

*பொருள் : - தனது ஆசிரியனின் அருளுரைக்கேற்பச் சீவகன் காஷ்டாங்காரனைக் கொல்லவில்லை. உயிர்போகும் நேரத்திலும் அறிவாளிகள் ஆசிரியனின் சொல்லை மீறி நடப்பது இல்லை.*

यक्षेण तत्क्षणे स्वामी स्मृतेनादायि कृत्यवित् ।
सचेतनः कथं नु स्यादकुर्वन्प्रत्युपक्रियाम् ॥ 14

स्मृतेन - ஸ்மரிக்கப்பட்டிருக்கிற, यक्षेण - யக்ஷனாலே, तक्षणे - அந்த க்ஷணத்திலே, कृत्यवित् - யோகத்தை அறிந்திருக்கிற, स्वामी - ஜீவந்தர ஸ்வாமியானவன், आदायि - ஸ்வீகரிக்கப்பட்டான், तथाहि सचेतनः - ஞானத்தோடு கூடினவன், प्रत्युपक्रियाम् - ப்ரத்யுபகாரத்தை, अकुर्वन् - பண்ணாதவன், कथं नु - எப்படி, स्यात् - ஆகக் கடவன். 14

*பொருள் : - அந்தக் கணத்தில் (அவனால் உதவிபெற்ற) யட்சன் சீவகனின் நினைவில் தோன்றினான். அறிவுள்ள எவனும் செய்நன்றி மறக்க மாட்டான் அல்லவா ?*

अतिमात्रशुचा लोकः पुनरेवमचिन्तयत् ।
गुणज्ञो लोक इत्येषा किंवदन्ती हि सूनृतम् ॥ 15

लोकः - ஜனமானது, अतिमात्रशुचा - மிகுதியான துக்கத்தினாலே, पुनः - பிற்பாடு, एवं - இப்படி, अचिन्तयत् - சிந்திச்சுது, तथाहि लोकः - ஜனமானது, गुणज्ञः - குணத்தை யறிந்தது, इति - என்று, एषा किंवन्ती - இந்த லோக வார்த்தையானது, सूनृतं हि - சத்யமன்றோ. 15

*பொருள் : - (சீவகன் கைது செய்யப்பட்டதால்) மிக்க துயரடைந்த மக்கள் இவ்வாறு எண்ணினர். நல்ல தன்மைகளை அறிந்தது உலகம் என்ற மக்களின் கூற்று உண்மையன்றோ !*

अतिलोकमिदं शाठ्यं काष्टाङ्गारस्य दुर्मतेः ।
एतावदेव किं शाठ्यं स्वामिद्रोहादबिभ्यतः ॥ 16

दुर्मतेः - துர்புத்தியுடைய, काष्टाङ्गारस्य - காஷ்ட்டாங்காரனுக்கு, इदं शाठ्यं - இந்த கபடமானது, अतिलोकः - லோகத்தை மீறியது, स्वामिद्रोहात् - ஸ்வாமித்ரோகத்தினின்றும், अबिभ्यतः - பயப்படாத காஷ்டாங்காரனுக்கு, एतावदेव - இவ்வளவே, शाठ्यं किं - கபடமோ. 16

*பொருள் : - தனது அரசனுக்கே அஞ்சாமல் துரோகமிழைத்த கடுமனம் கொண்ட காஷ்டாங்காரனுக்கு*

இந்தச் சூழ்ச்சியானது அதைக் காட்டிலும் மிகக் கொடுமையானது மக்களின் கற்பனைகளுக்கு அப்பாற்பட்டது. அது அளவிடற்கரியது.

समवर्त्यपि दुर्वृत्तिरासीदणकभूपवत् ।
न ह्यसारतया हन्त सोऽपि गृह्णाति दुर्जनान् ॥ 17

समवर्त्यपि - யமராஜனும், अणकभूपवत् - குத்ஸித ராஜாவானவன்போல, दुर्बुत्तिः - துர்புத்தியினை உடைத்தானவன், आसीत् - ஆனான், सोपि - அந்த யமராஜனும், दुर्जनात् - துர்ஜனங்களை, आसारतया - சாரமில்லாததினாலே, गृह्णाति - க்ரஹியாநின்றான். 17

*பொருள் : - உயிர்களைக் கொல்லும் யமனிடத்திலும், தீயுவற்றில் ஈடுபாடு இருந்தது. பயனில்லாதபோதும், அவன் தீயவர்களையும் எடுத்துக் கொள்கிறான் அல்லவா ? அதாவது யமன் என்னும் தர்மதேவதையிடம் நற்குணங்களே நிரம்பியுள்ளன. இருப்பினும் அவன் தீயவர்களையும் கொன்று தன்னிடம் வரவழைத்துக் கொள்கிறான். இது வஞ்சகப்புகழ்ச்சி அணியாக, ஆசிரியரால் இவ்வாறு கூறப்படுகிறது. யமன் நல்லவனாக இருந்தாலும், தீயவர்களை அண்டியிருக்கிறான். இது அவனது தீக்குணத்தை வெளிப்படுத்துகிறது. தீயவர்களையும் கொன்று தன்னிடம் சேர்த்துக் கொள்வதால் , அவன் நல்லவனாக இருப்பினும், தீமையைச் சார்கிறான். நல்லவனாக இருக்கும் யமன் நல்லவர்களைத் தானே, தன்னிடம் கொண்டு வரவேண்டும் ? மாறாகத் தீயவர்களையும் கொல்லுவதால், யமன் தீயவர்களையும் விரும்புகிறான் என்ற பொருளாகிறது.*

वारि हंस इव क्षीरं सारं गृह्णाति सज्जनः ।
यथा श्रुतं यथारुच्यं शोच्यानां हि कृतिर्मता ॥ 18

सज्जनः - சான்றோர்கள், हंसः इव - அன்னம் போல, वारि-क्षीरं - தண்ணிர் மற்றும் பாலை (பரிசோதித்து), सारं - சுவையான பொருளை, गृह्णाति - எடுத்துக்கொள்கிறது, शोच्यानां - கவலைப்படுபவர்களுடைய, कृतिः - செயல், यथाश्रुतं - எதைக்கேட்கிறார்களோ, यथारुच्यं - எவ்வாறு உணர்ந்தார்களோ, मता हि - இருப்பதாக் கொள்ளப்படுகிறது.

***பொருள் :*** ***- சான்றோர்கள் அன்னப்பறவைபோல தீயதை விலக்கி நல்லதை ஏற்பர். ஆனால் மற்றவர்கள் தாங்கள் எதனைக் கேட்கிறார்களோ, அல்லது எதனை உணர்கிறார்களோ அதனை ஒட்டியே பொருட்களைப் பெறுகிறார்கள். (அவர்களுக்கு எது சரி, எது தவறு என்ற பகுத்தறிவு இல்லை)***

हेत्वन्तरकृतोपेक्षे गुणदोषप्रवर्तिते ।
स्यातामादानहाने चेत्तद्धि सौजन्यलक्षणम् ॥ 19

हेत्वन्तरकृतोपेक्षे - காரணாந்தரத்தினாலே பண்ணப்பட்ட உபேக்ஷையுடைய, गुणदोषप्रवर्तिते - குணதோஷங்களிலே ப்ரவர்த்திக்கிற, आदानहाने - ஸ்வீகரிக்கிறது விடுகிறதுகள், स्यातां - ஆகக்கடவதுகள், चेत् - ஆகில், तत् - அது, सौजन्यलक्षणं हि - ஸஜ்ஜனருடைய லக்ஷணமன்றோ. 19

***பொருள் :*** ***- வேறு காரணங்களைக்கொண்டு ஒரு பொருளைத் தீர்மானம் செய்யாமல், நல்ல தன்மைகளை மட்டுமே மனதில் கொண்டு, நற்குணங்களை ஏற்றலும், அதற்கு மாறாக உள்ள தன்மைகளைத் தவிர்ப்பதுமே நல்லோரின் இலக்கணம் ஆகும்.***

युक्तायुक्तवितर्केऽपि तर्करूढविधावपि ।
पराङ्मुखात्फलं किं वा वैदुष्याद्वैभवादपि ॥ 20

युक्तायुक्तवितर्केऽपि-யோக்யாயோக்ய விசாரத்திலேயும், तर्करूढविधावपि - விசாரரூடமாகப் பண்ணுகிறதிலேயும், पराङ्मुखात् -விமுகமாய் இருக்கிற, वैदुष्यात् - வித்தையினின்றும், वैभवादपि - விபவத்தினின்றும், फलं - பலமானது, किं वा - என்னதான். 20

*பொருள் : - இது தக்கது இது தகாதது, என்ற அறிவில்லாமல் எக்காரியத்தையும் செய்பவனுக்கு நூலறிவும், செல்வங்களும் வீணே.*

इत्यूहादाधिमापन्ने लोके तेऽपि युयुत्सवः ।
सखायः सानुजाः सर्वे पश्चात्तापमुपागमत् ॥ 21

इति - என்று, ऊहात् - ஊஹையினின்றும், आधिम् - துக்கத்தை, लोके - ஜனமானது, आपन्ने - அடைந்துள்ளளவில், सखायः - தோழிமார்களும், सानुजाः - தம்பிமாரோடு கூடியிருக்கிற, युयुत्सवः - யுத்தம் பண்ணவேணுமென்று இச்சையை உடையவர் களும், सर्वेपि - ஸமஸ்த்தர்களும், पश्चातापम् - பச்சாதாபத்தை, अपागमत् - அடைந்தார்கள். 21

*பொருள் : - என்று இவ்வாறு ஊகித்தறிந்து, மனவருத்தமடைந்த மக்கள், அவர்களும் போரிட விரும்பியவர்களாக, நண்பர்களோடும், உடன்பிறப்புக்கள் உடனும், கழிவிரக்கப்படத்துவங்கினர்.*

स्मरन्तौ मुनिवाक्यस्य सप्राणौ पितरौ स्थितौ ।
वितथे मुनिवाक्येऽपि प्रामाण्यं वचने कुतः ॥ 22

मुनिवाक्यस्य - முனி வாக்யத்தை, स्मरन्तौ - ஸ்மரியா நின்றிருப்பார்களான, पितरौ - தாய் தகப்பன் ஆவார்கள், सप्राणौ - பிராணன்களோடு, स्थितौ - இருந்தார்கள், तथाहि मुनिवाक्ये - முனி வசனமானது, वितथे - பொய்யா யுள்ளளவில், वचने - வசனத்திலே, प्रामाण्यम् - பிராமாண்ய மானது, कुतो हि - என்ன காரணத்தினின்றுமன்றோ. 22

**பொருள் : - முனிவரின் உபதேசத்தை நினைவு கூர்ந்தவுடன், அவனது (சீவகனது) பெற்றோர்கள் உயிருடன் அவன் முன் தோன்றினர். முனிவரது வாக்கியம் வீணாகிப்போனால் எந்த ஒரு சொற்றொடருக்கும் பொருள் என்பது இல்லை என்று ஆகிவிடும்.**

स्वामिनो नापि शोको वा प्रसादो वा तदाभवत् ।
किन्तु पूर्वकृतं कर्म भोक्तव्यमिति मानसम् ॥ 23

---

** விலங்கி வில்லும்பூம்பூனான் விழுச்சிறைப்பட்ட போழ்து*
*மலங் கலந்தாரினான்ந்தருஞ்சிறை விருத்த போழ்தும்*
*புலம்பலு மகிழ்வு நெஞ்சிற் பொலிதலுமின்றிப் பொன்னார்*
*துலங் கலந்துயர்ந்த தோளானூழ்வினை யென்று விட்டாள்.*
*(சீவக சிந்தாமணி)*

*திங்களைத் தெளித்திட்டன்ன பாற்கடற்றிரை செய்தண்ணீர்*
*வெங்கள் விடலர்ந்த கண்ணி விண்ணவனுரிமை தன்னான்*
*மங்கல வகையினாட்டி மணியனிகலங்கள் சேர்த்திப்*
*பங்கய நெடுங்கணானைப் பவித்திர குமரனென்றான்.*
*(சீவக சிந்தாமணி)*

*பிணிக்குவத் தகவயிற் பிறந்த நோய் கெடுத்*
*தணித்தகையும் யெனக்கருளி நோக்கினான்*
*கனிப்பெருங் குணத் தொகைக் காளை யென்றனன்.*
*மணிக் கலத் தகத்தமிர்தனைய மாண்பினான். (சீவக சிந்தாமணி)*

स्वामिः अपि - ஜீவந்தரஸ்வாமிக்கும், शोको वा - துக்கமானதுதான், प्रसादो वा - சந்தோஷமானதுதான், तदा - அப்பொழுது, अभवत् - ஆச்சுது, न - இல்லை, किन्तु - விசேஷமுண்டு, पूर्वकृतं - பூர்வத்திலே பண்ணப்பட்ட கர்மமானது, भोक्तव्यम् - அனுபவிக்கப்படுமது, इति - என்று मानसं - மனஸினுடைய அபிப்பிராயம். 23

*பொருள் : - ஜீவந்தரனுக்கு (அவன் கட்டப்பட்ட போது) துயரோ அல்லது இன்பமோ ஏற்படவில்லை. ஏனெனில் முன்வினைப்பயனை நுகரவேண்டுமென்பது அவனது எண்ணமாக விளங்கியது.*

अथ चन्द्रोदयाह्वानपर्वतस्थं स्वमन्दिरम् ।
यक्षेन्द्रः स्वामिनं नीत्वा कृतवानभिषेचनम् ॥ 24

अथ - பிற்பாடு, चन्द्रोदयाह्वानपर्वतस्थं - சந்திரோதயம் என்று பேரையுடைய பர்வதத்தில் இருக்கிற, स्वमन्दिरम् - தன்னுடைய கிரஹத்தை, यक्षेन्द्रः - யக்ஷேந்திரனானவன், स्वामिनं - ஜீவந்தரஸ்வாமியை, नीत्वा - அடைவித்து, अभिषेचनं - அபிஷேகத்தை, कृतवान् - பண்ணினான். 24

*பொருள் : - பிறகு (ஜீவகனால் முன்னர் உதவப்பட்ட) யட்சன், சந்திரோதயம் என்ற மலையிலுள்ள தனது மாளிகைக்கு ஜீவகனை அழைத்துச் சென்று, அங்கு அவனுக்கு மணிமுடி சூட்டினான்.*

विपच्च संपदे पुण्यात्किमन्यत्तत्र गण्यते ।
भानुर्लोकं तपन्कुर्याद्विकासश्रियमम्बुजे ॥ 25

पुण्यात् - புண்ணியத்தினின்றும், विपच्च - ஆபத்தும், संपदे - சம்பத்தின் பொருட்டு, तत्र - அவ்விடத்திலே, अन्यत् - மற்றொன்று, गण्यते - எண்ணப்படாநின்றது, किं - என்ன, तथाहि लोकं - லோகத்தை, तपन् - தபியாநின்ற, भानुः - சூர்யனானவன், अम्बुजे - தாமரையிலே, विकासिश्रियं- விகசிதமானது ஐச்வர்யத்தை, कुर्यात् - பண்ணக்கடவன். 25

*பொருள் : - நல்வினையால், தீமையும் நன்மை தரும். உலகத்தைத் தனது சுட்டெரிக்கும் கிரணங்களால் எரிக்கும் ஆதவன், தாமரை மலரை மட்டும் அழகுறச் செய்வது போல அது இருக்கிறது.*

पयोवार्धिपयः पूरैरभिषिच्यायमब्रवीत् ।
पवित्रोऽसि पवित्रं मां श्वानं यत्कृतानिति ॥ 26

पयोवार्धिपयः पूरैः - க்ஷீர சமுத்ர க்ஷீர ஜலங்களினாலே, अभिषिच्य - அபிஷேகத்தைப்பண்ணி, अयं - யக்ஷனானவன், श्वानं - நாயான, मां - என்னை, यत् - யாதொரு காரணத்தினின்றும், पवित्रं - பவித்ரனாக, कृतवान् - பண்ணினாய், पवित्रोऽसि - பவித்ரனாகா நின்றாய், इति - என்று, अब्रवीत् - சொன்னான். 26

*பொருள் : - ஜீவகனுக்குப் பாற்கடலின் பாலால் நன்னீராட்டி, இவ்வாறு கூறினான். "நாயான என்னை எந்த விதமான காரணமுமின்றிக் கருணைகொண்டு, தூய்மையானவனாக மாற்றினாய். இப்போது நீ தூய்மையடைந்துவிட்டாய்" என்று கூறினான்.*

कामरूपविधौ गाने विषहाने च शक्तिमत् ।
यक्षेन्द्रः स्वामिने पश्चान्मन्त्रत्रयमुपादिशत् ॥ 27

यक्षेन्द्रः - யக்ஷேந்திரனானவன், स्वामिने - ஜீவந்தரஸ்வாமியின் பொருட்டு, कामरूपविधौ - வாஞ்சிதரூப விதியிலேயும், गाने - பாடுகிறத்திலேயும், विषहाने च - விஷத்தை கெடுக்கிறத்திலேயும், शक्तिमत् - ஸாமாத்தியமான, मन्त्रत्रयं - மூன்று மந்திரத்தை, पश्चात् - பிற்பாடு, उपादिशत् - சொன்னான். 27

*பொருள் : - விரும்பிய உருவை எடுத்துக்கொள்ளுதல், இசைத்தல், நஞ்சை முறித்தல், ஆகிய மூன்றுக்கான மூலமந்திரங்களை ஜீவகனுக்கு யட்சன் உபதேசம் செய்தான்.*

एकहायनमात्रेण धुरि राज्ञां प्रवेक्ष्यसि ।
मोक्षस्यैव पवित्र त्वं पश्चादिति च सोऽब्रवीत् ॥ 28

पवित्र - வாராய் பவித்ரனே, त्वं - நீ, एकहायनमन्त्रेण - ஒரு அயன மாத்திரத்தினாலே, राज्ञां - ராஜாக்களிடையே, धुरि - பாரத்திலே, प्रवेक्ष्यसि - ப்ரவேசிக்கப்போனாய், पश्चात् - பிற்பாடு, मोक्षस्यैव - மோக்ஷத்தையுமடையாநின்றாய், इति च - என்றும், सः - யக்ஷனானவன், अवदत् - சொன்னான்.

*பொருள் : - பிறகு, "ஒரு அயனத்தில் (6 மாதத்தில்) நீ அரசனாக ஆகிவிடுவாய், நீ வீடுபேற்றைக் காட்டிலும் தூய்மையானவன்" என்று யட்சன் கூறினான்.*

तथा संभाव्यमानस्य स्वामिनस्तेन सन्ततम् ।
देशान्तरदिदृक्षा भूद्भाव्यधीनं हि मानसम् ॥ 29

तथा - அப்படி, तेन - யக்ஷனாலே, सन्ततम् - அனவரதம், संभाव्यमानस्य - சத்காரம் பண்ணப் பட்டிருக்கிற, स्वामिनः - ஜீவந்தரஸ்வாமிக்கு, देशान्तरदिदृक्षा- தேசாந்திரத்தை அடையவேணுமென்கிற வார்த்தை யானது, अभूत् - ஆச்சுது, तथाहि मानसम् - மனதினுடைய அபிப்பிராயமானது, भाव्यधीनं हि - வன்மத்துக்கு ஆதீனமன்றோ. 29

*பொருள் : - இவ்வாறு யட்சனால் எப்போதும் போற்றப் பட்ட ஜீவகன், வேறு நாட்டுக்குச் செல்ல வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. மனதில் ஏற்படும் ஆவல், பின்னால் வரப்போகும் நிகழ்ச்சிகளுக்குக் கட்டுப்பட்டதல்லவா ?*

मनीषितं हितान्वेषीमज्ञात्वा तस्य मनीषिणः ।
अनुमेने स देवोऽपि त्रिकालज्ञा हि निर्जराः ॥ 30

हितान्वेषी - ஹிதத்தைப் தேடப்பட்டிருக்கிற, स देवोऽपि - அந்த தேவனும், मनीषिणः - புத்திமானான, तस्य - ஜீவந்தரனுடைய, मनीषितं - வாஞ்சித்ததை, ज्ञात्वा - அறிந்து, अनुमेने - (அதேபோல்)எண்ணினான், तथाहि निर्जराः - தேவர்கள், त्रिकालज्ञा हि - மூன்று காலத்தையும் அறிந்தவர்கள் அன்றோ.

*பொருள் : - ஜீவகனுடைய விருப்பத்தை உணர்ந்த அந்த யட்சனும் அனுமதி அளித்தான். மூன்று காலங்களையும் அறிந்தவர்கள் தேவர்கள். ஆகவே, நடக்கப் போகும் நிகழ்ச்சிகளைப்பற்றி அந்த யட்சன் அறிந்திருந்தான்.*

इदं तया पथोदन्तमुपादिश्याथ संमतः ।
सुदर्शनेन सोऽयासीद्धितकृत्वं हि मित्रता ॥ 31

पथोदन्तः - மார்க்த்தினுடைய விருத்தாந்தத்தை, इदन्तया - இவ்வளவினாலே, उपदिश्य - சொல்லி, अथ - பிற்பாடு, सुदर्शनेन - சுதர்ஷன யக்ஷனாலே, सम्मतः - சம்மதப்பட்டிருக்கிற, सम - ஜீவந்தரனானவன், अयासीत् - அடைந்தான், तथाहि मित्रता - மித்ரத்துவமானது, हितकृत्त्वं हि - ஹிதத்தைப்பண்ணுகிறதன்றோ. 31

*பொருள் : - ஸுதர்சனன் என்னும் அந்த யட்சன் அவன் (ஜீவகன்) செல்லவேண்டிய வழியை அவனுக்கு விளக்கிக் கூறினான். ஜீவகனும் சுதர்சனன் சம்மதிக்க, தான் விரும்பிய நாட்டை அடைந்தான். நட்பு என்பது, நண்பனுக்கு எது ஏற்புடையதோ, அதைச் செய்வதாகும்.*

एकाकी व्यहरत्स्वामी निर्भयोऽयमितस्ततः ।
न हि स्ववीर्यगुप्तानां भीतिः केसरिणामिव ॥ 32

एकाकी - ஏகாகியான, निर्भयः - பயமில்லாமலிருக்கிற, अयं स्वामी - இந்த ஜீவந்தரஸ்வாமியானவன், इतस्ततः - இங்கு மங்கும் நின்றும், व्यहरत् - வ்யவகரித்தான். तथाहि केसरिणामिव - சிங்கங்களைப்போல, स्ववीर्यगुप्तानां - தங்களுடைய வீர்யங்களினாலே அடங்கி இருக்கிறவர்களுக்கு, भीतिः - பயங்கரமானது, नहि - இல்லையன்றோ. 32

*பொருள் : - ஜீவகன் இங்குமங்கும் அச்சமின்றி அலைந்தான். தங்களது வலிமையை அடக்கியாள்பவர்கள், சிங்கத்தைப்போன்று அச்சமின்றி விளங்குவார்கள்.*

एकाकिनोऽपि नोद्वेगो वशिनस्तस्य जातुचित् ।
विक्रिया हि विमूढानां संपदापल्लवादपि ॥ 33

एकाकिनोऽपि - ஏகாகியான, वशिनः - ஜீதேந்திரியனானவன், तस्य - ஜீவந்தரனுக்கும், जातुचित् - ஒருகாலும், उद्वेगः - ஊக்கமானது, न - இல்லை, तथाहि विमूढानां - மூடர்களுக்கு, संपदापल्लवादपि - சம்பத்தாபத்தினுடைய, विक्रियाहि - விகாரமன்றோ. 33

*பொருள் : - தனிமையில் இருந்து புலன்களை வென்ற ஜீவந்தரன் ஒருபோதும் உணர்ச்சிகளுக்கு அடிமையாகவில்லை. மூடர்களே, செல்வத்தாலும், அழிவாலும் பாதிக்கப்படுவார்கள்.*

अरण्ये क्वचिदालोक्य वनदावेन वारितान् ।
दह्यमानानसौ मह्यस्त्रातुमैच्छदनेकपान् ॥ 34

अरण्ये - காட்டில், क्वचित् - ஓரிடத்திலே, वनदावेन- காட்டுத்தீயினாலே, वारितान्-- தடைப்பட்டிருப்பதாய், दह्यमानान् - எரிக்கப்பட்டிருக்கிற, अनेकपान् - யானைகளை, असौ - இந்த ஜீவந்தரனானவன், आलोक्य - பார்த்து, मह्यः - அந்த பூமிகளை, त्रातुं - ரக்ஷிக்கிறதற்கு, ऐश्छत् - இச்சித்தான்.

*பொருள் : - காட்டில் ஏற்பட்ட காட்டுத்தீயில் அகப்பட்டு, எரிக்கப்படுகிற, யானைக்கூட்டத்தை, ஜீவந்தரன் கண்டான். அவன் அவைகளைக் காக்க விரும்பினான்.*

धर्मो नाम कृपामूलः सा तु जीवानुकम्पनम् ।
अशरण्यशरण्यत्वमतो धार्मिकलक्षणम् ॥ 35

धर्मो नाम - தர்மமென்கிற பேறானது, कृपामूलः - க்ருபையை ஜலமாக உடையது, तु - பின்னை, सा - அந்த க்ருபையானது, जीवानुकम्पनम् - ஜீவனிடத்தில்

அனுகம்பையானது, अतः - இது காரணத்தினின்றும், अशरण्य शरण्यत्वं - சரணமில்லாதபேருக்கு, சரண்யத்துவமானது, धार्मिकलक्षणम् हि - தார்மீக லக்ஷணமன்றோ. 35

*பொருள் : - அறத்துக்கு அடிப்படை கருணை. அது உயிர்களின் துயரைக் கண்டு தான் துயர்ப்படுவதாகும். அடைக்கலமற்றோர்க்கு அடைக்கலமளிப்பதே அறவோனின் இலக்கணம்.*

ववृषुर्वारिदास्तत्र तावतैव सगर्जिताः ।
सुकृतीनामहो वाञ्छा सफलैव हि जायते ॥ 36

तत्र - அந்த வனத்திலே, तावतैव - அவ்வளவினாலேயே, सगजिताः - இடிகளோடு கூடியிருக்கிற, वारिदाः - மேகங்கள், ववृषुः - வர்ஷிச்சுதுகள், तथाहि सुकृतीनां - புண்யவான்களுக்கு, वाञ्छा - வார்த்தையானது, सकलैव - பலத்தோடு கூடினதாகவே, जायते हि - உண்டாகாநின்றதன்றோ, अहो - ஆச்சரியம். 36

*பொருள் : - அங்கு அப்போதே மேகங்கள் இடிகளால் கர்ஜித்தவாறு மழையைப் பொழிந்தன. சான்றோர்களின் விருப்பம் நிச்சயமாக நிறைவேறுகிறது.*

अनेकपानसौ वीक्ष्य रक्षितानतृपत्तराम् ।
स्वयं त्वासीत्समः स्वामी स्वस्य बन्धविमोक्षयोः ॥ 37

रक्षितान् - ரக்ஷிக்கப்பட்டிருக்கிற, अनेकपान् - யானைகளை, असौ - ஜீவந்தரனானவன், वीक्ष्य - பார்த்து,

त्तरां अतृपत्तराम् - மிகவும் சந்தோஷித்தான், स्वामी - ஜீவந்தரஸ்வாமியானவன், स्वस्य - தன்னுடைய, बन्धविमोक्षयोः - பந்தவிமோக்ஷங்களிலே, स्वयञ्च - தானும், समः - ஸமானமானவன், आसीत् - ஆனான். 37

**பொருள் : - ஜீவகன், தான் காஷ்டாங்காரனால் பிடிக்கப்பட்டு விடுவிக்கப்பட்டபோது எந்த மனநிலையில் இருந்தானோ, அதே மனநிலையை, யானைகள் தீயினின்று தப்பிவிட்டன என்பதைக் கண்டவுடன், அடைந்தான்.**

संपदापद्वये स्वेषां समभावा हि सज्जनाः ।
परेषां तु प्रसन्नाश्च विपन्नाश्च निसर्गतः ॥ 38

सज्जनाः - சஜ்ஜனர்கள், स्वेषां - தங்களுடைய, संपदापद्वये - சம்பதாபதத்வயத்திலே, संभवा हि - சமான பரிஸ்ரமத்தையுடைத்தானவர்களன்றோ, तथाहि तु - விசேஷமுண்டு, परेषां - துர்ஜனங்களுக்கு, प्रसन्नाश्च - சந்தோஷங்களும், विपन्नाश्च - துக்கங்களும், निसर्गतो हि - ஸ்வபாவத்தினின்றுமன்றோ. 38

**பொருள் : - சான்றோர்கள் செல்வம் வந்தபோதும், துயர் வந்தபோதும் ஒரே மனநிலையைக் கொண்டவர்களாக இருப்பார்கள். மற்றவர்கள் மகிழ்ச்சியாகவோ அல்லது துயருற்றவர்களாகவோ, இருவேறு மனநிலைகளை வெளிப்படுத்துவர்.**

ततस्तस्माद्विनिर्गत्य तीर्थस्थानान्यपूजयत् ।
सदसत्वं हि वस्तूनां संसर्गादेव दृश्यते ॥ 39

ततः - பிற்பாடு, तस्मात् - அங்கிருந்து, विनिर्गत्य - புறப்பட்டு, तीर्थस्थानानि - தீர்த்தஸ்தானங்களை, अपूजयत् - பூஜித்தான், तथाहि वस्तूनां - வஸ்த்துக்களுடைய, संसर्गादेव - சம்சர்க்கத்தினின்றுமே, सदसत्वं - சதசத்வமானது, दृश्यते हि- காணப்படாநின்றதன்றோ. 39

*பொருள் : - பிறகு அங்கிருந்து வெளியேறி வெவ்வேறு புனிதத்தலங்களுக்குச் சென்று வழிபட்டான். பொருட்களுக்கு நல்லவை, கெட்டவை என்ற அடைமொழிகள் சேர்க்கையினால் மட்டுமே ஏற்படுகின்றன.*

अथ संभावयामास यक्षी सा धर्मरक्षिणी ।
धर्ममूर्तिममुं तत्र सम्यक्कशिपुदानतः ॥ 40

अथ - பிற்பாடு, धर्मरक्षिणी - தர்மத்தை ரக்ஷிக்கிறவளான, सायक्षी - அந்த யக்ஷீ தேவதையானவள், धर्ममूर्ति - தர்மமூர்த்தியான, अमुं - இவனை, तत्र - அவ்விடத்திலே, कशिपुदानतः - ஆஹாரதானத்தினின்றும், सम्यक् - நன்றாக, संभावयामास - சம்பாவனைப் பண்ணினாள்.

*பொருள் : - பிறகு அங்கு இருந்த அறம் காக்கும் யட்சி, அந்த அறத்தின் உருவமான ஜீவந்தரனுக்கு, நல்ல உணவளிப்பதன் வாயிலாக, அவனைக் கௌரவித்தாள்.*

दैवतेनापि पूज्यन्ते धार्मिकाः किं पुनः परैः ।
अतो धर्मरताः सन्तु शर्मणे स्पृहयालवः ॥ 41

दैवतेनापि - தேவதையினாலேயும், धार्मिकाः - தார்மிகர்கள், पूज्यन्ते - பூஜிக்கப்படாநின்றார்கள், परैः -

அன்யர்களினாலே, किं पुनः - சொல்லவேணுமோ, अतः - இது காரணத்தினின்றும், शर्मणे - சுகத்தின் பொருட்டு, स्पृहयालवः- வாஞ்சிக்கப்பட்டவர்கள், धर्मरताः - தர்மத்திலே, तात्पर्य - தாத்பர்யத்தை உடைத்தானவர்கள், सन्तु - ஆகக்கடவர்கள்.

பொருள் : - அறத்தின் வழி வாழ்வோர் இறைவனாலும் போற்றப்படுகின்றனர். ஆகவே இன்பத்தைப் பெற அறத்தில் ஈடுபாடு கொள்க.

ततः पल्लवदेशस्थां चन्द्राभाख्यां क्रमात्पुरीम् ।
भेजे शुभनिमित्तेन सनिमित्ता हि भाविनः ॥ 42

ततः - பிற்பாடு, पल्लवदेशस्थां - பல்லவமென்கிற தேசத்திலே இருக்கிற, चन्द्रभाख्या - சந்த்ராபமென்னும் பேரையுடைய, पुरीं - நகரத்தை, क्रमात् - க்ரமத்தினின்றும், शुभनिमित्तेन - சுபநிமித்தத்தினாலே, भेजे - அடைந்தான். तथा भाविनः - வருகிறதுகள், सनिमित्ता हि - நிமித்தங்களோடு கூடினதுகளன்றோ. 42

பொருள் : - பிறகு முறையாக சந்திரபா என்றழைக்கப்படும் பல்லவ நாட்டின் ஒரு நகரை, நற்சகுனங்களுடன் ஜீவந்தரன் அடைந்தான் . நல்வினை கொண்டவர்கள் நன்நிமித்தங்களை எப்போதும் கொண்டிருப்பவர்.

राज्ञो धनपतेः पुत्रीमहिदष्टामजीवयत् ।
निर्हेतुकान्यरक्षा हि सतां नैसर्गिको गुणः ॥ 43

धनपतेः - தனபதி என்று பேரையுடைய, राज्ञः - ராஜாவினுடைய, अहिदष्टां - ஸர்ப்பத்தினாலே

கடிக்கப்பட்டிருக்கிற, पुत्रीं - புத்திரியை, अजीवयत् - ஜீவிக்கப்பண்ணினான், तथा सतां - சத்புருஷர்களுக்கு, निर्हेतुकान्यरक्षा - காரணமில்லாமல், மிகவும் அன்ய ரக்ஷையானது, नैसर्गिकः - ஸ்வபாவமான, गुणो हि - குணமன்றோ. 43

*பொருள் : - அரசன் தனபதியின் மகள் பாம்பால் தீண்டப்பட்டாள். அவளை ஜீவந்தரன் உயிர்ப்பித்தான். காரணமில்லாமலேயே பிறரைக் காப்பது சான்றோரின் உடன் பிறந்த தன்மை.*

लोकपालस्तदालोक्य तज्ज्येष्ठस्तमपूजयत् ।
प्राणप्रदायिनामन्या न ह्यस्ति प्रत्युपक्रिया ॥ 44

तज्ज्येष्ठः - அவளுடைய தமையனான, लोकपालः - லோகபாலனானவன், तत् - அதை, आलोक्य - பார்த்து, तं - ஜீவந்தரனை, अपूजयत् - பூஜித்தான், तथाहि - அப்படியன்றோ, प्राणप्रदायिनां - பிராணன்களைக் கொடுக்கிறவர்களுக்கு, प्रत्युपक्रिया - ப்ரத்யுபகாரமானது, अन्या - மற்றொன்று, अस्ति - உண்டாகாநின்றது, नहि - இல்லையன்றோ. 44

*பொருள் : - அவளது உடன்பிறந்தான் உலோகபாலன் என்பான் அதனைக் கண்டு, அவனைப் போற்றி வணங்கினான். உயிர் கொடுத்தவர்க்கு இதற்குப் பதிலாக எந்த ஒரு நன்றிக்கடன்தான் இருக்க முடியும் ?*

पूज्या अपि स्वयं सन्तः सज्जनानां हि पूजकाः ।
पूज्यत्वं नाम किं नु स्यात्पूज्यपूजाव्यतिक्रमे ॥ 45

स्वयं - தான், पूज्या अपि - பூஜ்யர்களுமான, सन्तः - சத்புருஷர்கள், सज्जनानां - ஸஜ்ஜனர்களுக்கு, पूजका हि - பூஜ்யர்களன்றோ, तया पूज्यपूजाव्यतिक्रमे - பூஜைப் பண்ணிக் கொள்கிரவனும், பூஜையென்கிற பேருமில்லாமல் இருந்துள்ளளவில், पूज्यत्वं नाम - பூஜ்யத்வம் என்கிற பேறானது, किं नु स्यात् - என்னவாகக்கடவது. 45

*பொருள் : - தாம் போற்றத்தக்கவராக இருப்பினும், அவர்கள் சான்றோர்களைப் போற்ற வேண்டும். போற்றத்தக்கவர்களைப் போற்றாமலிருக்கும்போது போற்றுதல் என்பது ஒன்று இருக்கவேஇருக்காது.*

प्राज्ञेषु प्रह्वतावश्यमात्मवश्योचिता मता ।
प्रह्वतापि धनुष्काणां कार्मुकस्येव कामदा ॥ 46

प्राज्ञेषु - ஞானவான்களிடங்களிலே, प्रह्वता - வணக்கமானது, अवश्यं - நிச்சயமாக, आत्मवश्योचिता - தங்கள் வசமாகிற யோக்யமானது, मता - உடன்பட்டது, तथा धनुष्काणां - வில்லுகளுடைய, प्रह्वतापि - வணக்கமும், कार्मुकस्य - வில்லுக்காரங்களுக்கு, कामदा इव - வாஞ்சித்தத்தை கொடுக்கிறது போல. 46

*பொருள் : - அறிவாளிகளை வணங்குதல் என்பது புலனடக்கத்தைக் குறிக்கும் அது எப்படி என்றால் வளைக்கப்பட்ட வில்லே, வில்லாளிகளுக்கு விரும்பியதை அளிப்பது போல. (அறிவளிகளை வணங்குதல் அறிவாளிகளை மேலும் அறிவாளிகள் ஆக்கும். வில் வளைந்தால் அம்பு வைக்கும் குறி சரியாக, அதனை வளைப்பவனின் வசமாகும்)*

वपुर्वीक्षणमात्रेण निरणाय्यस्य वैभवम् ।
वपुर्वक्ति हि माहात्म्यं दौरात्म्यमपि तद्विदाम् ॥ 47

वपुर्वीक्षणमात्रेण - சரீரத்தைக் கண்ட மாத்திரத்தினாலே, अस्य - ஜீவந்தரனுடைய. वैभवम् - விபவமானது, निरणायि - நிச்சயம் பண்ணப்பட்டது, तथा वपुः - சரீரமானது, माहात्म्यम् - மாஹாத்மியம், दौरात्म्यमपि - துராத்மஸ்வரூபமுமான, तद्विदाम् - அந்த இரண்டு பிரகாரத்தையும், वक्ति हि - சொல்லா நின்றதன்றோ. 47

*பொருள் : - ஜீவந்தரன் உடலைக் கண்ட உடனேயே, அவனது உயர்வு தீர்மானிக்கப்பட்டது. உடலே ஒருவனுடைய உயர்வையோ அல்லது தாழ்வையோ, அதனைப் பற்றி அறிந்தவர்களுக்குக் காண்பித்துக் கொடுத்துவிடும்.*

अर्धराज्यं च कन्यां च पार्थिवः स्वामिने ददौ ।
पात्रतां नीतमात्मानं स्वयं यान्ति हि संपदः ॥ 48

पार्थिवः - ராஜாவானவன், स्वामिने - ஜீவந்தரஸ்வாமியின் பொருட்டு, अर्धराज्यं च - பாதி ராஜ்யத்தையும், कन्यां च - கன்யகையினையும், ददौ - கொடுத்தான், तथाहि पात्रतां - பாத்ரத்வத்தை மீதம் அடைந்திருக்கிற, आत्मानं - தன்னை, स्वयं - தானே, संपदः - சம்பத்துக்கள், यान्तिः - அடையாநின்றதுகளன்றோ. 48

*பொருள் : - பாதி அரசையும், தனது மகளையும் அரசன் ஜீவந்தரனுக்கு அளித்தான். தானே உயர்வை எட்டியவர்களுக்கு செல்வங்கள் தாமே சென்றடையும்.*

तिलोत्तमासुतां पश्चाल्लोकपाल समर्पिताम् ।
पर्यणैष्टीत्पवित्रोऽयं पद्माख्यां तां यवीयसीम् ॥ 49

पवित्रः - பவித்ரனான, अयं - ஜீவந்தரனானவன், तिलोत्तमां सुतां - திலோத்தமையினுடைய புத்திரியான, पश्चात् - பிற்பாடு, लोकपालसमर्पिताम् - லோகபாலனாலே கொடுக்கப்பட்டிருப்பாளாய், यवीयसीं - யௌவனையான, पद्माख्यां - பத்மா என்னும் பேரையுடைய, तां - அவளை, पर्यणैष्टीत् - விவாஹம் பண்ணினான். 49

इति श्रीमद्वादीभसिंह सूरि विरचिते क्षत्रचूडामणौ
पद्मालम्भो नाम पञ्चमो लम्भः ॥

***பொருள் : - பிறகு, உலோகபாலனால் அளிக்கப்பட்ட திலோத்தமையின் புதல்வியாகிய, அவனது இளைய சகோதரியான, பத்மா என்பவளை புனிதமான ஜீவந்தரன் மணந்தான்.***

பத்மாலம்பம் முற்றிற்று





சரபோஜி மன்னர் II
(1798-1832)

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்

உலகப் புகழ்பெற்ற அறிவுக் களஞ்சியமாகவும் அரும் பொருட்கள் உறைவிடமாகவும் கல்விக் கோயிலாகவும் திகழ்ந்து வருகிறது இந்நூலகம். தொட்டனைத் தூறும் மணற்கேணியாய் நூல் ஆர்வலர்களுக்கும், அறிஞர் பெருமக்களுக்கும் கற்றனைத்தூறும் அறிவுக் செல்வமளிக்கும் கவின் பெரும் கல்விக்கோயிலாகத் திகழ்கிறது. இந்நூலகத்தில் காணப்படும் கலை நுட்ப வேளைபாடுகளையும் ஆர்வத்துடன் அரிதின் முயன்று திரட்ப்பட்ட மதிப்புயர் பண்மொழி பழைய புத்தகங்களையும் அரிய கைளெழுத்துச் சுவடிகளையும் பார்வையாளர்கள் மிகவும் வியந்து போற்றுகின்றனர். உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து அறிஞர்கள் தாம் விரும்பிய பொருண்மையில் ஆய்வு மேற்கொள்ள அரிய கருத்துக்களைத் தன்னகத்தே அருமையுறக் கொண்டிருப்பதால் இநநூலகம் நோக்கி வந்தவண்ணம் உள்ளனர். புவியினுக்கு அணிசேர் பன்மொழி பனை ஓலைச் சுவடிகளையும், காகிதச் சுவடிகளையும் வெரிதும் பெற்றுள்ள இப்பெரு நூலகம் இலக்கியத் தடத்தின் தனித் திறம் வாய்ந்ததாகத் திகழ்ந்து வருகின்றது.